26. Among those,
ṉ [and] ṉ are also properly followed
by the seven [sounds] *k*, *c*, *ñ*, *p*, *m*, *y* [and] *v*.

27. The single consonants *ñ*, *n*, *m*, *v*
may indeed be followed by the consonant *y*.

28. After the single consonant *m*, *v* also appears.

29. After the single consonants *y*, *r*, *ḻ*,
the initial sounds and *ṅ* also appear.

30. When pointing out the situation of the consonants,
all [consonant] sounds cxcept *r* [and] *ḻ*
can be followed by themselves.

31. *a*, *i*, *u*, these three are demonstratives.

32. *ā*, *ē*, *ō*, those three are interrogatives.

33. Scholars say that vowels and consonants
have their quantity increased [and such
lengthening is described] in books on
vocal and instrumental music.

Translated by
KAMIL ZVELEBIL.
Journal of Tamil studies page 45
International Institute of Tamil Studies
Madras-20-India. (1972)

## சுருக்க விளக்கம்

அகத்-அகத்திணையியல்
அகம்-அகநானூறு
அவி-அவிநயம்
இடை-இடையியல்
இல-கொத்து-இலக்கணக் கொத்து
இளம்-இளம்பூரணர், இளம்பூரணம்
இல-வி.-இலக்கண விளக்கம்
உயிர், உயிர்மயங்-உயிர்மயங்கியல்
உரி-உரியியல்
உருபி-உருபியல்
உவம-உவமவியல்
எச்ச-எச்சவியல்
எழு, எழுத், எழுத்து-எழுத்ததிகாரம்
க.பதி-கனகசுந்தரம் பிள்ளை பதிப்பு
கள-களவியல்
கற்பு-கற்பியல்
கிளவி-கிளவியாக்கம்
குறள்-திருக்குறள்
குற்றிய-குற்றியலுகரப் புணரியல்
சப்தமணி-சப்தமணி தருப்பணம்
சி.பதி-சிதம்பரம்பிள்ளை பதிப்பு
சிலப், சிலம்பு-சிலப்பதிகாரம்
சு.வே-சுவடி வேறுபாடு
செய்-செய்யுளியல்
சொல்-சொல்லதிகாரம்
தைத்-ப்ரா-தைத்ரீய பிராதிசாக்கியம்
தொல்-தொல்காப்பியம்
தொகை-தொகைமரபு
தொன்-தொன்னூல் விளக்கம்
நச்-நச்சினார்க்கினியம்
நன்-நன்னூல்
நாலடி-நாலடியார்
நூன்-நூன்மரபு

நேமி-நேமிநாதம்
பிங்-பிங்கலம்
பிறப்-பிறப்பியல்
புணரி புணரியல்
புள்ளி-புள்ளிமயங்கியல்
புறத்-புறத்திணையியல்
புறம்-புறநானூறு
பெயர்-பெயரியல்
பேரா-பேராசிரியர்
பொருள். பொருள்-பொருளதிகாரம்-பொருளியல்
மரபு-மரபியல்
மலைபடு-மலைபடுகடாம்
மாற மாறன்-மாறனலங்காரம்
முத்து-முத்துவீரியம்
மெய்-மெய்ப்பாட்டியல்
மொழி-மொழிமரபு
யா.வி-யாப்பருங்கல விருத்தி
வேற்றுமை-வேற்றுமையியல்
வேற்று.மய-வேற்றுமை மயங்கியல்
விளி-விளிமரபு
வினை-வினையியல்
வீர-வீரசோழியம்






# தொல்காப்பியம்—எழுத்ததிகாரம்

(உரைவளம்)

## நூன்மரபு

### 1. எழுத்துகளின் வகையும் பெயரும்

எழுத்தெனப் படுப
அகர முதல் னகரவிறுவாய்
முப்பஃ தென்ப
சார்ந்துவரல் மரபின் மூன்றலங் கடையே.

**இளம்பூரணர்**

இவ்வதிகாரம் என்நுதலி எடுத்துக் கொள்ளப்பட்டதோ வெனின், அதிகாரம் நுதலியதூஉம் அதிகாரத்தினது பெயர் உரைப்பவே அடங்கும். அதிகாரம் என்ன பெயர்த்தோவெனின், எழுத்ததிகாரம் என்னும் பெயர்த்து; எழுத்துணர்த்தினமை காரணத்திற் பெற்ற பெயர் என உணர்க.

எழுத்து எனைத்து வகையான் உணர்த்தினாரோவெனின், எட்டுவகையானும், எட்டிறந்த பலவகையானும் உணர்த்தினா ரென்பது. அவற்றுள்,

எட்டு வகையாவன: எழுத்து இனைத்தென்றலும், இன்ன பெயரவென்றலும், இன்ன முறைமைய வென்றலும், இன்ன அளவின வென்றலும், இன்ன பிறப்பின வென்றலும், இன்ன

[1]புணர்ச்சிய வென்றலும், இன்ன வடிவின வென்றலும், இன்ன தன்மைய வென்றலும். [2]எனவே, அவற்றுள் தன்மையும் வடிவும் ஆசிரியர் தாம் உணருவரெனினும், நமக்கு [3]உணர்த்தல் அருமையின் ஒழிந்த ஆறுமே இதனுள் உணர்த்தினார் என உணர்க.

இனி எட்டிறந்த பல வகையாவன: உண்மைத் தன்மையும், குறைவும், கூட்டமும், பிரிவும், மயக்கமும், மொழியாக்கமும், நிலையும், இனமும், ஒன்று பலவாதலும், திரிந்ததன் திரிபது வென்றலும், பிறிதென்றலும், அதுவும் பிறிதும் என்றலும், நிலையிற்றென்றலும், நிலையா தென்றலும், நிலையிற்று நிலையா தென்றலும், இன்னோரன்னவும் என இவை. இவை யெல்லாம் ஆமாறு மேல் வந்த வழிக் கண்டு கொள்க.

இவ்வதிகாரத் திலக்கணம் கருவியும் செய்கையும் என இரு வகைத்து. அவற்றுள், கருவி புறப்புறக் கருவியும், புறக் கருவியும், அகப்புறக்கருவியும், அகக் கருவியும் என நான்கு வகைப்படும். செய்கை புறப்புறச் செய்கையும், புறச்செய்கையும், அகப்புறச் செய்கையும், அகச் செய்கையும் என நான்கு வகைப் படும். நூன்மரபும் பிறப்பியலும் புறப் புறக்கருவி; மொழிமரபு புறக் கருவி; புணரியல் அகப் புறக்கருவி.

எகர வொகரம் பெயர்க்கீ றாகா
முன்னிலை மொழிய வென்மனார் புலவர் (உயிர்மயங்-70)

என்றாற் போல்வன அகக்கருவி.

எல்லா மொழிக்கும் உயிர்வரு வழியே
உடம்படு மெய்யின் உருபுகொளல் வரையார் (புணரி-38)

என்றாற் போல்வன புறப்புறச் செய்கை.

லனவென வரூஉம் புள்ளி முன்னர்த்
தநவென வரிற் றனவா கும்மே (தொகை மரபு 7)

என்றாற் போல்வன புறச் செய்கை.

உகரமொடு புணரும் புள்ளி யிறுதி
யகரமும் உயிரும் வருவழி யியற்கை (தொகை மரபு 21)

என்றாற் போல்வன அகப்புறச் செய்கை.

தொகைமரபு முதலிய ஓத்தினுள், இன்ன ஈறு இன்னவாறா மெனச் செய்கை கூறுவன வெல்லாம் அகச் செய்கை.

---

சுவடி வேறுபாடு : 1 புணர்ச்சியன 2 என இவை 3 உணர்தல்.

இவ்வோத்து என்னுதலிற்றோவெனின், அதுவும் அதன் பெயர் உரைப்பவே அடங்கும். இவ்வதிகாரத்தாற் சொல்லப்படும் எழுத்திலக்கணத்தினை ஓராற்றால் தொகுத்துணர்த்துதலின் நூன்மரபு என்னும் பெயர்த்து. இதனுட் கூறுகின்ற இலக்கணம் மொழியிடை (நின்ற) எழுத்திற்கன்றித் தனிநின்ற வெழுத்திற் கெனவுணர்க.

[1] இத்தலைச் சூத்திரம் என்னுதலிற்றோவெனின், எழுத்துக் களது பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இதன் பொருள்): எழுத்தெனப்படுப—எழுத்தென்று சிறப் பித்துச் சொல்லப்படுவன, அகரமுதல்னகர இறுவாய் முப்பஃ தென்ப—அகரமாகிய முதலை[2]யுடையனவும் னகரமாகிய இறு வாயினை [3]யுடையனவுமாகிய [4]முப்பதென்று [5]சொல்லுப (ஆசிரியர்), சார்ந்துவரல் மரபின் மூன்று அலங்கடை—சார்ந்து வருதலாகிய இலக்கணத்தினையுடைய மூன்றும் [6]அல்லாத விடத்து.

மூன்றும் ஆனவிடத்து முப்பத்துமூன்று என்று சொல்லுப என்றவாறு.

எடுத்துக் காட்டு : அ—ஆ—இ—ஈ—உ—ஊ—எ ஏ—ஐ— ஒ—ஓ—ஔ; க்—ங்—ச்—ஞ்—ட்—ண்—த்—ந்—ப்—ம்—ய்—ர்—ல்— வ்—ழ்—ள்—ற்—ன் எனவரும்.

எனப்படுப என்ற சிறப்பான், அளபெடையும் உயிர்மெய்யும் வரிவடிவும் சிறப்பில்லா எழுத்தாகக் கொள்ளப்பட்டன. அ ஆ என்பன பெயர்; முறை, அம்முறை, தொகை [7]முப்பது; அவற்றுள், அகரம் தானும் இயங்கித் தனிமெய்களை யியக்குதற் சிறப்பான் முன்வைக்கப்பட்டது. னகாரம் [8]வீடுபேற்றிற்குரிய ஆண்பாலை யுணர்த்துதற் சிறப்பான் [9]பின்வைக்கப்பட்டது.

---

சு.வே: 1. இவற்றுள் இத்தலைச்
2, 3 உடையனவாகிய
4. முப்பஃதென்று
5. சொல்லுவர்
6. அல்லா
7. முப்பத்துமூன்று
8. வீடுபேற்றிற்கேற்ற
9. பின்னர்

தொகை (யென்பது) தொகையுள் தொகையும், தொகையுள் வகையும், தொகையுள் விரியும், வகையுள் தொகையும், வகையுள் வகையும், வகையுள் விரியும், விரியுள் தொகையும், விரியுள் வகையும், விரியுள் விரியும் என ஒன்பது வகைப்படும்.

எழுத்தென்பது தொகையுள் தொகை; முப்பதென்பது அதன் வகை; முப்பத்துமூன்றென்பது அதன் விரி. முப்பதென்பது வகையுள் தொகை; முப்பத்துமூன்றென்பது அதன்வகை; அளபெடை தலைப்பெய்து நாற்பதென்பது அதன் விரி. முப்பத்து மூன்று என்பது விரியுள் தொகை; நாற்பதென்பது அதன் வகை; உயிர்மெய் தலைப்பெய்து இருநூற்றைம்பத்தாறென்பது அதன் விரி. செய்யுளின்பம் நோக்கி வகரம் நீக்கிப் பகரம் இடப்பட்டது. அகரமுதல் னகர இறுவாய் [1]என்ன, இருபெயரொட்டாகு பெயரான் முப்பதன்மேல் நின்றன.

நச்சினார்க்கினியர்

இவ்வதிகாரம் என்ன பெயர்த்தோவெனின், எழுத்திலக்கணம் உணர்த்தினமை காரணத்தான் எழுத்ததிகாரம் என்னும் பெயர்த்து. எழுத்தை உணர்த்திய அதிகாரம் என விரிக்க. அதிகாரம்—முறைமை.

எழுத்து உணர்த்துமிடத்து எனைத்து வகையான் உணர்த்தினாரோவெனின், எட்டுவகையானும் எட்டிறந்த பலவகையானும் உணர்த்தினார் என்க.

எட்டு வகைய என்பார் கூறுமாறு:—எழுத்து இனைத்தென்றலும், இன்ன பெயரின வென்றலும், இன்ன முறையின வென்றலும், இன்ன அளவின வென்றலும், இன்னபிறப்பின வென்றலும், இன்ன புணர்ச்சியின வென்றலும், இன்ன வடிவின வென்றலும், இன்ன தன்மையின வென்றலும் ஆம். இவற்றுள் தன்மையும் வடிவும் நமக்கு உணர்த்தலாகாமையின் ஆசிரியர் ஈண்டு உரைத்திலர். ஏனைய இதனுட் பெறுதும்.

எழுத்து இனைத்தென்றலைத் தொகை வகை விரியான் உணர்க. முப்பத்து மூன்று என்பது தொகை. உயிர் பன்னிரண்டும் உடம்பு பதினெட்டும் சார்பிற்றோற்றம் மூன்றும் அதன் வகை. அளபெடையேழும் உயிர்மெய் இருநூற்றொருபத்தாறும் அவற்றொடு கூட்டி இருநூற்றைம்பத்தாறெனல் விரி.

1. என, என்பன.

இனி எழுத்துக்களது பெயரும் முறையும் தொகையும் இச் சூத்திரத்தாற் பெற்றாம். வகை ஔகார விறுவாய் (எழு. 8) என்பதனானும், னகார விறுவாய் (எழு. 9) என்பதனானும், அவைதாங் குற்றியலிகரங் குற்றியலுகரம் (எழு. 2) என்பத னானும் பெற்றாம். விரி குன்றிசை மொழிவயின் (எழு. 41) என்பதனானும் புள்ளியில்லா (எழு. 17) என்பதனானும் பெற்றாம்.

அளவு, அவற்றுள் அ இ உ (எழு. 3) என்பதனானும் ஆ ஈ ஊ (எழு. 4) என்பதனானும், மெய்யின் அளபே (எழு. 11) என்பதனானும், அவ்வியல் நிலையும் (எழு. 12) என்பத னானும் பெற்றாம்.

பிறப்பு பிறப்பியலுட் பெற்றாம்.

புணர்ச்சி உயிரிறு சொன்முன் (எழு. 107) என்பதனானும் அவற்றுள் நிறுத்த சொல்லின் (எழு. 108) என்பதனுனும் பிறவாற்றானும் பெற்றாம்.

இனி எட்டிறந்த பல்வகைய என்பார் கூறுமாறு: எழுத்துக் களது குறைவும், கூட்டமும், பிரிவும், மயக்கமும், மொழி யாக்கமும், நிலையும், இனமும், ஒன்று பலவாதலும், திரிவதன் திரிபு அது என்றலும், பிறிதென்றலும், அதுவும் பிறிதும் என்றலும், நிலையிற்றென்றலும், நிலையாதென்றலும், நிலையிற்றும் நிலை யாதும் என்றலும் இன்னோரன்ன பலவுமாம்.

குறைவு அரையளபு குறுகல் (எழு. 13), ஓரளபாகும் (எழு. 58) என்பனவற்றாற் பெற்றாம்.

கூட்டம் மெய்யோடியையினும் (எழு. 10) புள்ளியில்லா (எழு. 11) என்பனவற்றாற் பெற்றாம்.

பிரிவு மெய்யுயிர் நீங்கின் (எழு. 139) என்பதனாற் பெற்றாம்.

மயக்கம் டறலள (எழு 23) என்பது முதலாக மெய்ந்நிலை சுட்டின் (எழு. 30) என்பது ஈறாகக் கிடந்தனவற்றாற் பெற்றாம்.

மொழியாக்கம் 'ஓரெழுத்தொரு மொழி (எழு. 45) என்பதனாற் பெற்றாம், அவ்வெழுத்துக்களை மொழியாக்கலின்.

நிலை பன்னீருயிரும் (எழு 59) உயிர்மெய் அல்லன (எழு60) உயிர் ஔ (எழு 69) ஞணநமன (எழு. 78) என்பன. இவற்றான் மொழிக்கு முதலாம் எழுத்தும் ஈறாம் எழுத்தும் பெற்றாம்.

இனம், வல்லெழுத்தென்ப (எழு. 19) மெல்லெழுத்தென்ப (எழு. 20) இடையெழுத்தென்ப (எழு. 21) ஔகார விறுவாய் (எழு. 8) னகார விறுவாய் (எழு. 9) என்பனவற்றாற் பெற்றாம். இவற்றானே எழுத்துக்கள் உருவாதலும் பெற்றாம். இவ்வுருவாகிய ஓசைக்கு ஆசிரியர் வடிவு கூறாமையுணர்க. இனி வரிவடிவு கூறுங் கால் மெய்க்கே பெரும்பான்மையும் வடிவு கூறுமாறுணர்க.

ஒன்று பலவாதல், எழுத்தோரன்ன (எழு. 141) என்பதனாற் பெற்றாம்.

திரிந்ததன் திரிபதுவென்றல், தசரம் வருவழி (எழு. 369) என்பதனானும் பிறாண்டும் பெற்றாம்.

பிறிதென்றல், மகரவிறுதி (எழு. 310) னகார வீறு (எழு. 332) என்பனவற்றாற் பெற்றாம்.

அதுவும் பிறிதும் என்றல், ஆறனுருபின் அகரக் கிளவி (எழு, 115) என்பதனாற் பெற்றாம்.

நிலையிற்றென்றல், நிறுத்த சொல்லின் ஈறாகு (எழு. 108) என்பதனாற் பெற்றாம்.

நிலையாதென்றல், நிலைமொழியது ஈற்றுக்கண்ணின்றும் வருமொழியது முதற்கண்ணின்றும் புணர்ச்சி தம்முள் இலவாதல். அது மருவின் தொகுதி (எழு. 111) என்பதனாற் பெற்றாம்.

நிலையிற்றும் நிலையாதும் என்றல், குறியதன் முன்னரும் (எழு. 226) என்பதனாற் கூறிய அகரம் இராவென் கிளவிக் ககர மில்லை (எழு. 22) என்பதனாற் பெற்றாம்.

இக்கூறிய இலக்கணங்கள் கருவியும் செய்கையும் என இரு வகைய.

அவற்றுட் கருவி புறப்புறக் கருவியும் புறக் கருவியும் அகப் புறக் கருவியும் அகக் கருவியும் என நால்வகைத்து. நூன்மரபும் பிறப்பியலும் புறப்புறக் கருவி. மொழிமரபு புறக்கருவி, புணரியல் அகப்புறக் கருவி. எகர ஒகரம் பெயர்க் கீறாகா (எழு. 272) என்றாற் போல்வன அகக் கருவி.

இனிச் செய்கையும், புறப்புறச் செய்கையும் புறச்செய்கையும் அகப்புறச் செய்கையும் அகச் செய்கையும் என நால்வகைத்து. எல்லாமொழிக்கும் உயிர் வருவழியே (எழு. 140) என்றாற் போல்வன புறப்புறச்செய்கை. லனவென வருஉம் புள்ளிமுன்னர்

(எழு. 146) என்றாற் போல்வன புறச்செய்கை. உகரமொடு புணரும் புள்ளியிறுதி (எழு. 163) என்றாற் போல்வன அகப்புறச் செய்கை. தொகை மரபு முதலிய ஒத்தினுள் இன்ன வீறு இன்ன வாறு முடியுமெனச் செய்கை கூறுவனவெல்லாம் அகச்செய்கை. இவ்விகற்பமெல்லாம் தொகையாக வுணர்க.

இவ்வோத்து என்னுதலிற்றோ வெனின், அதுவும் அதன் பெயர் உரைப்பவே அடங்கும்.

இவ்வோத்து என்ன பெயர்த்தோவெனின், இத் தொல்காப்பியம் என்னும் நூற்கு மரபாந் துணைக்கு வேண்டுவனவற்றைத் தொகுத்து உணர்த்தினமையின் நூன்மரபு என்னும் பெயர்த் தாயிற்று.

நூல் என்றது நூல் போறலின் ஒப்பினாயதோர் ஆகுபெயராம். அவ்வொப்பாயவாறென்னையெனின், குற்றங்களைந்து எஃகிய பன்னுனைப் பஞ்சிகளையெல்லாங் கைவன் மகடூஉத் தூய்மையும் நுண்மையும் உடையவாக ஓரிழைப் படுத்தினாற் போல வினையின் நீங்கி விளங்கிய அறிவ (மரபியல் 69) னாலே வழுக் களைந்து எஃகிய இலக்கணங்களையெல்லாம் முதலும் முடிவும் மாறுகோளின்றாகவும், தொகையினும் வகையினும் பொருண்மை காட்டியும், உரையும் காண்டிகையும் உள்நின்றகலவும், ஈரைங் குற்றமும் இன்றி, ஈரைந்தழகு பெற, முப்பத்திரண்டு தந்திர வுத்தியொடு புணரவும்,

ஒருபொருள் நுதலிய சூத்திரத் தானும்
இனமொழி கிளந்த வோத்தி னானும்
பொதுமொழி கிளந்த படலத் தானும்
மூன்றுறுப் படக்கிய பிண்டத் தானும் (செய். 166)

ஒரு நெறிப்படப் புணர்க்கப்படூஉந் தன்மையுடைமையான் என்க. மரபு, இலக்கணம், முறைமை, தன்மை என்பன ஒரு பொருட் கிளவி.

ஆயின் நூல் என்றது ஈண்டு மூன்றதிகாரத்தினையு மன்றே? இவ்வோத்து மூன்றதிகாரத்திற்கும் இலக்கணமாயவா றென்னை யெனின், எழுத்துக்களது பெயரும் முறையும் இவ்வதிகாரத்திற் கும் செய்யுளியற்கும் ஒப்பக் கூறியது. ஈண்டுக் கூறிய முப்பத்து மூன்றனைப் பதினைந்தாக்கி ஆண்டுத் தொகை கோடலில் தொகைவேறாம். அளவு செய்யுளியற்கும் இவ்வதிகாரத்திற்கும்

ஒத்த அளவும் ஒவ்வா அளவும் உளவாகக் கூறியது. குறிற்கும் நெடிற்கும் கூறிய மாத்திரை இரண்டிடத்திற்கும் ஒத்த அளவு. ஆண்டுக் கூறுஞ் செய்யுட்கு அளவு கோடற்கு ஈண்டைக்குப் பயன் தாராத அளபெடை கூறியது ஒவ்வா அளவு. அஃது அள பிறந் துயிர்த்தலும் (எழு. 33) என்னும் சூத்திரத்தோடு ஆண்டு மாட்டெறியு மாற்றான் உணர்க. இன்னுங் குறிலும் நெடிலும் மூவகையினமும் ஆய்தமும் வண்ணத்திற்கும் இவ்வதிகாரத்திற் கும் ஒப்பக் கூறியன. குறைவும் இரண்டற்கும் ஒக்கும். கூட்டமும் பிரிவும் மயக்கமும் இவ்வதிகாரத்திற்கே உரியனவாகக் கூறியன அம்மூவாறும் (எழு. 22) என்னும் சூத்திரம் முதலியனவற்றான் எழுத்துக்கள் கூடிச் சொல்லாமாறு கூறுகின்றமையின் சொல்லதி காரத்திற்கும் இலக்கணம் ஈண்டுக் கூறினாராயிற்று. இங்ஙனம் மூன்றதிகாரத்திற்கும் இலக்கணங் கூறுதலின் இவ்வோத்து நூலி னது இலக்கணங் கூறியதாயிற்று. நூலென்றது தொல்காப்பியம் என்னும் பிண்டத்தை. இவ்வோத்திலக்கணங்கள் எழுத்துக்களது பெயரும் முறையும் தொகையும் அளவும் குறைவும் கூட்டமும் இனமும் மயக்கமும் ஆம். ஏனைய இவ்வதிகாரத்துள் ஏனை யோத்துக்களுள் உணர்த்துப.

அற்றேல் அஃதாக, இத்தலைச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், எழுத்துக்களது பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) எழுத்தென்று சிறப்பித்துச் சொல்லப்படுவன அகர முதல் னகர ஈறாகக் கிடந்த முப்பதென்று சொல்லுவர் ஆசிரியர்; சார்ந்து வருதலைத் தமக்கு இலக்கணமாகவுடைய மூன்றும் அல் லாத இடத்து என்றவாறு.

எனவே அம்மூன்றும் கூடியவழி முப்பத்துமூன்றென்ப. அ- ஆ- இ- ஈ- உ- ஊ- எ- ஏ- ஐ- ஒ- ஓ- ஔ- க்- ங்- ச்- ட்- ண்- த்- ந்- ப்- ம்- ய்- ர்- ல்- வ்- ழ்- ள்- ற்- ன் எனவரும்.

எனப்படுப என்று சிறப்பித்துணர்த்துதலான் அளபெடையும் உயிர்மெய்யும் இத்துணைச் சிறப்பில; ஓசையுணர்வார்க்குக் கருவியாகிய வரிவடிவும் சிறப்பிலா எழுத்தாகக் கொள்ளப்படும்.

அகரம் முதலாதல் ஆரியத்திற்கும் ஒக்குமேனும் ஈண்டுத் தமிழ் எழுத்தே கூறுகின்றாரென்பது உணர்தற்கு னகர இறுவாய் என்றார்.

படுப, படுவ. படுபவென்பது படுத்தலோசையால் தொழிற் பெயராகக் கூறப்படும். பகரமும் வகரமும் ஈண்டு நிற்றற்குத் தம்முள் ஒத்த வுரிமையவேனும் எழுத்தெனப்படு ரவெனத் தூக் கற்று நிற்குஞ் சொற்சீரடுக்குப் படுப என்பது இன்னோசைத்தாய் நிற்றலின் ஈண்டுப் படுபவென்றே பாடம் ஓதுக. இஃது அன் பெறாத அகர வீற்றுப் பலவறிசொல்.

அகர னகரம் எனவே பெயரும் கூறினார்.

எழுத்துக்கட்கெல்லாம் அகரம் முதலாதற்குக் காரணம் மெய் யினியக்கம் அகரமொடு சிவணும் (எழு. 46) என்பதனாற் கூறுப. வீடுபேற்றிற்குரிய ஆண் மகனை உணர்த்தும் சிறப்பான் னகரம் பின் வைத்தார். இனி எழுத்துக்கட்குக் கிடக்கை முறை ஆயின வாறு கூறுதும்.

குற்றெழுத்துக்களைமுன்னாகக் கூறி அவற்றிற்கு இனமொத்த நெட்டெழுத்துக்களை அவற்றின் பின்னாகக்கூறினார், ஒரு மாத் திரை கூறியே இரண்டு மாத்திரை கூற வேண்டுதலின். அன்றி இரண்டை முற்கூறினாலோ வெனின், ஆகாது. ஒன்று நின்று அதனோடு பின்னரும் ஒன்று கூடியே இரண்டாவதன்றி இரண் டென்பதொன்று இன்றாதலின் இதனான் ஒன்றுதான் பல கூடியே எண் விரிந்ததென் றுணர்க.

இனி, அகரத்தின் பின்னர் இகரம், எண்ணும் பிறப்பும் பொருளும் ஒத்தலின் வைத்தார். இகரத்தின் பின்னர் உகரம் வைத்தார், பிறப்பு ஒவ்வாதேனும் அ-இ-உ-அம் மூன்றும் சுட்டு (எழு. 31) எனச் சுட்டுப் பொருட்டாய் நிற்கின்ற இனங் கருதி. அவை ஐம்பாற் கண்ணும் பெரும்பான்மை வருமாறு உணர்க. எகரம் அதன்பின் வைத்தார், அகர இகரங்களோடு பிறப்பு ஒப்புமை பற்றி. ஐகார ஔகாரங்கட்கு இனமாகிய குற்றெழுத்து இன்றேனும் பிறப்பு ஒப்புமைபற்றி ஏகார ஓகாரங்களின் பின்னர் ஐகார ஔகாரம் வைத்தார். ஒகரம் நொ என மெய்யொடு கூடி நின்றல்லது தானாக ஓரெழுத்தொரு மொழியாகாத சிறப்பின்மை நோக்கி ஐகாரத்தின் பின் வைத்தார். அ-இ-உ-எ என்னும் நான் கும் அக்கொற்றன் இக்கொற்றன் உக்கொற்றன் எக்கொற்றன் என மெய்யோடு கூடாமல் தாம் இடைச் சொல்லாய் நின்றாயினும் மேல் வரும் பெயர்களோடு கூடிச் சுட்டுப் பொருளும் வினுப் பொரு ளும் உணர்த்தும். ஒகரம் மெய்யொடு கூடியே தன்பொருள் உணர்த்துவதல்லது தானாகப் பொருள் உணர்த்தாதென்று

உணர்க. இன்னும் அ-ஆ-உ-ஊ-எ-ஏ-ஒ-ஓ-ஔ என்பன தம்முள் வடிவு ஒக்கும். இ-ஈ-ஐ தம்முள் வடிவு ஒவ்வா. இன்னும் இவை அளபெடுக்குங்கால் நெட்டெழுத்தோடு குற்றெழுத்திற்கு ஓசை இயையு மாற்றானும் உணர்க. இனிச்சுட்டு நீண்டு ஆகார ஈகார ஊகாரங்க ளாதலானும் பொருள் ஒக்கும். புணர்ச்சி யொப்புமை உயிர்மயங்கியலுட் பெறுதும். இம்முறை வழுவாமல் மேல் ஆளுமாறுணர்க.

இனிக் ககார ஙகாரமும் சகார ஞகாரமும் டகார ணகாரமும் தகார நகாரமும் பகார மகாரமும் தமக்குப் பிறப்பும் செய்கையும் ஒத்தலின் வல்லொற்றிடையே மெல்லொற்றுக் கலந்து வைத்தார். முதல் நாவும் முதல் அண்ணமும் இடைநாவும் இடையண்ணமும் நுனிநாவும் நுனியண்ணமும் இதழ் இயைதலுமாகிப் பிறக்கின்ற இடத்தின் முறைமை நோக்கி அவ்வெழுத்துக்களைக் க-ச-ட-த-ப-ங-ஞ-ண-ந-ம என இம்முறையே வைத்தார். பிறப்பு ஒப்புமையானும் னகாரம் றகாரமாய்த் திரிதலானும் றகாரமும் னகாரமும் சேரவைத்தார். இவை தமிழ் எழுத்தென்பது அறிவித்தற்குப் பின்னர் வைத்தார். இனி இடை யெழுத்துக்களில் யகாரம் முன் வைத்தார், அதுவும் உயிர்கள் போல மிடற்றுப் பிறந்த வளி அண்ணங் கண்ணுற்று அடையப் பிறத்தலின். ரகாரம் அதனோடு பிறப்பு ஒவ்வாதேனும் செய்கை யொத்தலின் அதன் பின் வைத்தார். லகாரமும் வகாரமும் தம்மிற் பிறப்பும் செய்கையும் ஒவ்வாவேனும் கல்வலிது, சொல்வலிது என்றாற் போலத் தம்மிற் சேர்ந்து வரும் சொற்கள் பெரும்பான்மையென்பது பற்றி லகாரமும் வகாரமும்சேரவைத்தார். ழகாரமும் ளகாரமும் ஒன்றானும் இயை பிலவேனும் இடையெழுத்தென்ப யரலவழள (எழு. 21) என்றாற் சந்த வின்பத்திற்கு இயைபுடைமை கருதிச்சேரவைத்தார்போலும்.

அகரம், உயிர் அகரமும் உயிர்மெய் அகரமும் என இரண்டு; இஃது ஏனை உயிர்கட்கும் ஒக்கும். எனவே, ஒருயிர் பதினெட்டாயிற்று.

இவ்வெழுத் தெனப்பட்ட ஓசையை அருவென்பார் அறியாதார். அதனை உருவென்றே கோடும். அது செறிப்பச் சேறலானும், செறிப்ப வருதலானும், இடையெறியப்படுதலானும், செவிக்கட் சென்று உறுதலானும், இன்ப துன்பத்தை ஆக்குதலானும், உருவும் உருவும் கூடிப் பிறத்தலானும், தலையும் மிடறும் நெஞ்சும் என்னும் மூன்றிடத்தும் நிலைபெற்றுப் பல்லும் இதழும்

நாவும் மூக்கும் அண்ணமும் உறப் பிறக்கும் என்றமையானும் உருவேயாம். அருவேயாயின் இவ்விடத்திற் கூறியன இன்மை யுணர்க. அல்லதூஉம், வன்மை மென்மை இடைமை யென்று ஓதினமையானும் உணர்க. உடம்பொடு புணர்த்தல் என்னும் இலக்கணத்தான் இவ்வோசை உருவாதல் நிலை பெற்றதென்று உணர்க. அதற்குக் காரணமும் முன்னர்க் கூறினாம்.

இவ்வெழுத்துக்களின் உருவிற்கு வடிவு கூறாராயினார், அது முப்பத்திரண்டு வடிவினுள் இன்ன எழுத்திற்கு இன்ன வடி வெனப் பிறர்க்கு உணர்த்துதற்கு அரிதென்பது கருதி. அவ்வடிவு ஆராயுமிடத்துப் பெற்ற வடிவே தமக்கு வடிவாம், குழலகத்திற் கூறிற் குழல் வடிவும் குடத்தகத்திற் கூறிற் குடவடிவும் வெள்ளி டையிற் கூறின் எல்லாத்திசையும் நீர்த்தரங்கமும் போல.

எல்லா மெய்யும் உருவுருவாகி (எழு.17) எனவும், உட்பெறு புள்ளியுருவாகும்மே (எழு. 14) எனவும், மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல் (எழு.15) எனவும் சிறுபான்மை வடிவும் கூறுவர். அது வட்டம் சதுரம் முதலிய முப்பத்திரண்டனுள் ஒன்றே உணர்த்தும். மனத்தான் உணரும் நுண்ணுணர்வு இல்லோரும் உணர்தற்கு எழுத்துக்கட்கு வேறு வேறு வடிவங் காட்டி எழுதப்பட்டு நடத்தலிற் கட்புலனாகிய வரிவடிவும் உடைய வாயின. பெரும்பான்மை மெயக்கே வடிவு கூறினார், உயிர்க்கு வடிவின்மையின். எகர ஒகரத் தியற்கையுமற்றே (எழு.16) எனச் சிறுபான்மை உயிர்க்கும் வடிவு கூறினார்.

### சிவஞான முனிவர்

எழுத்ததிகாரம் என்பது எழுத்தினது அதிகாரத்தை யுடையது என அன்மொழித் தொகையாய் அப்படலத்துக்குக் காரணக்குறி யாயிற்று.

எழுத்தென்றது அகர முதல் னகர இறுவாய்க் கிடந்த முப்பதும் குற்றியலிகர முதலிய மூன்றுமாம். அவற்றிற்கு எழுத் தெனுங்குறி முன்னர் எழுத்தெனப்படுப என்னும் சூத்திரத்தால் ஓதுப ஆகலின், ஈண்டு எதிரது போற்றி ஆளப்பட்டது.

அதிகாரம் அதிகரித்தல். அஃது இருவகைப்படும். அவற்றுள் ஒன்று, வேந்தன் இருந்துழி யிருந்து தன் நிலம் முழுவதும் தன் ஆணையின் நடப்பச் செய்வது போல ஒருசொல் நின்றுழி நின்று பல சூத்திரங்களும் பல ஓத்துக்களும் தன் பொருளே நுதலிவரச்

செய்வது. ஒன்று, சென்று நடாத்துந் தண்டத்தலைவர் போல ஓரிடத்து நின்ற சொல் பல சூத்திரங்களோடும் சென்றியைந்து தன் பொருளைப் பயப்பிப்பது. இவற்றிற்கு முறையே வடநூலார் யதோத்தேச பக்கமெனவும் காரியகால பக்கமெனவும் கூறுப. இது சேனாவரையர் உரையானும் உணர்க. அவற்றுள் ஈண்டு அதிகாரம் என்பது முன்னையது. அதனை உடையது எனவே, எழுத்தை நுதலி வரும் பல ஒத்தினது தொகுதி எழுத்ததிகாரம் என்றவாறாயிற்று. எழுத்தினது அதிகாரத்தை உடையதென்புழி ஆறாவது வினைமுதற் பொருண்மையின்கண் வந்த காரகம்.

இப்படலத்துள் விதிக்கப்படுவன வெல்லாம் கருவியும் செய்கையும் என இருவகைப்படும். அவற்றுட் கருவி நூன்மரபு முதலிய நான்கோத்தானும், செய்கை தொகைமரபு முதலிய ஐந்தோத்தானும் கூறப்படும். கருவி பொதுவும் சிறப்பும் என இருவகைத்து. புணரியலுட் கூறப்படுவன செய்கை ஒன்றற்கே யுரிய கருவியாகலின் சிறப்புக்கருவி; ஏனை மூன்றோத்தினுங் கூறப்படுவன பொதுக்கருவி. அற்றேல் அவை ஓர் ஒத்தாகக் கூறவமையும் பிறவெனின், அமையாது; சொல்லதிகாரத்துள் வேற்றுமையியலும் வேற்றுமை மயங்கியலும் விளிமரபும் ஒரு நிகரனவாகவும் தம்முள் வேற்றுமை கண்டு வேறு வேறு ஒத்தாகக் கூறினாற்போல, ஈண்டுந் தம்முள் வேற்றுமை யுடைமைபற்றி நூன் மரபு மொழிமரபு பிறப்பியல் என மூன்று ஒத்தாகக் கூறினார்,

நேரின மணியை நிரல்பட வைத்தாங்கு
ஓரினப் பொருளை யொருவழி வைப்பது
ஒத்தென மொழிப வுயர்மொழிப் புலவர் (செய். 168) என்பது ஒத்திலக்கணம் ஆகலின்.

## நூன்மரபு

அஃதாவது நூலினது மரபு பற்றிய பெயர் கூறுதல். எனவே, இதுவும் இவ்வோத்துட் கூறுஞ் சூத்திரங்களுக்கெல்லாம் அதிகாரம் என்பது பெறப்பட்டது. மலை, கடல், யாறு, குளம் என்றற்றொடக்கத்து உலக மரபு பற்றிய பெயர் போலாது, ஈண்டுக் கூறப்படும் எழுத்து குறில், நெடில், உயிர் மெய் என்றற்றொடக் கத்துப் பெயர்கள் நூலின்கண் ஆளுதற் பொருட்டு முதல் நூல் ஆசிரியனால் செய்து கொள்ளப்பட்டமையின், இவை நூன்மரபு

பற்றிய பெயராயின என அறிக. ஏனை ஓத்துக்களின் விதிக்கப் படும் பெயர்களும் நூல் மரபு பற்றி வரும் பெயராதல் உய்த் துணர்ந்து கோடற்கு இது முன் வைக்கப்பட்டது.

இப்பெற்றி யறியாத உரையாசிரியர் முதலியோர் இவ்வதி காரத்தால் சொல்லப்படும் எழுத்து இலக்கணத்தினை ஓராற்றால் தொகுத்து உணர்த்துதலின் நூன்மரபென்னும் பெயராயிற்று என்பாரும், இவ்வோத்துள் கூறப்படும் விதிகள் மூன்று அதிகாரத் திற்கும் பொதுவாகலின் நூன்மரபு என்னும் பெயராயிற்று என் பாரும் ஆயினார். இவ்வதிகாரத்துள் கூறும் எழுத்திலக்கணத்தைத் தொகுத்து உணர்த்தலால் பெற்ற பெயராயின் அதிகாரமரபு எனப் படுவதன்றி நூன்மரபு எனப்படாமையானும், இவ்வோத்துள் கூறப் பட்டன செய்கை ஓத்திற்கும் பொருளதிகாரத்துள் செய்யுளியல் ஒன்றற்குமே கருவியாவது அன்றி மூன்றதிகாரத்திற்கும் பொது வாகாமையானும் அவை போலியுரையாத லறிக.

எழுத்தெனப்படுப...... மூன்றலங் கடையே

என்பது சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், அகர முதலிய வற்றிற்குப் பொதுப் பெயர் கூறுதல் நுதலிற்று.

இதன் பொருள் :— நெடுங்கணக்கினுள் அகர முதல் னகரம் ஈறாகக் கிடந்த முப்பதும் எழுத்தென்று சொல்லப்படுவன என்று கூறுவர் நூலோர், தனித்தானும் ககர முதலியனபோல் அகர மொடு சிவணியானும் இயங்கும் இயல்பின்றி ஒரு மொழியைச் சார்ந்து வருதலே தமக்கு இலக்கணமாக வுடைய மூன்றல்லாத இடத்து என்றவாறு; எனவே, சார்ந்து வரல் மரபின் மூன்றும் உள என்பதூஉம் ஈண்டே பெற்றாம்.

அகர முதலிய முப்பதும் நெடுங்கணக்கினுள் பெறப்படுதலின், அவற்றை விதந்தோதாது, முதலும் இறுதியும் எடுத்தோதி அநுவதித்தார். அநுவதித்தல் எனினும் வழிமொழிதல் எனினும் ஒக்கும். அநுவாதமாவது முன்னர்ப் பெறப்பட்டது ஒன்றனை வேறொன்று விதித்தற் பொருட்டுப் பின்னரும் எடுத்தோதுதல். அதனால் அது கூறியது கூறல் என்னும் குற்றமாகாது வழி மொழிதல் என்றாயிற்று. வழிமொழிதற்கு முன்னர்ப் பெறப் பட்டதனைப் புரோவாதம் என்பர் வடநூலார்.

இனிச் சார்ந்துவரல் மரபின் மூன்றும் அகர முதலியன போலத் தனித்து நிற்றல் ஆற்றாமையின் நெடுங்கணக்கினுள் பெறப்படா வாயின ஆகலான் அவற்றை முன்னர் வகுத்து ஓதுப.

முப்பஃதென்பது இனைத்தென அறிந்த பொருளின் வினைப் படு தொகுதியாகலின், ஆண்டு வேண்டப்படும் முற்றும்மை விகாரத்தால் தொக்கது, இருதோள் தோழர் பற்ற என்புழிப் போல, சூத்திரமும் செய்யுளாகலின்.

இனி உரையாசிரியரும் நச்சினார்க்கினியரும் இச்சூத்திரம் பெயரும் முறையும் தொகையும் உணர்த்திற்று என்றும், அ ஆ முதலியனவே பெயரென்றும், அந்த முறையே முறையென்றும், முப்பஃது எனத்தொகை விதிக்கப்பட்ட தென்றும் உரைத்தாரால் எனின், அற்றன்று. அஃது ஆசிரியர் கருத்தாயின், அ ஆ இ ஈ என முழுதும் எடுத்தோதி முறைக்கு ஏதுவும் கூறுவர். அவ்வாறு கூறாது அகரமுதல் னகர விறுவாய் என அநுவதித்தே ஒழிந்தமை யானும், எழுத்தென்பது ஒருபொருள்; அதற்கு அ ஆ முதலியன பெயர் என்றல் பொருந்தாமையானும், அ ஆ முதலிய அ ஆ முதலியவற்றிற்குப் பெயராதல் கூறவேண்டாமையானும், வேண்டு மெனில் சொற்களும் பொருளையுணர்த்தாது அவை தம்மையே உணர்த்தும்வழி அவற்றிற்கு அவை பெயராதல் கூறாமை குன்றக் கூறலாம் ஆகலானும், முறையும் தொகையும் செய்கை முதலிய வற்றிற்குக் கருவியன்மையின் அவற்றை விதித்தலாற் பயன் இன்மையானும்அவருரை போலியுரையெனவறிக. இச்சூத்திரத்தின் ஒழிபாகிய அவைதாம் குற்றியலிகரம் என்னும் சூத்திரத்துள் எழுத்தோ ரன்ன என எழுத்தாதல் விதிக்கின்றமையானும், ஈண்டும் அகர முதல் னகர விறுவாய் முப்பஃது என அநுவதித்து அவற்றிற் கெழுத்தென்னும் பெயரே விதிக்கப்பட்ட தெனக் கொள்க. அகர முதலிய பொருட்கு ஈண்டு எழுத்தென்னும் பொதுப் பெயர் கூறி,

| | |
|---|---|
| அவற்றுள், அ இ உ | (நூன் மரபு 3) |
| ஆ ஈ ஊ ஏ | ( ,, 4) |
| ஔகார விறுவாய் | ( ,, 8) |
| னகார விறுவாய் | ( ,, 9) |
| வல்லெழுத் தென்ப | ( ,, 19) |
| மெல்லெழுத் தென்ப | ( ,, 20) |
| இடையெழுத் தென்ப | ( ,, 21) |

என்னும் சூத்திரங்களால் சிறப்புப் பெயர் கூறுமாறும் அறிக. சூத்திரம் வேறு பொருள் தாராமைப் பொருட்டன்றே ஆசிரியர் நூன்மரபென அதிகாரஞ் செய்து கொண்டதூஉம் என்க.

அற்றேல்,

னஃகா னொற்றே யாடூஉ வறிசொல் (கிளவி. 5)

ளஃகா னொற்றே மகடூஉ வறிசொல் (கிளவி. 6)

என்றாற் போலப் பிறாண்டும் பொருளை முன்னர்க் கூறிப் பெயர் பிற் கூறுபவாகலானும், இதற்கிது பெயரென்று பொருளை முன்னர்க் காட்டிப் பெயர் கூறுதலே மரபாகலானும், ஈண்டும் அகரமுதல் னகர விறுவாய் முப்பஃது எழுத்தெனப் படுப என்றோதல் வேண்டும். அவ்வாறு ஓதாது, எழுத்தெனப்படுப அகர முதல் னகர விறுவாய் என மாறிக் கூறிய தென்னையோ வெனின், நன்றுவினாயினாய்; அவ்வாறு ஓதுதலே மரபாயினும் எழுத்து என்பது மங்கல மொழியாகலின் முதற்கண் மங்கலங் கூறுதல் மர பெனக் கருதி, எழுத்தெனப்படுப வகர முதல் னகர விறுவாய் என்றார்; என்றாரேனும்,

எழுத்துப்பிரிந் திசைத்தல் இவணியல் பின்றே (உரி. 97)

எழுத்தோ ரன்ன பொருள் தெரி புணர்ச்சி (புணரி. 39)

எனப் பிறாண்டும் எடுத்தாளுதலான், அவ்வாட்சி பற்றி எழுத் தென்பது பெயர், அகர முதல் னகர விறுவாய் என்பது பெயர்ப்பொரு ளெனத் துணிந்த பின்னர், அகர முதல னகர விறுவாய் முப்பஃது எழுத்தெனப்படுப வென்ப என்னும் இடக்கை முறை உள்ளத்தின் கண் நிலை பெறும்; அதன் பின்னர்ச் சூத்திரப் பொருள் இனிது விளங்குமாதலின், ஆண்டுப் பெயர் பின்னாதலிற் பிறழாமையுணர்க இதுவே அண்மைநிலை. இவ்வாறன்றி எழுத்தென்பது சென்று நடாத்தும் தண்டத்தலைவர் போல் அதிகரிப்பதெனக் கொண்டு பின்னர் வந்தியையும் என்றலும் ஒன்று. இனி முதனூல் ஆசிரியனால் படைத்து இட்டுக்கொண்ட பெயர் என்னாது, உலகத்தில் எழுதப்பட்டவை எல்லாம் எழுத்தாமன்றே? அதனை ஈண்டு ஆளுதற் பொருட்டு முதனூல் ஆசிரியனால் வரையறுத்துக் கொள்ளப்பட்டதென நியம விதியாகக் கொள்ளினும் அமையும்.

வல்லெழுத் தென்ப கசட தபற (நூன்மரபு 19)

மெல்லெழுத் தென்ப ஙஞண நமன ( ,, 20)

இடையெழுத் தென்பயரல வழள ( ,, 21)

உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே

யஃறிணை யென்மனார் அவரல பிறவே (கிளவி. 1)

என்றற்றொடக்கத்தனவும் அவ்வாறே கண்டு கொள்க.

அற்றேல், குற்றியலிகரம் என்னும் குறியீட்டான் நாகியா தெனச் செய்கை செய்தல் வேண்டும்; செய்கை செய்த பின்னர்

அவ்வெழுத்துக் குற்றியலிகரம் எனல் வேண்டும்; இஃது ஒன்றனையொன்று பற்றுதல் என்னும் குற்றமாம் பிறவெனின்:— ஆகாது. நாகு யாது என்பனவே சொல்லாகலின் நாகியா தென் புழிப் பெறப்பட்ட குற்றியலிகரம் வழுவென்று காணலுற்றுழி, யகரம் வரும்வழி யிகரங் குறுகும் என்னும் சூத்திரம் வழா நிலையாதல் உணர்த்த வந்த தல்லது முன்னில்லாத குற்றிய லிகரத்தை விதிக்க வந்த தல்லாமையின், எல்லாச் சொற்களும் படைப்புக் காலந் தொடங்கி நிலைபேறுடைமையின் இனி இலக்கணம் ஒன்றே கண்ணாக நூல்கொண்டு உணரப்புகுவார்க்கும் கேண்மியா வென்புழி மகரம் பற்றுக்கோடாக நின்ற குற்றியலிகரம் உணர்ந்த வழி இதுபோன்றன வெல்லாம் குற்றியலிகரம் என்று உணரப்படுதலின், ஆண்டும் அக்குற்ற மின்மையறிக; ஒரு குடத்தைக்காட்டி இது குடம் என்று உணர்த்த உணர்ந்தார்க்கு இந்நிகரனவாய வனையப்படுவன எல்லாம் குடம் என்றுணரப்படு மாகலின். அங்ஙனம் அல்லாக்கால் மனையகத்துக் குடமுளது என்றவழி முன் காணாத குடத்தை அறிதல் கூடாது என்பது. எழுத்து முதலியவற்றிற்கும் இவ்வாறே கண்டு கொள்க.

இவ்வெழுத் தென்னுங்குறி வேற்றுமைத் தொகை வினைத் தொகை மெய்ம்மயக்கம் உடனிலைமயக்கம் இரட்டைக்கிளவி யென்பன போல உடனிகழ்ச்சி பற்றிய பெயராகாது அகரம் முதலியவற்றிற்குத் தனித்தனியே பெயராதல் உத்தி வகையான் உணர்ந்து கொள்க.

சொல்லும் பொருளும் பேதாபேதமாகலின் அதுபற்றி,

உறுதவ நனியென வரூஉ மூன்றும்
மிகுதி செய்யும் பொருள வென்ப (உரி.3)

கருப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள (உரி.74)
புதிதுபடற் பொருட்டே யாணர்க் கிளவி (உரி.81)

எனச் சிலவற்றை வேற்றுமை நயம்படவும்

கெடவரல் பண்ணை யாயிரண்டும் விளையாட்டு (உரி.21)
தடவும் கயவும் நளியும் பெருமை (உரி.22)

எனச் சிலவற்றை ஒற்றுமை நயம்படவும் கூறுவர் ஆகலின், ஈண் டெழுத்தெனப் படுப அகர முதல் னகர விறுவாய் என ஒற்றுமை நயம்படக் கூறிற்று. சொல்லும் பொருளும் வேறென்பார் எழுத் தெனப் பெயர் பெறுவனவற்றை எழுத்தென்றது ஆகுபெயர் என்ப. இனிச்சொல்லும் பொருளும் ஒன்றென்பார்.

புதிதுபடற் பொருட்டே யாணர்க் கிளவி (உரி. 81) என்பது இராகு வினது தலை யென்றாற் போலும் என்பர்.

இத்துணையும் கூறியவாற்றானே, அகர முதலியவற்றிற்கு எழுத்தென்னுங் குறியிடுதற்கு எழுந்தது இச்சூத்திரம் என்றுணர்ந்து கொள்க.

எழுந்தென்றொழியாது எனப்படுபவென்ப என்றார், இது முதனூலாசிரியனால் விதிக்கப்பட்டுத் தொன்று தொட்டு வரும் குறி யென்பது அறிவித்தற்கு.

அற்றேல் அஃதாக, நெடுங்கணக்கினுள் அகர முதல் னகர விறுவாய்க் கிடக்கை முறையாதற்குக் காரணம் என்னையோ அறிதல் வேண்டினேன் என்பையாயின் காட்டுதும்:

ழகர றகர னகரங்கள் மூன்றும் தமிழ் எழுத்து என்பது அறிவித்தற்கு இறுதிக்கண் வைக்கப்பட்டன. அவற்றுள்ளும் ழகரம் இடையெழுத் தாகலின், அது பற்றி இடையெழுத்தொடு சார்த்தி அவற்று இறுதிக்கண் வைக்கப்பட்டது. வடமொழியின் லகாரம் ளகாரமாகவும் உச்சரிக்கப்படுவதன்றித் தனியே ஓரெழுத்தன்மை யின் அச்சிறப்பின்மை பற்றி இடையெழுத்தாகிய ளகாரம் ழகாரத்திற்கும் பின் வைக்கப்பட்டது ய ர ல வ க்கள் நான்கும் முறையே அடியண்ணமும் இடையண்ணமும் அண்பல் முதலும் இதழும் என்னும் இவற்றின் முயற்சியாற் பிறத்தலான், அப்பிறப்பிடத்து முறையே முறையாக வைக்கப்பட்டன.

இனியொரு நிகரனவாய இடையெழுத்துக்களில் இவ்விரண்டு வேறு பிரித்து, ய ரக்களும் ல வக்களும் ழ ளக்களும் தம்முள் இனம் என்றும், இனமாதல் பற்றி முறை கூறப்பட்டன வென்றும், பிறப்பேயன்றி அளவு செய்கை பொருள் வடிவென்பவற்றுள் ஏற்றன ஒத்தலும் இனமாதற்கு ஏதுவென்றும் கூறுவாருமுளர். அது பொருந்தாது. ஒருவாற்றான் ஒத்தலும் ஒருவாற்றான் வேறாதலும் உடைமை பற்றியன்றே இனம் என்று வழங்கப் படுவது? அவற்றுள் இடையெழுத்தாறும் இடப்பிறப்பான் ஒத்தலும் முயற்சிப்பிறப்பான் வேறாதலும் உடைமையின், இடைக் கணம் என ஓரினமாயின. உயிர்க்கணம் வன்கணம் மென்கணம் என்பவற்றிற்கும் இஃதொக்கும். அவற்றுள், அ ஆக்கள் முதலியன வும் க ஙக்கள் முதலியனவும் அகமுயற்சிப் பிறப்பான் ஒத்தலும், குற்றோசை நெட்டோசையும் வல்லோசை மெல்லோசையுமாகிய

புறமுயற்சிப் பிறப்பான் வேறாதலும் என்னும் இரு தன்மையும் உடைமையின் அவ்வேறுபாடுபற்றி வேறு பிரித்து இவ்விரண்டு ஓரினமெனவும் வைக்கப்பட்டன. இடையெழுத்துக்களுள் இவ் விரண்டினை வேறு பிரித்து இனம் என்றற்கு அவ்வாறு ஓர் இயைபு இன்மையின், அவை அவ்வாறு இனமாதல் யாண்டைய தென்க. அல்லதூஉம் அ ஆக்கள் க ஙக்கள் முதலியன போல ய ரக்கள் முதலியனவற்றை இனமென்றல் செய்கைக்குக் கருவி யாகாமையானும், முறைபெறுதற்கு ஏதுவெனின் முறைகூற வேண்டாமை மேற் காட்டினாம் ஆகலானும், உலகத்தும் பிறப் பாத்தல் பற்றியே இனம் என்று வழங்குப ஆகலானும், இடப், பிறப்பொத்தல் ஆறுக்கும் பொதுவன்றி இவ்விரண்டற்குச் சிறந்தது அல்லாமையானும் அது பொருந்தாமை யுணர்க. இன மாதல் அறிந்து கோடற் பொருட்டே ஆசிரியர் பிறப்பியல் கூறினார். அவ்வாறன்று என்பாரை எழுத்ததிகாரத்துட் கூறும் பொருளெல்லாம் செய்கையும் கருவியும் என இரண்டாய் அடங்கும் என்பது எல்லார்க்கும் ஒப்ப முடிந்ததாகலான் பிறப்பியல் வேறொன்றற்குக் கருவியாகாமையின் பயனில் கூற்றாமெனக் கூறி மறுக்க. வடநூலாரும் பிறப்பொத்தல் ஒன்றே இனமடைதற்கு ஏது என்ப. இனி அளவு முதலிய ஒத்தலின் இனமாம் என்பார்க்கு, ணகரத்தோடு மகரத்திற்கு அளபொக்கும்; முகம் முகன் எனப் பொருளொக்கும்; ககர சகர தகரங்கட்கு வடிவொக்கும்; ரகர ழகரங் கட்குச் செய்கையொக்கும். இவ்வாறே இனமல்லாத ஏனையவும் இவற்றுள் ஏற்றன ஒக்குமாகலின், அவையும் இனமாவான் செல்லுமாறறிக. அன்றியும் ஈண்டுக் கூறினவை யெல்லாம் செய்கைக்குக் கருவியாமெனக் கூறி அச்செய்கையை ஈண்டு இனம் அடைத்தற்குக் கருவியாம் எனக் கூறுதல் ஒன்றனையொன்று பற்றி நிற்றல் என்னும் குற்றமாதல் அறிக.

இனிக் கஙக்களும் சஞக்களும் டணக்களும் தநக்களும் பமக் களும அடிநாவண்ணம் இடைநாவண்ணம் நுனிநாவண்ணம் அண்பல்லடி இதழ் என்னும் இவற்றின் முயற்சியாற் பிறத்தலான், அப்பிறப்பிடத்தின் முறையே முறையாக வைக்கப்பட்டன, வலியாரை முன் வைத்து மெலியாரைப் பின்வைத்தல் மரபாகலின். வல்லெழுத்துக்கள் முன்னும் அவ்வவற்றிற்கு இனம் ஒத்த மெல் லெழுத்துக்கள் அவ்வவற்றின் பின்னுமாக வைக்கப்பட்டன. அவ் விரண்டும் நோக்கி யல்லது இடை நிகரனவாய் ஒலித்தல் அறியப் படாமையின், அதுபற்றி இடையெழுத்துக்கள் அவ்விரு கூற்றிற்கும் பின் வைக்கப்பட்டன.

அகர முதலிய பன்னீருயிரும் தனித்தியங்கும் ஆற்றல் உடைமையானும், ககர முதலிய பதினெட்டு மெய்யும் அகரத்தோடு கூடியல்லது இயங்கும் ஆற்றல் இன்மையானும் உயிர் முன்னும் மெய் பின்னுமாக வைக்கப்பட்டன.

இனி உயிர்களுள் அ இ உ என்பன முறையே அங்காந்து கூறு முயற்சியானும், அவ்வங்காப்போடு அண்பல்லடி நாவிளிம் புறக் கூறுமுயற்சியானும், அவ்வங்காப்போடு இதழ் குவித்துக் கூறு முய்ற்சியானும் பிறத்தலான், அப்பிறப்பிடத்து முறையே முறை யாக வைக்கப்பட்டன. ஆகார ஈகார ஊகாரங்கள் அகர முதலிய வற்றிற்கு இனமாகலின், அவற்றைச் சார வைக்கப்பட்டன. நெட் டெழுத்தாவது நீரும் நீரும் சேர்ந்தாற் போலக் குற்றெழுத்திரண்டு ஒத்து நின்று நீண்டு இசைப்ப தொன்றாகலின் அஃது உணர்ந்து கோடற்குக் குற்றெழுத்துக்களின் பின்னர் நெட்டெழுத்துக்கள் வைக்கப்பட்டன. அற்றேல் குற்றெழுத்திற்கு ஓதியவிதி நெட் டெழுத்திற்கும் வருமாலோ வெனின், அற்றன்று; வேறு நின்ற குற்றெழுத்திற்கே விதிபெறப்படுதலின். இன்னும் இக்கடா விடைக ளெல்லாம் மாபாடியத்தும் கையடத்தும் இரண்டாம் ஆனிகத்தில் கண்டு கொள்க.

இந்நெட்டெழுத்துக்கள் மொழிக் காரணமாய் வேறு பொருள் தந்து நிற்றலின், அது பற்றி வேறெடுத்து எண்ணி உயிர் பன்னீ ரெழுத் தெனப்பட்டன. அளபெடை அந்நெட்டெழுத்தோடு குற்றெழுத்து ஒத்து நின்று நீண்டிசைப்பது ஒன்றாயினும், மொழிக் காரணமாய் வேறு பொருள் தராது இசை நிறைத்தல் மாத்திரை பயத்ததாய் நிற்றலின், வேறு எழுத்தென வைத்து எண்ணப்படா தாயிற்று என்பது நுண்ணுணர்வான் ஓர்ந்துணர்க.

குன்றிசை மொழிவயின் நின்றிசை நிறைக்கும்
நெட்டெழுத் திம்பர் ஒத்தகுற் றெழுத்தே (மொழி. 8)

என்றதூஉம் இக்கருத்தே பற்றி யென்க. இப்பெற்றி யறியாதார் நெடிலுங்குறிலும் விரலும் விரலும் சேர நின்றாற்போல இணைந்து நின்று அளபெடுக்கும் எனவும், அளபெடை யெழுத்து உயிரெ ழுத்துள் அடங்காதெனவும், சார்பெழுத்தென வைத்து வேறு எண் ணப்படும்எனவும் தமக்கு வேண்டியவாறே கூறுப. நெடிலும் குறிலும் அவ்வாறு நின்று அளபெழும் என்றல் பொருந்தாமைக்கு எழுத் தெடையென்னாது அளபெடை யென்னும் குறியீடே சான்றாதல்

அறிக. அற்றேல், ஓரெழுத்தினையே இரண்டு மாத்திரையும் ஒரு மாத்திரையுமாகப் பிரித்து அசைத்துச் சீர்செய்தல் பொருந்தா தெனின், அற்றன்று; எழுத்து வகையான் என்னாது,

மாத்திரை வகையால் தளைதம கெடாநிலை
யாப்பழி யாமையென் றளபெடை வேண்டும்

(யா. வி. டி. மேற்கோள்)

என்றமையின், எழுத்திற்கு மாத்திரை கோடலும் அசைத்தலும் சீர்செய்தலும் தளையறுத்தலும் ஓசை பற்றி அல்லது எழுத்து பற்றியல்ல வென்க.

இன்னும் வடநூலார் அ என்னும் ஓரெழுத்தே ஒரு மாத்திரையாய் உச்சரிக்குங்கால் குற்றெழுத்தென்றும் இரண்டு மாத்திரையாய்க் கூட்டி உச்சரிக்குங்கால் நெட்டெழுத்தென்றும், மூன்று மாத்திரையாய் உச்சரிக்குங்கால் அளபெடை யெழுத்தென்றும் மூவகைப்படு மெனவும், அம்மூன்றும் எடுத்தல் படுத்தல் நலிதல் என்னும் ஓசை வேறுபாட்டால் ஒன்று மூன்றாய் ஒன்பது வகைப் படும் எனவும், அவ்வொன்பது வகையும் மூக்கின் வளியொடு சார்த்தியும் சார்த்தாதும் உச்சரிக்கு மாற்றால் ஒவ்வொன்று இவ்விரு வகைத்தாய்ப் பதினெட்டாம் எனவும் கூறுப. இவ்வாறே ஏனை யெழுத்திற்குங் கொள்வர். அவ்வாறு வேறுபடினும் உயிரெழுத்து ஆம்தன்மையில் திரியாவாய்ப் பதினெட்டும் ஓரின மாம் என்றே கொள்வர். இதனானும் உயிரளபெடை உயிரின் வேறாகாமை உணர்க. இதனானே ஒற்றளபெடையும் ஒற்றின் வேறன்மை யுணர்க.

இனி எகரமாவது அகரக்கூறும் இகரக் கூறும் தம்முள் ஒத்திசைத்து நரமடங்கல் போல் நிற்பதொன்றாகலானும், ஒகர மாவது அகரக் கூறும் உகரக் கூறும் தம்முள் ஒத்திசைத்து அவ்வாறு நிற்பதொன்றாகலானும் அவை அவற்றின் பின்னர் முறையே வைக்கப்பட்டன. ஏகார ஓகாரங்கள் இனமாகலின் அவற்றின்பின் முறையே வைக்கப்பட்டன. அகரமும் யகரமும் இகரமும் தம்முள் ஒத்திசைத்து நிற்பதொன்றாகலின் எகர ஏகாரங்களின் பின்னர் ஐகாரமும், அகரமும் வகரமும் உகரமும் தம்முள் ஒத்திசைத்து நிற்பதொன்றாகலின், ஒகர ஓகாரங்களின் பின்னர் ஔகாரமும் வைக்கப்பட்டன. இவ்வாறாதல் பற்றி ஏ ஓ ஐ ஔ என்னும் நான்கினையும் வடநூலார் சந்தியக்கரம் என்பர். கையடனார் நரமடங்கல்போல் என்று உவமையும் கூறினார். இக்கருத்தே பற்றி யாசிரியர்,

அகர விகரம் ஐகார மாகும் (மொழி. 21)
அகர வுகரம் ஔகார மாகும் (மொழி. 22)

எனக்கூறி, ஐயென்னும் நெட்டெழுத்தின் வடிவு புலப்படுதற்கு அகர விகரங்களே யன்றி அவற்றினிடையே யகரமும் ஒத்திசைக் கும் என்பார்,

அகரத் திம்பர் யகரப் புள்ளியும்
ஐயென் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும் (மொழி. 23)

என்றும், மெய்பெற என்ற இலேசானே ஔ என்னும் நெட்டெழுத்தின் வடிவு புலப்படுதற்கு அகரவுகரகங்களேயன்றி அவற்றிடையே வகரமும் ஒத்திசைக்கும் என்றும்) இம்பர் உம்பர் என்றாற் போல்வன கால வகை யிடவகைகளான் மயங்குமாகலின் இவற்றின் முதற்கண் நிற்பதியாதோ இறுதிக்கண் நிற்பதியாதோ என்னும் ஐயம் நீக்குதற்கு,

இகர யகரம் இறுதி விரவும் (மொழி. 25)

என்றும் கூறினார். மொழிந்த பொருளோ டொன்ற வவ்வயின் மொழியாததனையும் முட்டின்று முடித்தல் என்னும் உத்தியான் எகர ஏகாரங்கள் ஒகர ஓகாரங்கள் அவ்வாறு ஆதலும் கொள்ள வைத்தார். மாபாடியத்துள் ஊகாரத்தின் பின் நின்ற வட வெழுத்து நான்கு உயிர்க்கும் இடையே ரகர லகரக் கூறுகள் ஒத்து நிற்கும் என்ற ஆசிரியர் பதஞ்சலியார்க்கு ஐ ஔ என்புழியும் இடையே யகர வகரக் கூறுகள் விரவி நிற்கும் என்பது உடன்பாடு ஆதல் பெற்றாம். எகர முதலியவற்றுள் அகரக்கூறு குறைவும் இகர உகரக் கூறுகள் மிகுதியுமாம் எனவும் உணர்க. இதுவும் மாபாடியத்திற் கண்டது. வடநூற் கடலை நிலைகண்டறிந்த சேனாவரையர் எழுத்ததிகாரத்திற்கு உரை செய்தாராயின் இன்னோரன்ன பொருள் அனைத்தும் தோன்ற ஆசிரியர் கருத் துணர்ந்து உரைப்பர். அவர் சொல்லதிகாரம் போலப் பெரும் பயன்படாமை கருதி எழுத்திற்கு உரை செய்யாது ஒழிந்தமையின், தமிழ் நூல் ஒன்றே வல்ல உரையாசிரியரை உள்ளிட்டோர் உரையை ஆசிரியர் கருத்தாகக் கொண்டு பின்னுள்ளோரும் மயங்குவாராயினர் என்பது.

அகர விகரம் ஐகாரம் ஆகும் (மொழி. 21) என்புழி ஆகும் என் றதனால் ஆகாதென விலக்கப்படும் என்பாரை,

பன்னீருயிரும் மொழிமுத லாகும் (மொழி. 26)

என்புழியும் ஆகும் என்பதனால் பன்னீருயிரும் மொழி முதலான வென விலக்கப்படும் போலும் எனக்கூறி மறுக்க. அன்றியும் இயற்கையானின்ற ஐகார ஔகாரங்கள் வேறு, போலியாய் இவ்வாறு வரும் ஐகார ஔகாரங்கள் வேறெனக் கொள்ளின், இவற்றையெடுத்தோதி விலக்குதலால் ஒரு பயன் இன்மையின் பயனில மொழிதலா மாறுணர்க. யாம் கூறியதே வடநூலார்க்கும் உடன்பாடாதல் மாபாடியம் வல்லார் வாய்க் கேட்டு உணர்க. வடநூல் உணர்ந்தார்க் கன்றித் தமிழியல்பு விளங்கா தென்பதூஉம் உணர்ந்து கோடற்கன்றே பாயிரத்துள், ஐந்திர நிறைந்த தொல்காப்பியன் என்றதூஉம் என்க. எகர ஒகரங்கள் ஒருவாற்றான் சிறப்பெழுத்தாயினும், பாகதமொழியில் பயின்று வருதலானும், சாமவேதம் உடையாருள் ஒரு சாரார் இசை பற்றிக் குழூஉக்குறி போலக் கொண்டோதுப ஆகலானும், இறுதிக்கண் வையாது முறை பற்றி ஏகார ஓகாரங்களின் முன் வைக்கப்பட்டன. ஈண்டுக் கூறிய வாற்றானே அகரம் உயிர் எழுத்துக்களினும் கலந்து நிற்குமாறு அறிக.

இத்துணையும் முறையாமாறு காட்டப்பட்டது. எழுத்துக்களுக்குப் பிறப்பு வடநூலார் சிறுபான்மை வேறுபடக் கூறுப; அஃது உச்சரிக்கும் ஓசை வேற்றுமை பற்றி எனக்கொள்க.

இனி எழுத்தெனப்படுப அகர முதல் னகர விறுவாய் என்றொழியாது முப்பஃதென்னும் தொகை கூறியது எற்றுக்கெனின், அது கூறுங்கால், எழுத்தென்றற் குரியவை வகரந் தொடங்கி னகர விறுவாய்க் கிடந்த ஐந்துமேயோ, அகரந் தொடங்கி நகரமீறாய்க் கிடந்த இருபதுமேயோ, அகரத்தைத் தனக்கு முதலாகவுடைய ஆகாரமும் னகரத்தைத் தனக்கு ஈறாகவுடைய றகரமும் என்னும் இரண்டுமேயோ அகரமும் முதலும் னகரமும் இறுவாயும் என்னும் சொற்களேயோ எனவும், பலவாற்றான் ஐயம் நிகழுமன்றே? அவ்வையம் நீக்குதற்கும் இம்முப்பதுமேயன்றி வடமொழியிற் கூறும் ஏனை எழுத்துக்கள் ஈண்டு கொள்ளப்படா என்றற்கும் என்க.

ஒருமொழிவைச் சார்ந்து வரும் இயல்பன்றித் தனித்தியங்கும் இயல்பு தமக்கில என்றலின், அவை தம்மையே எடுத்தோதிக் காட்டலாகாமையின், வருஞ் சூத்திரத்தான் அவற்றிற்கு வேறு வேறு பெயரிட்டு,

அவைதாம் குற்றிய லிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்று அம் மூன்றும் புள்ளிபெறுதல் பற்றிப் பொதுப்பெயராக முப்பாற் புள்ளி யும் என்றும், அவை தனித்து எழுதப்படா வாயினும் மொழியோடு சார்த்தி எழுதப்படுதலின் எழுத்தென்னும் குறியீட்டிற்கு உரிய வென்பார், எழுத்தோரன்ன என்றும் ஓதினார். முற்றியலிகர உகரங்களோடு இவற்றிடை வேற்றுமை தெரிந்து கோடற்பொருட்டு இகரம் உகரம் என்றொழியாது குற்றியலிகரம் குற்றியலுகரம் என்றார்.

கேண்மியா வரகு என்பனவற்றின் இகரமும் உகரமும், போலும் என்புழி அரைமாத்திரயாய் நின்ற மகரம் போன்ம் என லகரம் னகரமாய்த் திரிந்து ஈரொற்றுடனின்ற காரணத்தால் பின்னர்க் கான்மாத்திரையாய் நின்றாற் போல, முன்னர் ஒரு மாத்திரையாய் நின்று பின்னர் ஒரு காரணம் பற்றி அரை மாத்திரை யாகாது மகரமும் வல்லெழுத்துமாகிய மெய்யெழுத் தினைச் சார்ந்து என்றும் அரைமாத்திரையாயே நிற்கும் ஒரு தன்மைய வாயினும், அப்பெற்றி யுணராது இவை அரைமாத்திரை பெறுதல் மகரக்குறுக்கம் போலச் செய்கையாற் போலும் என்று உலகம் மலையாமைப் பொருட்டு இவை இங்ஙனமாதல் இயல் பென்பார் குற்றிகரம் குற்றுகரம் என்றொழியாது குற்றியலிகரம் குற்றியலுகரம் எனக் குறியிட்டார். இக்குறியீடும் உணராதார் ஒருமாத்திரையாய் நின்ற குற்றெழுத்துக்களே இடமும் பற்றுக் கோடும் சார்ந்த காரணத்தால் அரை மாத்திரையாய்க் குற்றிய லிகரங் குற்றியலுகரம் என நின்றவெனக் கூறித் தமது அறியாமையைப் புலப்படுப்பர். ஆசிரியர்,

குற்றிய லுகரமும் அற்றென மொழிப (புணரி. 3)

என்னும் சூத்திரத்தாற் குற்றியலுகரமும் புள்ளிபெற்று நிற்கும் என முற்றுகரத்தோடிதனிடை வரிவடிவினும் வேற்றுமை தோன்றக் கூறி உவமையாற் குற்றியலிகரமும் புள்ளி பெற்று நிற்கும் என்று ஓதினமையானும்,

குற்றிய லிகரம் நிற்றல் வேண்டும் (மொழி. 1)

எனவும்,

குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே (மொழி. 3)

நிற்றல் வேண்டும் எனவும் கூறியதன்றி இவைபற்றி மாத்திரை குறுகும் என்னாமையானும்,

புணரியல் நிலையிடைக் குறுகலுமுரித்தே (மொழி. 2)

ஆயிரு மூன்றே யுகரங் குறுகும் கிடன் (குற்றி. 1) என்புழியும்,

யகரம் வருவழி யிகரங் குறுகும் (குற்றிய 5) என்புழியும்,

கொங்கலர் பூம்பொழிற் குறுகினர் சென்றுழி (சிலப் 10 : 220)

தீவினை முதிர் வலைச் சென்றுபட் டிருந்த
கோவலன் தன்னைக் குறுகின னாகி (சிலப் 16 : 156-7)

கோயின் மன்னனைக் குறுகினள் சென்றுழி (சிலப் 20 : 47)

நீங்கிற் றெறூஉம் குறுகுங்காற் றண்ணென்னும்தீ (குறள் 1104)

ஆறுங் குறுகார் அறிவுடையார் (நேமி. சொல் 10. உரை)

என்புழிப் போலக் குறுகுதல் அணுகுதல் எனவே பொருள்படும் ஆகலானும், அவ்வாறன்றிக் குறைதலே பொருளாயினும் குற்றுயிர் குற்றெழுத்து என்றாற் போலத் தம்மின் மிக்கிசைக்கும் எழுத்துக்களை நோக்கிக் குறுகும் என்றார் எனவேபடும் ஆக லானும், அங்ஙனம் கொள்ளாக்கால்,

எல்லா விறுதியும் உகரம் நிறையும் (குற்றிய. 3)

என்புழிப் புணர்ச்சிக்கண் முற்றுகரமாய் நிற்கும் எனப் பொருள் பட்டு இச்சூத்திரம் மாறுகொளக் கூறலாய் முடியும் ஆகலானும், குற்றிய லிகரமும் குற்றிய லுகரமும் ஆய்தம் போல வேறெழுத்தே யாவனவன்றி ஒருமாத்திரையாய் நின்ற இகரவுகரங்களே மகரக் குறுக்கம் முதலியன போல ஒரு காரணம் பற்றி அரை மாத்திரையாய் நின்றன வல்ல என்பது தெற்றென வுணர்க.

அற்றேல், ஐகாரக் குறுக்கம் மொழியிடை கடைகள் என்னும் இடங்காரணமாகக் குறுகி யிசைப்பது போலக் குற்றிய லிகரக் குற்றிய லுகரங்களும் இடமும் பற்றுக்கோடும் காரணமாகக் குறுகி இசைத்தலின், இவற்றை இயல்பு என்றது என்னை யெனின், அறியாது கடாயினாய்; அவை காரணமாகக் குறுகி இசைப்பன வாயின், இங்கு ஏது தாது என்னும் வடமொழி யிறுதி உகரமும் அவ்விடமும் பற்றுக்கோடும் உடைமையின் அவை காரணமாகக் குறுகி இசைத்தல் வேண்டும். காரணம் உள்வழிக் காரியம் உண்டாதல் ஒருதலையாகலின். அங்ஙனம் இசையாமையின், இடமும் பற்றுக்கோடும் குற்றியலிகரக் குற்றியலுகரங்கள் நிற்றற்குச் சார்பாவனவே அன்றிக் குறுகி யிசைத்தற்குக் காரணம் ஆகா வெனக் கொள்க. அஃதேல், வடமொழியின் அறுவகையிடமும்

வல்லெழுத்துப் பற்றுக்கோடும் குற்றிய லுகரத்திற்குச் சார்பாகா மையின் இலக்கண வழுவாம் பிறவெனின், ஆகாது. குற்றிய லுகரம் இடமும் பற்றுக் கோடும் சார்ந்தன்றி நில்லாது என்ற தல்லது இடமும் பற்றுக் கோடும் குற்றிய லுகரத்திற்குச் சார்பா யல்லது வாராவென்னும் யாப்புறவின்மையின். குற்றிய லுகரந் தமிழ்ச் சிறப்பெழுத்தாகலின் வடமொழியின் வாராதாயிற்று. இக் குற்றிய லிகரக் குற்றிய லுகர உண்மை யறியாத உரையாசிரியர்,

இடைப்படிற் குறுகும் இடனுமா ருண்டே (மொழி. 4)

என்பதற்கு இடைப்படினும் குறுகும் என உம்மையை மாற்றி இறந்தது தழீஇயிற்றாக்குவர். அஃது ஆசிரியர் கருத்தோடு முரணும் என்பது இக்கூறியவாற்றானறிக. இன்னும் புணர்ச்சி வேற்றுமை பற்றி வேறாயிற் றென்பார்க்குக் களவு கனவு முதலிய வற்றுகரமும் புணர்ச்சி வேறுபட்டுக் குற்றிய லுகரத்துக் குரிய விதி முழுவதூஉம் பெறுதலின் அதனையும் குற்றிய லுகரம் எனக் கோடல் வேண்டும்; அவ்வாறு கொள்ளாமையின் அவர்க்கும் அது கருத்தன்றென மறுக்க.

காட்டு கூட்டு என ஆய் குறைந்து நின்ற ஏவல் வினைச் சொற்களின் வரும் உகரத்தை வினைக்கண் வரும் முற்று உகரம் என்பாரும் உளர். ஆசிரியர்,

குற்றிய லுகரத் திறுதியு முளப்பட (தொகை. 10)

எனவே யெடுத்து ஓதினமையானும், புணர்ச்சிக் கண் முற் றுகரத்திற்குரிய செய்கை பெறாமையானும் அஃது உரையன் றுறென்க.

இக் குற்றிய லிகரக் குற்றிய லுகரங்களை முற்றிய லிகர உகரங் களின் குறுக்கம் என்றவர் ஆய்தத்தினையும் அவ்வாறு ஒன்றன் குறுக்கம் எனக் கூற மறந்தார் போலும்.

இனிக் குற்றிய லுகரம் ஆயிரு மூன்றே யுகரங் குறுகிடன் என்பதனான் இடவேற்றுமை பற்றி அறுவகைப்படும் என்றும், நெட்டெழுத்தேழும் ஆய்தம் ஒன்றும் உயிர் பன்னிரண்டும் வல்லெழுத்தாறும் மெல்லெழுத்தாறும் இடையெழுத்தாறும் என்னும் அவற்றின் பகுதி முப்பத்தெட்டனுள், இடையெழுத்துக் களுள் வகரம் வல்லெழுத்துக்களோடு தொடராமையானும், உயிரெழுத்துக்களுள் ஔகாரம் மொழியிடை யிறுதிகளின் வரப்

பெறாமையானும், அவ்விரண்டும் ஒழித்து ஏனைமுப்பத்தாறும் இட வேற்றுமை பற்றி விரியாம் என்றும் கூறுவாருமுளர்.

இனி நாகு காசு என்புழியும் நீடாது குறுகாது என்புழியும் நெட்டுயிர் இறுதிக் குற்றுகரமே யாகவும், நாகு என்பதனை நெடிலிறுதிக் குற்றுகரம் எனவும் நீடாது என்பதனை உயிர்த் தொடர்மொழிக் குற்றுகரம் எனவும் ஆசிரியர் கொண்டது ஈரெழுத் தொருமொழி எனவும், இரண்டனை யிறந்த தொடர்மொழி யெனவும் பகுத்துணர்ந்து கோடற் பொருட்டாயினும் எழுத்தான் வேறுபாடின்மையின் அவ்வாறு ஆணையால் கொள்ளாது, ஆசிரியர் ஈற்றயலின் நின்ற எழுத்தை இடமாகக் கொண்டாற் போல ஈற்றயலின் நின்ற அசையை இடமாகக் கொண்டு, அவற்றுள் அது இது முதலிய முற்றுகரத்தை நீக்குதற்குக் குற்றெழுத்துத் தனியே வரும் அசையொன்றனையும் ஒழித்து ஏனைய ஏழு அசையினையும்,

நெடிலே குறிலிணை குறில்நெடில் என்றிவை
யொற்றொடு வருதலொடு குற்றொற் றிறுதியென்று
ஏழ்குற் றுகரக் கிடனென மொழிப (யா. வி. 2 மேற்கோள்)

என்பதோர் சூத்திரம் பற்றி ஏழிடம் எனக்கோடும் என்பார்க்கு, பிண்ணாக்கு, சுண்ணாம்பு, பட்டாங்கு, விளையாட்டு, இரும்பூது முதலியனவும் ஆய்தந்தொடர்ந்தனவும், நெட்டொற்றிறுதி நெடி லிறுதிக் குற்றுகரம் முதலியனவும் குற்றொற்றிறுதிக் குற்றுகரமுமாய் அடங்குமேனும், போவது வருவது ஒன்பது முதலியன அடங்கா மையறிக. நெடில் முதலாயின ஈற்றயலில் நிற்றல் வேண்டும் என யாப்புறவின்மையின், முதற்கண் நிற்பினும் ஈற்றுகரம் அவற்றிறுதி யாதல் அமையும் எனக்கொண்டு, போவது முதலியனவும் நெடி லிறுதி முதலியனவாய் அடங்கும் எனபார்க்கும், அங்ஙனம் பாகு படுத்துக் கருவி செய்ததனால் போந்த பயனின்று என்பது.

இனி இம் மூன்றுமேயன்றி உயிர்மெய் முதலியவற்றையும் சார் பெழுத்து என்பாரும் உளராலோ எனின், ஆல் என்புழி உயிர் முன்னும் மெய்பின்னும் நின்று மயங்கினாற் போல, லா என்புழியும் மெய்முன்னும் உயிர்பின்னும் நின்று மயங்கினவே யல்லது உயிரும் மெய்யுமாகிய தந்தன்மை திரிந்து வேறாகாமைக்கு,

மெய்யோ டியையினும் உயிரியல் திரியா (நூன் மரபு 10)

என்றற்றொடக்கத்துச் சூத்திரங்களே சான்றாகலான் உயிர்மெய் ஆகிய காலத்தும் குறின்மை நெடின்மை யென்னும் உயிர்த்தன்

மையும் வன்மை மென்மை இடைமையென்னும் மெய்த்தன்மையும் தம்மியல்பில் திரிவு படாமையானும், உடன்மேல் உயிர் வந்தொன் றுதல் பொன்மணிபோல இயல்பு புணர்ச்சியேயாம் என்பவாக லானும், ஒற்றுமை நயத்தான் உயிர்மெய் என்பதனைத் தகர ஞாழல் போல உம்மைத் தொகை நிலைக்களத்துப் பிறந்த அன் மொழித்தொகை என்பார்க்குத் தகரமு ஞாழலுங் கூடிய சாந்து பின்னர்த் தகரமும் ஞாழலும் ஆகாதவாறு போல மெய்யுயிர் நீங்கின் தன்னுருவாதல் பொருந்தாமையானும், துணங்கை யென் பது மெய்ம் முதல் உயிரீறு மெய்ம்மயக்கம் எனவும் வாகு என்பது உயிர்த்தொடர் மொழிக் குற்றியலுகரம் எனவும் கொள்வதன்றி உயிர்மெய் முதல் உயிர்மெய்யீறு உயிர்மெய் மயக்கம் உயிர்மெய்த் தொடர் மொழிக்குற்றியலுகரம் எனக் கொள்ளாமையின் ஒற்றுமை நயம்பற்றி ஒன்றென்பதனால் ஒரு பயனின்மையானும், மெய்கள் எல்லாம் உயிர்வந்தொன்றாது தனித்து நின்ற வழியே மாத்திரை கொள்ளவும் எழுத்தெண்ணவும் படும் என்பது அவற்றியல் பாகலின் அதுபற்றி ஒன்று எனல் வேண்டாமையானும், அவ்வி யல்பு அறிந்து கோடற்குத் தனித்து நின்ற மெய்யை ஒற்றெனவும் புள்ளியெனவும் உயிரோடு கூடிய மெய்யை உயிர்மெய் எனவும் சிறப்புப் பெயரிட்டாளுதல் ஆசிரியர் கருத்தாகலானும், உயிரோடு கூடியவிடத்து வரிவடிவுவேறுபடுதலின் அதுபற்றிப் புள்ளியில்லா எல்லா மெய்யும் என மெய்மேல் வைத்துச் சூத்திரஞ் செய்து வடி வெழுத்திலக்கணங் கூறினாரன்றி ஒலியெழுத்திலக்கணம் வேறு படக் கூறாமையானும், அளபெடை சார்பெழுத்தென வேறாகாமை முன்னர்க் காட்டப்பட்ட தாகலானும், ஐகாரக் குறுக்க முதலியன ஒரு காரணம் பற்றிக் குறுகினவாகலின் சிறுமரம் பெருத்துழியும் பெருமரஞ் சிறுத்துழியும் வேறொரு மரமாகாதவாறு போல வேறெ ழுத்தெனப்படா வாகலானும், வடநூலாரும் வடவெழுத்துள் உயி ரெழுத்தின் இறுதிக்கண் வைத்த இரண்டும் ஒற்றெழுத்தின் இறுதிக் கண் இரண்டும் ஆகிய நான்கெழுத்தும் வல்லெழுத்தின் முன் மெல் லெழுத்து வந்து மயங்குழி அவ்வவ் வல்லெழுத்தோடு ஒப்ப இடையே தோன்றுமெனப்பட்ட இயமஎழுத்து என்னும் இவை மாத்திரையே சார்பெழுத்தென வேறு கோடலன்றி உயிர்மெய் உயி ரளபெடை ஐகாரக்குறுக்கம் முதலிய எழுத்துக்களைச் சிறிது திரிந் தமை பற்றி வேறெழுத்தென யாண்டுங் கொள்ளாமையானும், அது பொருந்தாது என மறுக்க. வன்றொடர்மொழிக் குற்றிய லுகரம் வல்லெழுத்து வருவழிக் கால் மாத்திரையாய்க் குறுகுதலின் அது பற்றி அதனைக் குற்றியலுகரத்தின் வேறென்னாமையின் அவர்க் கும் அது கருத்தன்று போலும் என்க.

இன்னுமவர் ஐகாரம் மொழிமுதற் கண்ணும் குறுகும் எனவும், கை பை முதலியனவும் பொருளைச் சுட்டிய வழிக் குறுகும் எனவும் கூறினார். இடையன் மடையன் தினை பனை யென்புழிக் குறுகுதல் போல வைகலும் வைகல் வரக்கண்டும் (நாலடி 39) என்புழி ஐகாரம் முதற்கண் குறுகாமை செவிகருவியாக உணரப்படுதலானும்,அன்றியும் வைகலும் வைகல் என்புழிக் குறுகுமாயின் வைகல் என்பதனைக் குறிலிணை ஒற்றென்று அசைத்தல் வேண்டும்; வேண்டவே வெண்டளை சிதைதலானும்,

மொழிப்படுத் திசைப்பினும் தெரிந்துவே றிசைப்பினும்
எழுத்தியல் திரியா என்மனார் புலவர் (மொழி. 20)

என எல்லா எழுத்திற்கும் பொதுப்படக் கூறிய விதியோடு முரணி ஐகாரந் தெரிந்து வேறிசைத்தற்கண் திரியா தெனவும் மொழிப் படுத்து இசைப்பின் யாண்டு வரினும் திரியும் எனவும் கூறுதல் பொருந்தாமையானும்,

ஓரள பாகும் இடனுமா ருண்டே (மொழி. 24)

என்ற உம்மையான் ஓரளபாகா விடனுமாருண்டென்பது தானே பெறப்படுதலானும், ஈண்டிடமாவது மொழிமுதல் இடை கடை யென மூன்றே யன்றி வேறின்மையானும், ஐகாரம் மொழி முதற்கண் குறுகாதெனவே கொள்க. ஈண்டுக் காட்டிய ஏதுக்களானும் ஆசிரியர் ஓதாமையானும், பிறரும் குறுகிய மூவுயிர் (காரிகை. 4) என்றே யொழிதலானும், ஔகாரக் குறுக்கம் என ஒன்றின்மை யுணர்க. இஃது உரையாசிரியர் உரையானும் அறிக. எழுத்தின் குறுக்கமாவது ஓதிய முயற்சியின் மெலிதாக உச்சரித்தல். வட நூலாரும் இலகூச்சாரணம் என்பர்.

சூத்திரப் பொருள்நிலை யொருவகையான் முடிந்தது.

வேங்கடராசுலு ரெட்டியார்

இவ்வதிகாரத்தின் முதற்கண் இவ்வியலில் பெரும்பாலும் தனி யெழுத்துக்களின் மரபினை யுணர்த்துதலின் இல்வியல் நூன்மரபு என்னும் பெயர் பெற்றது.*

... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...

*நூன்மரபு பெயர்க்காரணம்பற்றிய இளம்பூரணர், நச்சினார்க்கினியர் ஆகியோர் கருத்துக்களைச் சிவஞான முனிவர் மறுத்துள்ளதை அப்படியே யேற்று எழுதினாராதலின் அவை இங்கு விடபட்டன.

ஆயின் சிவஞான முனிவர் கூறியவாறு, 'நூலினது மரபு பற்றிய பெயர் கூறுதலின் நூன்மரபு எனப்பட்டது என்று கொள்ளுதல் அமையும் எனின், அவ்வாறு கோடல் ஓராற்றான் அமையுமாயினும், அவர் கூறியவாறு (எழுத்தின் பெயர்களேயன்றி) நூன் மரபு பற்றிவரும் பெயர் அனைத்தும் ஈண்டுக்கூறப்படாமை குன்றக் கூறலாமாகலானும், இவ்வியலுட் கூறுவது தனிநின்ற எழுத்துக்களின் இலக்கணமே யாகலானும், அதுவும் உண்மைப் பொருளாதல் இன்று. ஆகலின், எழுத்துக்களின் இயல்பே இவ்வியல் முழுவதும் கூறப்பட்டதனால், இஃது எழுத்து மரபு என்றவாறாயிற்று என்றல் அமைவுடையது, மொழியின் இயல்புணர்த்திய இயல் மொழி மரபு எனப்பட்டவாறுபோல.

இவ்வியல்முழுவதும் எழுத்துக்களின் இயல்பினையே உணர்த்தியவாறு என்னை யெனின், முதற் சூத்திரத்தால் முதல் எழுத்துக்களின் தொகையும், சார்பெழுத்தின் தொகையும் கூறப்பட்டன. இரண்டாஞ் சூத்திரத்தால் சார்பெழுத்தின் பெயர் கூறப்பட்டது; மூன்றாஞ் சூத்திரமுதல், பதின்மூன்றாம் சூத்திரம் வரையிலும் எழுத்துக்களின் அளபு முதலாயின கூறப்பட்டன. அதன்மேல், பதினேழாஞ்சூத்திரம் வரை சில எழுத்துக்களின் வரிவடிவு அறிவிக்கப்பட்டது. பதினெட்டாஞ் சூத்திரத்தில் உயிர்மெய்எழுத்து ஒலிக்கும் முறைமை கூறப்பட்டது. அதன்மேல் மூன்று சூத்திரங்களால் மெய்யெழுத்தின் வகை அறிவிக்கப்பட்டன. இருபத்திரண்டாஞ் சூத்திரமுதல் முப்பதாஞ் சூத்திரம் அளவும் எழுத்துக்கள் ஒன்றொடொன்று மயங்குமுறை கூறப்பட்டது. மேல் இரண்டு சூத்திரங்களில் உயிரெழுத்துக்களுட் சிலவற்றிற்கு வேறு பெயரும் உண்டென்பதுகூறப்பட்டது. இறுதிச் சூத்திரத்தில் எழுத்துக்களின் அளபினைக் குறித்துப் பிற நூற்கொள்கை கூறப்பட்டது ஆகவே, இவ்வியல் முழுவதும் தனியெழுத்துக்களின் இயல்பேஉணர்த்தப்பட்டதாயிற்று. ஆயின், மொழி மரபிலும் எழுத்துக்களின் இயல்பே கூறப்பட்டதாகலின் அதனையும் எழுத்துமரபு எனல் வேண்டுமால் எனின், ஆண்டும் எழுத்துக்களின் இலக்கணமே கூறப்பட்டதாயினும் அது தனிமொழியின் கண்ணே அறியப்படும் எழுத்துக்களைப் பற்றியதாகலின், தனியெழுத்தின் இலக்கணத்தை மட்டும் கூறுகின்ற இவ்வியலுட் கூறாது, மொழிமரபு என வேறோர் இயலாக வகுத்து ஆண்டுக் கூறுவாராயினார் என்க. மொழிமரபு முழுவதும் தனிமொழிக்கண் அறியப்படும் எழுத்துக்களின் இலக்

கணமே கூறப்பட்டது என்பதை அவ்வியலின் முதற்கட் கூறு வேன். இவ்வாறு இவ்விரண்டியலுள்ளும் எழுத்தின் இலக் கணமே கூறப்பட்டதாகலின், இதன் வேற்றுமையைப் பெரிதாகக் கருதாராய் நன்னூலார் எழுத்தியல் என்னும் ஓரியலிலேயே இவையனைத்தும் கூறினார். அவர் வகுத்ததினும் இவ்வாசிரியர் வகுத்துக் கொண்டது சிறந்த அமைதியுடையதாகும்.

மேற்கூறியவாறு, இவ்வியல் முழுவதும் எழுத்தின் இலக் கணமே கூறப்பட்டதாயின், இவ்வியலுக்கு எழுத்துமரபு எனப் பெயரிடாது நூன்மரபு எனப் பெயரிட்டது என்னை யெனின், நூல் என்றது, ஈண்டு எழுத்தினையே குறித்துளது என்று கோடல் அமைவுடையதாகும். இப்பொருட்குத் தக்க மேற்கோள் இப் போழ்து அறியப்பட்டிலதாகலின் இன்னும் ஆராயவேண்டுவ தாயுளது. இனி,

'எழுத்தெனப்படுப......மூன்றலங் கடையே'

என்னும் முதற் சூத்திரத்தான் உணர்த்தப்பட்டது யாது என்று நோக்குவோம்.

உரையாசிரியரும் நச்சினார்க்கினியரும் இச்சூத்திரம் 'எழுத்துக் களது பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று' என்றனர். அதனைச் சிவஞான முனிவர், 'எழுத்து என்பது, ஒரு பொருள் அதற்கு அ ஆ முதலியன பெயர் என்றல் பொருந்தா மையானும், அஆ முதலிய அஆ முதலியவற்றிற்குப் பெயராதல் கூற வேண்டாமையானும்...அவருரை போலியுரையென வறிக' என்று மறுத்துக் கூறினார். அஃது அமைதியாகத் தோன்றுதலின், இச் சூத்திரம் எழுத்துக்களது பெயர் கூறுகின்றது என்றல் பொருந்து வதன்று. மற்று, ஒரு சூத்திரம் ஒரு பொருளையன்றிப் பல பொருளை நுதலும் என்றல் நூல் முறைமைக்கு ஒத்ததன்று என்பதும் ஈண்டு அறியத்தக்கது.

ஆயின் சிவஞான முனிவர் கூறியவாறு, இச்சூத்திரம், 'அகர முதலியவற்றிற்குப் பொதுப்பெயர் கூறுதல் நுதலிற்று என்று கோடல் அமையும் எனின், அதுவும் அமைவுடையதாகத் தோன்ற வில்லை. என்னெனின், கூறுவல்.

இச்சூத்திரத்தில் நுதலியதுவும் (உத்தேசியமும்) உணர்த்தி யதுவும் (விதேயமும்) யாவையென முதற்கண் அறிதல் வேண்டும். தெரிந்த பொருளை நுதலித் தெரியாதனவற்றைக் கூறுதலே

முறையாகலின், நுதலிய பொருள் மாணாக்கர்க்குத் தெரிந்ததாயும், [1]உணர்த்துவது (விதிப்பது) தெரியாததாயும் இருக்கும். ஆயின், நுதலியது தெரிந்த பொருளாயிருக்குமேல், அதனைக் குறித்துப் பின்னரும் உணர்த்துவது என்னையோ வெனின், ஈண்டு தெரிந்தது என்றல், அப்பொருளின் பொதுவியல்பினை யென்றும், தெரியாதவை என்றது அதன் சிறப்பியல்புகளை யென்றும் கொள்ளுதல் வேண்டும். உதாரணமாக—கோயில் ஒன்றனைச் சுட்டி, 'இக்கோயில் சாத்தனால் கட்டப்பட்டது' என்னுமிடத்து, நுதலிய பொருள் கோயில்; உணர்த்தியது சாத்தனால் கட்டப் பட்டது என்பது. இங்கு நுதலிய பொருளாகிய கோயில் தெரிந்த தாதலும், அஃது இன்னாராற் கட்டப்பட்டது என்பது தெரியா தானுக்கு, 'இது சாத்தனால் கட்டப்பட்டது' என்று தெரிவித்தலின் உணர்த்தியது தெரியாததாதலும் அறிக. இதனால், உணர்த்தும் பொருள் அதன்முன் தெரியாததாயே இருக்கும் என்பது பெறப்படும்.

எழுத்து என்பது இஃது என்று மாணாக்கர் யாவரும் அறிவாரா தலின், அதனை ஈண்டு உணர்த்த வேண்டுவதில்லை. ஆதலின் எழுத்தாவது இத்துணைய என்பதுவே ஈண்டு உணர்த்தல் வேண்டும். என்னெனின், எழுதவும் கற்கவும் அறிந்து கொண் டோர் பலருக்கும் முதலெழுத்துக்கள் (மூலாக்ஷரம்) இத்துணைய என்பது அறியப்படுதல் இன்று. ஆகலின், எழுத்துக்களின் தொகை ஒருதலையான் உணர்த்தல் வேண்டும். எழுதவும் படிக்கவும் அறிந்து கொண்டவருக்கு எழுத்துக்கள் இத்துணைய என்பது அறியப்படாதவாறு என்னையெனின், கற்கும் மாணாக்கருக்குச் சிறப்புடையெழுத்துக்களாகிய முதலெழுத்துக்களேயன்றிச் சிறப் பில்லாத உயிர்மெய்யெழுத்துக்களும் கற்பிக்கப்படுகின்றன வாகலின், அவர்க்கு, அவ்வெழுத்துக்களுட் சிறப்புடையெழுத்துக் கள் இவை, சிறப்பில்லாதன இவை என்பது பகுத்துணர்தல் இயலாது. ஆகலின், அகரவரி தொடக்கமாகத் தாம் கற்ற எழுத் துக்களெல்லாம் சிறப்புடையனவேயென்று நினைத்திருக்கும் மாணாக்கருக்கு, அவையெல்லாம், எழுத்தென வழங்கப்படுமாயி னும் இந்நூலுள் எழுத்துக்கள் என்று கொள்ளப்படுபவை இத் துணைய என்று அறிவித்தல் வேண்டுதலின், ஆசிரியர் இச்சூத்தி ரத்தான் விதித்தது தொகையே யாகும். இனி, பிற்காலத்தவராகிய

1. அஜ்ஞாதஜ்ஞாபகோ விதி.

குணவீர பண்டிதர் முதலெழுத்துக்கள் முப்பத்தொன்று என்றும், பவணந்தி முனிவர் சார்பெழுத்துக்கள் பத்து என்றும் கொண்டாங்கு, ஆசிரியர் தொல்காப்பியனார்க்கு முற்பட்ட ஆசிரியரும் எழுத்துக்களின் தொகைத்திறத்தில் கொள்கை வேறுபாடு உடையராய் இருந்திருத்தல் கூடும். அதனால், தங்கொள்கையைக் கூறுதல் இன்றியமையாத தாகுமாகலின் தாம் கொண்டுள்ள தொகை வேறுபாட்டைக் கூறினாராவார். [1]'மூன்று தலையிட்ட முப்பதிற்றெழுத்தின்' என்று முன்னர் எடுத்தாளுதல் காண்க. [2]இவ்வாறே தெலுங்கு கன்னடமொழிகளின் இலக்கண நூலாரும், அகர முதலியவற்றிற்கு எழுத்து என்பது பொதுப் பெயர் என்று கூறிற்றிலாமையும், தொகையைக் கூறியிருத்தலும் நோக்கத்தகும்.

உயிர்மெய்யெழுத்துக்கள் சிறப்பில்லாதவாறு என்னையெனின் எழுத்ததிகாரத்துள், செய்கைக்குப் பயன்படுவன உயிரும் மெய்யும் ஆகிய முதலெழுத்துக்களே யாதலானும், உயிர்மெய் யெழுத்துக்களைப் பிரித்து, மொழி முதற்கண்ணாயின் மெய்யெழுத்தென்றும், மொழியின் கடையிலாயின் உயிரெழுத்தென்றும் ஆளுதலானும் உயிர்மெய்யெழுத்துக்கள் சிறப்பில்லாதவையாதல் அறியப்படும்.

இனி, சிவஞானமுனிவர், 'பொருளை முன்னர்க் கூறிப்பெயர் பிற் கூறுப வாகலானும், இதற்கு இதுபெயர் என்று பொருளை முன்னர்க் காட்டிப் பெயர் கூறுதலே மரபாகலானும், ஈண்டும், ''அகரமுத னகரவிறுவாய் முப்பஃதும் எழுத்தெனப்படுப'' என்று ஓதல்வேண்டும்; அவ்வாறு ஓதாது, 'எழுத்தெனப்படுப அகரமுத னகரவிறுவாய்'' என மாறிக்கூறியது என்னையோவெனின்' என்று ஆசங்கித்து, 'நன்று சொன்னாய்; அவ்வாறு ஓதுதலே மரபாயினும் எழுத்து என்பது மங்கல மொழியாகலின், முதற்கண் மங்கலங் கூறுதல் மரபு எனக்கருதி, 'எழுத்தெனப்படுப, அகரமுத னகர விறுவாய்' என்றார் என்று கூறி நிறுவினாராயினும் அது பொருந்தாது; அவர், 'அகரமுத னகரவிறுவாய் எழுத்தெனப்படுப' என்று கூறுதலே முறையாயினும், மங்கல மொழியாகிய எழுத்து என்பதனை முற் கூறினார் என்றார். இதனால், அகரம் மங்கல மொழி

1. எழுத்து 101 முன்னர் 3, 4, 8- ஆம் சூத்திரங்களில் முறையே குற்றெழுத்து நெட்டெழுத்து உயிரெழுத்து மெய்யெழுத்து இவற்றிற்கும் தொகை கூறுதல் அறியத்தக்கது.

2. ஆந்த்ர சப்த சிந்தாமணி 1:16, கர்னாடக சப்த மணிதர்ப்பணம் 43.

யன்று எனவும், அதனை நூல் முதலில் வைத்துக் கூறுதல் தகாது எனவும் கருதினாராவர். ஒரு சிறிதும் சிதையாது இன்றுகாறும் நின்று நிலவுகின்ற திருக்குறளில் முதற்கண் அகரம் என்னும் சொல்லை நிறுத்தித் திருவள்ளுவர் செய்யுள் செய்துள்ளார். அச்சொல் (அகரம்) மங்கல மொழியன்றாயின், அவர், அகரம் என்பதனை முதற்கண் நிறுத்தாமல் எழுத்திற்ககர முதல் என்று எழுத்து என்பதனை முதற்கண் வைத்து இயற்றியிருப்பார். அவ்வாறு அவர் கூறாமையின், மங்கலமொழி யல்லாத அகரம் என்பதனை நூலின் முதற்கண் நிறுத்த குற்றத்தால், அந்நூல் இறந்தொழிந்திருத்தல் வேண்டும். அங்ஙனம் இறவாது நின்று நிலவுதலின், அகரம் மங்கலமொழியே யாதல் அறியப்படும்.

இனி இச்சூத்திரத்தில் எழுத்துக்களின் கிடக்கை முறை கூறப்படவில்லையெனினும், அகரமுதல் னகரவிறுவாய் என்றதனால் அது பெறப்படும். முன்னர்,

ஔகார விறுவாய்
பன்னீ ரெழுத்தும் உயிர் (எழுத்.8)

னகார விறுவாய்
பதினெண் எழுத்தும் மெய் (எழுத்.9)

என்றுங் கூறினாரேயன்றி, ஆண்டும் அவற்றின் கிடக்கைமுறை கூறினாரல்லர். எழுத்துக்களின் கிடக்கைமுறை மாணாக்கர் அறிந்ததாதலின், ஆசிரியர் எழுத்துக்களையெல்லாம் கூறாமல், முதலும் இறுதியுமே அனுவதித்தார். நெடுங்கணக்கினுள் எழுத்துக் கிடக்கும் முறையை ஈண்டே கூறுதல் தக்கது. இச்சூத்திரம், அகரம் முதலியவற்றிற்குப் பொதுப்பெயர் கூறுதல் நுதலிற்று என்றே கொண்ட சிவஞானமுனிவரும் எழுத்துக்களின் முறையை இச்சூத்திரவுரையிற் கூறியது காண்க.

அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ
க, ங, ச, ஞ, ட, ண, த, ந, ப, ம, ய, ர, ல, வ, ழ, ள, ற, ன

எனவரும். இனி எழுத்துக்களை இவ்வாறு வைக்கப்பட்டதன் காரணம் கூறுவல். உயிரெழுத்துக்கள் தனித்து இயங்கும் இயல்பின வாகலின், அவை அவ்வியல்பு இல்லாத மெய்யெழுத்துக்கட்கு முன் வைக்கப்பட்டன. அவற்றுள் அகரம், வேறு முயற்சியின்றி வாயங்காந்து கூறப்பிறத்தலின், அச்சிறப்பு நோக்கி முதற்கண்

வைக்கப்பட்டது. அதனையே பின்னும் ஒரு மாத்திரையளவு நீட்டி ஒலிக்கப் பிறத்தலின் ஆகாரம் அதன்பின் வைக்கப்பட்டது. மேல் குற்றெழுத்துக்களுக்குப் பின்னர் நெட்டெழுத்துக்களை நிறுத்திய தற்கும் இவ்வாறே கொள்க. இகரம், மேற்பல்லின் அணியவிடத்தில் நாவிளிம்பு உறப் பிறத்தலின் பிறப்பிடம் நோக்கி அதன் பின் வைக்கப்பட்டது. உகரம் இதழ் குவித்து ஒலிக்கப் பிறத்தலின் பிறப்பிடம் நோக்கி இகரத்தின் பின் வைக்கப்பட்டது. உயிரெழுத்துக்களுள் அ, இ, உ, என்னும் மூன்றுமே சிறப்புடையன. அதனானே அவை, பொருள்களைச் சுட்டி உணர்த்த வரலாயின. எகரம், இகரம் பிறக்குமிடத்தே பிறப்பதாகலானும், [1]இகரவொலியினது திரிபாகலானும் அச் சிறப்பின்மை நோக்கி உகரத்தின் பின் வைக்கப்பட்டது. ஐகாரம் அகரமும் இகரமும் கூடிப் பிறப்பதாகலின் அஃது ஏகாரத்தின் பின் வைக்கப்பட்டது. ஒகரம், உகரம் பிறக்குமிடத்தே பிறப்பதாதலானும் [2]உகர ஒலியினது திரிபாகலானும், அகர இகரம் கூடிப் பிறக்கும் ஐகாரத்தின் பின் வைக்கப்பட்டது. ஔகாரம், அகரமும் உகமுரம் கூடிப் பிறப்பதாகலின், ஓகாரத்தின்பின் வைக்கப்பட்டது. ஆகவே, பிறப்பிடத்து முறையும், சிறப்பும் சிறப்பின்மையும் நோக்கியே உயிரெழுத்துப் பன்னிரண்டும் வைக்கப்பட்டுள்ளன.

---

1. இகர எகரங்கள், மொழி முதற்கண் ஒன்றற்கொன்று மருவி வழங்குதல் உளது. சிவப்பு—செவப்பு; கிணறு—கெணறு; விலை—வெலை; விறகு—வெறகு என்பன் போலக் காண்க. இதி—(எதிர்), திளி—(தெளி) என்று கன்னடத்திலும், செற—(சிறை), எட—(இடை), வெரகு—(விரகு) என்று தெலுங்கிலும் வழங்குதலின் இகர எகரங்கள் ஒன்றற் கொன்று வழங்கு மென்றல் அறியப்படும். வடநூலார் அகர இகரங்களின் சந்தியக்கரம் ஏகாரம் என்பர்.

2. உய்—ஒய்; தொளை—துளை; துடை—தொடை; தொகை—துகை எனச் செய்யுளிலும் வழக்கிலும் உகர ஒகரங்கள் விரவி வருகின்றன. உய்—(ஒய்); சுரிவ—(சொரிவ) எனக் கன்னடத்திலும், பொகட்த— (புகழ்தல்) மொக்கலு—(முகைகள்) எனத் தெலுங்கிலும் வழங்குதலின் உகர ஒகரங்கள் விரவிவருதல் அறியப்படும். வடநூலார் அகர உகரங்களின் சந்தியக்கரம் ஓகாரம் என்பர்.

இனி, எகரம் அகரக்கூறும் இகரக்கூறும் கலந்து பிறப்பதாகலானும் ஒகரம் அகரக் கூறும் உகரக் கூறும் கலந்து பிறப்பதாகலானும் அம்முறைபற்றி அவை அங்ஙனம் நிறுத்தப்பட்டன என்று கொள்ளாமோ எனின், அவை அவ்வாறு பிறத்தல் உண்மையே யாயினும், வடமொழியில் தெற்றெனப் புலனாதல் போலத் திராவிட மொழிகளிற் புலனாதல் இன்மையின், அது கூறிப் பயனின்றென்க. கேரள பாணினீய ஆசிரியர்,

“எ ஒக்களில்உள்ள கூட்டம் வடமொழியிற்போல் நமது மொழியில் அத்துணைத் தெளிவாதல் இல்லை. வடமொழியில், உப + இந்த்ர = உபேந்த்ர; கங்க + உதகம் = கங்கோதகம் முதலிய சொற்களின் சந்தியில் புணர்ச்சி தெளிவாதல் போல, நமது மொழியில் தெளிவாகக் காண்டற்கு வழியில்லை. சேர்க்கையின் நொய்ம்மையால் (ஶைதில்யத்தால்) வடமொழியில் ஏகார ஓகாரங்கட்குக் குறில்கள் இலவாயின. நமது மொழியிலோ, சேர்க்கையின் திண்மையினால் ஏகார ஓகாரங்களைத் தனியெழுத்துக்களாக எண்ணினமையின், நெடில் குறில் என்னும் வேறுபாடும் உண்டாயிற்று” என்று எழுதியிருத்தல் ஈண்டைக்கு நோக்கத்தகும்.

இனி அகரமும் யகரமெய்யும் இகரமும் கூடி ஐகாரமும், அகரமும் வகரமெய்யும் உகரமும் கூடி ஔகாரமும் பிறக்கும் என்று சிவஞான முனிவர் கூறினாரால் எனின், அது தொல்காப்பியனார்க்குக் கருத்தன்றென்பது முன்னர் மொழிமரபில் “அகர இகரம் ஐகாரமாகும்” என்றற் றொடக்கத்துச் சூத்திரங்களின் ஆராய்ச்சியில் விளங்கக் கூறுவேன். ஆண்டுக் காண்க. மேற் காட்டியவாறு உயிரெழுத்துக்களின் வைப்பு முறை அறிந்து கொள்க. இனி மெய்யெழுத்துக்களின் முறை வருமாறு:

ககார ஙகாரங்கள் அடிநா அடியண்ணத்தையுறப் பிறத்தலின் முதலில் வைக்கப்பட்டன. சகார ஞகாரங்கள் இடைநா இடையண்ணத்தையுறப் பிறத்தலின் அவற்றின்பின் வைக்கப்பட்டன. டகார ணகாரங்கள் நுனிநா நுனியண்ணத்தையுறப் பிறத்தலின் அவற்றின் பின் வைக்கப்பட்டன. [1]றகார னகாரங்கள் நுனி

---

1. தமிழில் சுற்றம், புற்று, பற்று, சுற்று என்பனவற்றிலுள்ள இரட்டித்த றகரம் (ற்ற) தெலுங்கில் சுட்டமு, புட்ட, பட்டு, சுட்டு என இரட்டித்த டகாரம் (ட்ட) ஆயும்,

நாக்கு மேல் வளைந்து சென்று அண்ணத்தை ஒற்றப் பிறத்தலின் டகார ணகாரங்களை யடுத்து வைக்கப்படல் வேண்டும், இவ் விரண்டெழுத்துக்களும் வடமொழியில் இல்லாமையின் ஈற்றில் வைக்கப்பட்டன.

தகார நகாரங்கள் மேற்பல்லின் அடியில் நா நுனி பரந்து ஒற்றப் பிறத்தலின் (ற னக்களின் பின்னர் வைக்கப்பட வேண்டு வனவாகவும், ற னக்கள் இறுதியில் வைக்கப்பட்டதனால்) ட ண, களின் பின்னர் வைக்கப்பட்டன. பகார மகாரங்கள் இதழ்கள் சேரப் பிறத்தலின், த நக்களின் பின்வைக்கப்பட்டன. இவற்றால், அடியண்ண முதல் இதழ் வரையிலும் உள்ள இடங்களிற் பிறத்தல் காரணமாக, க—ங, ச—ஞ, ட—ண, ற—ன, த—ந, ப—மக்கள் முறையாய் அமைவனவாதல் அறிக. க ஙக்கள் முதலியனவற்றுள் இரண்டிரண் டெழுத்துக்கள் ஓரோரிடத்திற் பிறப்பன வாயினும் வல்லெழுத்துக்கள் மார்பின் வலியாற் பிறந்து வலியவாய் ஒலித்த லானும், மெல்லெழுத்துக்கள் மூக்கின் வளியாற் பிறந்து மெலிய வாய் ஒலித்தலானும் அச்சிறப்பு நோக்கி வல்லெழுத்துக்கள் முன்னும், சிறப்பின்மை நோக்கி மெல்லெழுத்துக்கள் அவற்றின் பின்னும் வைக்கப்பட்டன.

இனி இடையெழுத்துக்களின் முறை வருமாறு: [2]மிடற்று எழுந்த வளி அண்ணம் சேர்ந்து பிறத்தலின் யகரம் முதலில்

---

கன்னடத்தில் சுத்தம், புத்து, பத்து, சுத்து என இரட்டித்த தகாரம் (த்த) ஆயும் வழங்குதலானும், தமிழ் மொழியிலும் கன்னடத்திற் போலவே இரட்டித்த தகாரம் (த்த) ஆய் வழங்கி வருதலானும், ற்ற என நன்கு ஒலித்தல் எளிதன்று என்பது புலனாகும். ற்ற என்பதை அதன் பிறப்பிடத்திற்குச் சிறிது மேலிடத்தில் ஒலிக்கின் அதுட்ட எனவும், கீழிடத்தே ஒலிக்கின் த்த எனவும் ஒலிக்கும். இதனானும் றகாரம் டகார தகாரங்கள் பிறக்கும் இடத்திற்கு இடைப்பட்ட இடத்தே பிறப்ப தால் அறியப்படும்.

2. 'அடிநா அடியணம் உற யத் தோன்றும்' என்னும் நன் னூலார் கொள்கையின் படியாயின், யகரவொலி திண்ணி தாய்க் கேட்கப்படும். இவ்வாசிரியர் கூறியவாறாயின், இஃது உயிரொலி போல—இகரவுயிர் போலக் கேட்கப் படும்.

வைக்கப்பட்டது. நுனி நாக்கு மேற் சென்று அண்ணத்தை வருடு தலான் ரகரமும் ழகரமும் பிறப்பனவெனினும் அவற்றுள்ளும் இடம் நோக்கி ழகரம் முன்னும் ரகரம் அதன் பின்னும் வைக்கப் படல் வேண்டும். ஆயினும், ழகரம் வடமொழியில் இல்லாமையின் வடமொழியிலுள்ள இடையெழுத்துக்களின் பின் — அஃதாவது யரலவக்களுக்குப் பின் — வைக்கப்பட்டது. ரகாரம் பிறப்பிடம் நோக்கி (ழகாரத்தின் பின்னர் வைக்கப்பட வேண்டுவ தாயினும் ழகாரம் வகாரத்தின் பின்னர் வைக்கப்பட்ட தனுன்) யகாரத்தின்பின் வைக்கப்பட்டது. [னகாரம் நாவிளிம்பு தடித்து அண்ணத்தை வருடப் பிறத்தலின், அது, ரகாரத்தின் பின்னர் வைக்கப்பட வேண்டுவதாயினும், வடமொழியில்[1] தனி யெழுத்தாக இல்லாததனான் ழகாரத்தின் பின்னர்வைக்கப்பட்டது. ழகாரம் ளகாரம் ஆகிய இரண்டெழுத்துக்களும் வடமொழியில் இல்லையாயினும் அவற்றுள்ளும் பிறப்பிடம் நோக்கி ழகாரம் முன்னும் ளகாரம் பின்னுமாக வைக்கப்பட்டன. நாவிளிம்பு தடித்து அண்பல்லடியை யொற்றுதலான் லகாரம் பிறக்கின்ற தாகலின், அது, ழகார ளகாரங்களின் பின்னர் வைக்கப்பட வேண்டுவதாயினும் அவ்விரண்டெழுத்துக்களும் ஈற்றில் வைக்கப் பட்டமையின் அது ரகாரத்தின்பின் வைக்கப்பட்டது. வகாரம் மேற்பல்லும் இதழும் இயையப் பிறத்தலின், அது லகாரத்தின் பின்னர் வைக்கப்பட்டது. ஆகவே இடையினங்கள் ஆறும் பிறப் பிடம் காரணமாக ய,ழ,ர,ள,ல,வ என வைக்கப்பட வேண்டுவன. அவற்றுள் ழகார ளகாரங்கள் வடமொழியில் இல்லாமை கருதி ஈற்றில் வைக்கப்பட்டனவாகலின், ய,ர.ல,வ,ழ,ள என்று அமைந்துள்ளன. இவற்றால்,

| | | |
|---|---|---|
| அ ஆ | க ங | இவை அடியண்ணத்திலும் |
| இ ஈ எ ஏ ஐ } | ச ஞ ய | இவை இடையண்ணத்திலும் (தாலத் திலும்) |
| — | டணழர | இவை நுனியண்ணத்திலும் |
| — — | றன (ள) | இவை [2]நுனியண்ணத்தையடுத்த இடத் திலும் |
| — | த ந ல | இவை பல்லினடியிலும் |
| உ ஊ ஒ ஓ ஔ } | ப ம வ | இவை இதழிலும் |

பிறப்பனவாதல் தெளிவாகும்.

---

1. லகாரமே ளகாரமாகவும் ஒலிக்கப்படும்.
2. இவ்விடம் வர்த்ஸம் எனப்படும்.

இச்காட்டிய முறையான், உயிரெழுத்துச்களுட் சிறப் பெழுத்துக்களாய அ ஆ இ ஈ உ ஊக்கள் அடியண்ண முதல் இதழ் இறுதியாகப் பிறப்பனவாதலும், அவற்றின் திரிபாகிய எ ஏ ஐ ஒ ஓ ஔ இவை பல்லின் அணிய இடம் முதல் இதழ் இறுதியாகப் பிறப்பனவாதலும், மெய் யெழுத்துச்களுள், சங, சஞ, டண, றன, தந, பம ஆகிய இப்பன்னிரண்டும் அடியண்ணம் முதல் இதழ் இறுதியாகவுள்ள இடங்களில் பிறப்பனவாதலும் ய ழ ர ள ல வ ஆகிய ஆறும் இடையண்ணம் முதல் இதழ் இறுதியாகவுள்ள இடங்களில் பிறப்பனவாதலும், இவையெல்லாம் பெரும்பாலும் பிறப்பிடமே காரணமாக முறையமைந்து நிற்பனவாதலும் அறியப்படும். இப்போதுள்ள வைப்பு முறையில் ழ ள, ற ன இந் நான்கும் ஈற்றில் வைக்கப்பட்டதன் காரணம் மேலே கூறியுள் ளேன். இந்நான்கனுள்ளும் ழ ளக்கள் இடையெழுத்துக்களாதலின் அவை இடையெழுத்துச்களைச் சார வைக்கப்பட்டன.

அடியண்ணமுதல் இதழ் வரையிலும் உள்ள இடங்களே அகரம் முதல் ஔகார மீறாய பன்னிரண்டு உயிரெழுத்துக்களுக் கும், ககர முதல் பகரம் ஈறாய ஆறு வல்லெழுத்துக்களுக்கும், ஙகர முதல் மகரம் ஈறாய ஆறு மெல்லெழுத்துக்களுக்கும், யகர முதல் வகரம் ஈறாய ஆறு இடையெழுத்துக்களுக்கும் பிறப்பிட மாயின், அவை வெவ்வேறினங்களாதற்குக் காரணம் என்னை யெனின் கூறுவேன்:

நம் உடம்பினுள் சுவாசப் பையினின்று வெளிப்படும் வளி (வாயு), குரல்வளையுட் புகுந்து, அடியண்ணம் இடையண்ணம் முதலிய இடங்களிற்பட்டு வெளிப்படுதலின் ஒலியுண்டாகின்றது. அவ்வளி, அடியண்ணம் முதலிய இடங்களிற் படுகையில் நாவின் செய்கையால் ஒலி வேறுபடுவதாகும். எழுத்துக்களுக்கு வெவ் வேறு வகை ஒலியுண்டாவதன் காரணம் ஐந்து வகைப்படும். அவையாவன:

1. உள்முயற்சி—அஃதாவது, உண்ணின்றெழும் வளியை வெளியே விடுதலில் உண்டாகும் முயற்சி வேறுபாடு. வளியை நாவின் நுனி, இடை, அடி, விளிம்பு ஆகியவற்றுள் ஒன்றனால், அடியண்ணம் இடையண்ணம் முதலிய இடங்களில் தடுத்தும் தடுக் காமலும் வெளிவிடுதல் கூடும். தடுக்கும் போழ்து சிறிதளவு தடுத் தலும் முழுவதும் தடுத்தலும் இயலும். (வளியை நாவினால் தடுக்காது விடுதலை அஸ்ப்ருஷ்டம்', என்றும், முழுதுந் தடுத்து

விடுதலை ஸ்ப்ருஷ்டம் என்றும் சிறிதளவு தடுத்தலை ஈஷத்ப்ருஷ்டம் என்றும் வடமொழியிலே வழங்குவர்.) உயிரெழுத்துக்களை ஒலிக்கும் போழ்து வளியை நாவினால் தடுக்காமல் வெளிவிடுகின்றோம். அப்பொழுது நாவின் நுனி, இடை, அடி, விளிம்பு முதலியவற்றுள் ஒன்றனால் அடியண்ணம், இடையண்ணம், இதழ் முதலிய இடங்களில் தொடுதல் நேரினும், வெளிப்படும் வளியினைத் தடுத்தல் இன்று. வல்லெழுத்துக்களையும் மெல்லெழுத்துக்களையும் ஒலிக்கும் போழ்து இதற்கு நேர்மாறாக, நாவின் அடி, இடை முதலியவற்றால் அடியண்ணம் முதலிய இடங்களில் வளியை நன்கு தடுக்கின்றோம்; தடுத்து, பின்னர் வெளிவிடும் போழ்து உண்டாகும் ஒலியே வலி மெலியெழுத்துக்கள் ஆகின்றன, இடையெழுத்துக்களை ஒலிக்கும் பொழுது வளியைச் சிறிதளவு தடுக்கின்றோம். வளியைத் தடுக்காமல் வெளிவிடுதலின் உயிரெழுத்துக்கள் தாமே ஒலிக்க இயல்கின்றன. வளியை நன்கு தடுத்தலின் வல்லெழுத்து மெல்லெழுத்துக்கள் தாமே ஒலிக்க வருவனவாயில்லை; சிறிதளவு தடுத்தலின், இடையெழுத்துக்கள் தாமே ஓராற்றான் ஒலிக்க இயலுதல் கூடும். [1]ஒலிக்குந் திறத்தில் உயிரெழுத்துக்கட்கும் வல்லெழுத்து மெல்லெழுத்துக்கட்கும் இடைப்பட்டிருத்தலானே யரல வழளக்கள் இடையெழுத்துக்கள் எனப்பட்டன. இவற்றால் உயிர் எழுத்து வல்லெழுத்து முதலியவை வெவ்வேறு வகையானதன் காரணம் அறியப்படும்.

2. வெளி முயற்சி—அஃதாவது வளியை வெளிவிடுகையில் நிகழும் முயற்சி. நமது குரல்வளையினுள் இருபக்கத்தும் புரை போன்ற ஜவ்வுக்கள் (Vocal Chords) உள்ளன. நாம் சில வெழுத்துக்களை யொலிக்கையில் அவை இருபக்கத்தும் பிரிந்திருக்கும்;

---

1. வல்லெழுத்தின் பிறப்பிடமாகிய உரத்திற்கும் மெல்லெழுத்தின் பிறப்பிடமாகிய மூக்கிற்கும் இடைப்பட்ட இடமாகிய மிடற்றிற் பிறத்தலின் யரலவழளக்கள் இடையினம் எனப்பட்டன என்றல் பொருந்தாது; இவ்வாசிரியர் வல்லெழுத்துக்கட்கும் இடையெழுத்துக்கட்கும் இவ்வாறு பிறப்பிடம் கூறாமையின். இனி, நன்னூலார் கூறியுள்ளாரால் எனின், அவர் உயிர் எழுத்துக்கட்கும் அதுவே பிறப்பிடமாகக் கூறினராகலின், அம்முறையின் அவ்விரண்டும் வெவ்வேறு இனங்களாதல் அமையாதன்றே என்க.

சிலவெழுத்துக்களை யொலிக்கையில் சேர்ந்திருக்கும். ஜவ்வகள் பிரிந்திருக்கும் போது குரல்வளை விரிந்திருக்கும்; அதற்கு விவ்ருத கண்ட்டம் என்று பெயர். ஜவ்வுகள் சேர்ந்திருக்கும் போது குரல்வளை சுருங்கியிருக்கும். அதற்கு ஸம்வ்ருத கண்ட்டம் என்று பெயர். [1]விவ்ருத கண்ட்டத்தில் நிகழும் கார்யம் சுவாசம் (Breath) எனப்படும். [2]ஸம்வ்ருதகண்ட்டத்தில நிகழும் கார்யம் நாதம் (Voice) எனப்படும். [3]வல்லெழுத்துக்கள் சுவாச காரியம் (Breathed); மற்றெல்லா வெழுத்துக்களும் நாதகாரியம் (Voiced). [4]இவற்றால் வல்லெழுத்துக்கள் தனியினமான தன் காரணம் அறியப்படும்.

3. கூட்டம்—அஃதாவது ஓரொலியில் மற்றோர் ஒலியையும் ஒருங்கு சேர்த்தல். செம்பினையும் ஈயத்தையும் உருக்கியமைத்த வெண்கலத்தில் அவ்விரண்டு பொருளும் வேறு பிரித்தறிய முடியாதபடி ஒன்றேயாகத் தோன்றுதல் போல, இரண்டு ஒலிகளின் சேர்க்கையால் ஓரொலியேயாய்க் கேட்பது. வடமொழியில் ஏகார ஓகாரங்கள் உ1கார உபகாரங்கள் முதலியன இத்திறத்தன. தமிழ்மொழியில் ஐகார ஔகாரங்களை ஒராற்றான் இவ்வாறு கொள்ளுதல் கூடும். அ+இ=ஐ : அ+உ = ஔ.

4. வழிவேறுபாடு—அஃதாவது உண்ணின்றெழுந்த வளி வெளியே வரும் வழிகளின் வேறுபாடு உண்ணின்று வெளிப்படும் வளியின் ஒலியே எழுத்தாகின்றதன்றே? அடியண்ணம் வரை வந்த வளியை, அதன்மேல், வாயின் வழியாகவாதல் மூக்கின் வழியாக வாதல் வெளிவிடுதல் கூடும். வல்லெழுத்துக்கள் ஒழிந்த எழுத்துக்களை ஒலிக்கும் பொழுது, குரல்வளையின் புரை

---

1. விவ்ருதே ஶ்வாஸ! (தைத்ரீயப்ராதி ஶாக்யம் 2 : 5)
2. ஸம்வ்ருதே கண்ட்டே நாத: க்ரியதே (,, 2:4)
3. வடமொழியில் வர்க்காக்ஷரங்களுள் இரண்டாமெழுத்துக்களும் விஸர்க்கமும் சுவாச காரியமே.
   அகோஷேஷு ஶ்வாஸ் (தைத். ப்ரா. 2:10)
4. நாதோநுப்ரதாநம் ஸ்வரகோஷவத்ஸு" (தைத். ப்ரா.2:8)
5. ககாரமும் ஹகாரமும் சேர்ந்து க²காரமும் க³காரமும் ஹகாரமும் சேர்ந்து க⁴காரமும் தோன்றும். வருக்க வல்லெழுத்துக்களுள் இரண்டும் நாலும் இவ்வாறே இரண்டிரண்டெழுத்துக்களாலாயவை.

(துவாரம்) சுருங்கச் செய்து, சிறிது சிறிதாக வெளிவரும் வளியை மூக்கின் வழியாக வெளிவிட்டால், அவ்வொலி மெல்லெழுத்துக் களாய்ப்பிறக்கும். [1]உயிரெழுத்துக்களும் இவ்வாறே மூக்கின் வழி யாக ஒலித்தல் உண்டு என்றும், அதனால், அவையும் அனுநாசி கங்கள் ஆகும் என்றும், [2]யவலக்களும் அனுநாசிகமாய் வரும் என்றும் கூறுவர்.

5. இடவேறுபாடு—அஃதாவது, வாயின் உள்ளிடங்கள். அவையே எழுத்துக்களின் பிறப்பிடங்களாகும். அவ்விடங்களாவன (1) அடியண்ணம் (2) இடையண்ணம், (3) நுனியண்ணம் (4) நுணியண்ணத்தை யடுத்த இடம் (வர்த்ஸம்) (5) பல், பல்லின் மேலிடம் (6) இதழ். இவ்விட வேறுபாட்டானே வல்லெழுத்து மெல்லெழுத்துக்கள் ஆறு ஆறு ஆயின.

இதுகாறும் கூறியவாற்றால், எழுத்துக்கள்-உயிரெழுத்து வல்லெழுத்து, மெல்லெழுத்து, இடையெழுத்து என்று வேறுவேறு இனங்களாயதன் காரணம் அறியப்படும்.

இவையெல்லாம் வடமொழிப் ப்ராதிஶாக்யம் முதலிய இலக் கணங்களினாலும், ஸ்ரீராஜராஜவர்ம கோயிற்றம்பிரானவர்கள் எழுதியுள்ள கேரளபாணினீயத்தினாலும் அறியப்பட்டன.

### சுப்பிரமணிய சாஸ்திரியார்

'அலங்கடைக்கண்' என்றது 'கண்' உருபு தொக்கு 'அலங் கடை' என்றாயிற்று. ஆகவின் அஃது ஏழாம் வேற்றுமை உருபு தொக்க சொல். 'கடை' என்றது இடப்பொருளை உணர்த்தும் பெயரேயன்றி உருபு அன்று; உருபாயின் 'அல்' என்ற பகுதியைப் பெயராகக் கருதுதல் வேண்டும்; அஃது அன்மைப் பொருளைக் காட்டும் வினைப்பகுதியாய் இருக்கின்றமையான் பெயராகாது. ''அலங்கடைகண்' என்றவிடத்து உள்ள ஏழாம் வேற்றுமையருபு,

ஐயுங் கண்ணும் அல்லாப் பொருள்வயின்
மெய்யுருபு தொகா இறுதியான (தொல். சொல். 105)

என்ற சூத்திரத்தான் தொக்கதென்க.

---

1. ஸித்தாந்த கௌமுதீ 8 9. விருத்தி.
2. ,, 14. விருத்தி, ஸாரப்தமணி 23

இச்சூத்திரத்துள் 'எழுத்து' என்பது வரிவடித்தினையும் குறிக்கின்றதெனச் சிலர் கருதுகின்றனர். ஒலியெழுத்தினையே குறிக்கின்றதென்பது பின்வரும் காரணங்களான் விளங்கும். மூன்றாஞ் சூத்திரத்துள்ள 'அவற்றுள்' என்றது முதற்சூத்திரத்திற் கூறப்பட்ட எழுத்தினைக் குறிக்கின்றது. அங்கு 'ஓரள பிசைக்கும் குற்றெழுத்தென்ப' என்றதனால் ஒலியெழுத்தே குறிக்கப்படும். இவ்வாறே நான்காஞ்சூத்திரத்துள்ள 'ஈரள பிசைக்கும்' என்றதும் ஐந்தாஞ் சூத்திரத்திலுள்ள 'மூவள பிசைத்தல்' என்றதும் ஒலியெழுத்தினையே குறிக்கும். அன்றியும் பத்தொன்பதாவது சூத்திரத்தில் ''வல்லெழுத்தென்ப கசடதபற'' என்றார் ஆசிரியர். 'க' என்ற குறிக்கு க, ஹ, க³ என்ற ஒலி இருந்திருப்பின் அதனை வல்லெழுத்தென்று கூறுர். அவ்வாறே ச, ட, த, ப இவற்றிற்கும் கொள்ளல்வேண்டும். வரிவடிவத்தைக் குறிக்க வேண்டின் உருபு இயற்கை முதலிய சொற்களை அவர் வழங்குகின்றனர். ஆகலின் நூன்மரபு 14, 15, 16, 17 முதலிய சில சூத்திரங்களைத் தவிர்த்து எஞ்சியவற்றில் ஒலியெழுத்தைப் பற்றியே கூறினர் என்க.

ஒலிவடிவான எழுத்து முப்பது என்று இச்சூத்திரத்திற் கூறப்பட்டமையான் பண்டைத்தமிழில் க³ ச³ ட³ த³ ப³ என்ற ஒலிகள் இல்லையென்பது வெளிப்படை. ஆகலின் தமிழ் மொழியில் ஒரே வடிவெழுத்திற்கு வெவ்வேறிடங்களில் வெவ்வேறொலியுள என்ற டாக்டர் கால்டுவெல் கூற்று பண்டைத் தமிழிற் கொவ்வாது.

இச்சூத்திரத்தில் அகரம் முதல் னகரம் இறுதியாக முப்பதும் எழுத்து என்று கூறப்பட்டமையானும், எட்டு ஒன்பதாவது சூத்திரங்களில் பன்னிரண்டெழுத்துக்கள் உயிரென்றும் பதினெட்டு எழுத்துகள் மெய்யென்றும் கூறப்பட்டமையானும் ஆய்தத்தை ஔகாரத்திற்குப் பின்னரும் ககரத்திற்கு முன்னரும் படிக்கும் வழக்கம் தொல்காப்பியனார் காலத்தில் இல்லையெனத் தோன்றுகின்றது. ஆயினும் வீரசோழியவாசிரியர் காலத்திற்கு முன்னர் அவ்வழக்கம் வந்திருத்தல் வேண்டும் என்பது,

அறிந்தவெழுத் தம்முன் பன்னிரண்டாவிக ளானதம்முன்
பிறந்தபதி னெட்டு மெய்நடு வாய்தம் பெயர்த்திடையா
முறிந்தன யம்முத லாறு ஙஞண நமன வென்று
செறிந்தன மெல்லினம் செப்பாத வல்லினந் தேமொழியே
(சந்திப்படலம். 1.)

என்ற வீரசோழியச் செய்யுளால் விளங்கும். அதன் பின்னர் நேமி நாதம் உடையார் ஆய்தத்தை முதல் எழுத்தாகக் கருதி,

ஆவி யகரமுத லாறிரண்டா மாய்தமிடை
மேவுங் ககரமுதல் மெய்களா—மூவாறும்
கண்ணு முறைமையாற் காட்டியமுப் பத்தொன்று
நண்ணுமுதல் வைப்பாகும் நன்கு (நேமி. எழுத். 1)

என்ற வெண்பாவில் முதல் எழுத்து முப்பத்தொன்று என்றனர். ஆயினும் பின்னுள்ளோர் அதனைச் சார்பெழுத்தாகவே கொண்டனர்.

'உலகத்தில் எழுதப்பட்டவை யெல்லாம் எழுத்தாமன்றே; அதனை யீண்டாளுதற் பொருட்டு முதல்நூல் ஆசிரியனால் வரை யறுத்துக் கொள்ளப்பட்டதென நியம விதியாகக் கொள்ளினும் அமையும்' என்று கூறினர் சிவஞான முனிவர் 'எழுத்து' என்றது இச்சூத்திரத்தில் ஒலிவடிவத்தைக் குறிக்கின்றது என முன்னர்க் கூறப்பட்டமையானும், குறியிடுதற்கு முன் குறிகள் அறியப்படாமையின் குறியீடு சூத்திரங்கள் நியமவிதியாகக் கொள்ளப்படாமையானும் அவ்வாறு கூறுதல் பொருந்தாதென்க.

'எனப்படுப என்ற சிறப்பான் அளபெளடையும் உயிர் மெய்யும் வரிவடிவும் சிறப்பில்லா எழுத்தாகக் கொள்ளப்பட்டன' என்பர் உரையாசிரியர். அவ்வாறே கூறுவர் நச்சினார்க்கினியரும். அளபெடை ஓர் எழுத்தன்று என்பது மூவள பிசைத்தல் ஓரெத் தின்றே'' (தொல். எழுத் 5) என்ற சூத்திரக் குறிப்பிற் கூறப்படும் ஆகலானும், உயிர் மெய் ஓரெழுத்தாகாமையானும் வரிவடிவத்தை எழுத்தாக ஆசிரியர் வழங்காமையானும் அவ்விருவர் கூற்றும் பொருந்தாதென்க.

## சிவலிங்கனார்

இளம்பூரணர் 'னகரம் வீடுபேற்றுக்குரிய ஆண்பாலை யுணர்த்துதற் சிறப்பான் பின் வைக்கப்பட்டது' என்றதன் கருத்து பெண்பாலை வீடுபேற்றுக்குரியதன்று என விலக்கிய தாகக் கொள்ளக்கூடாது. னகர எழுத்தை இறுதிக்கண் அமைத்த தற்கு அமைதி கூற வந்தவர் 'னகரம் ஆண்பாலையுணர்த்தும்; அவ்வாண்பால் வீடுபேறடைதற்குரியது; எனவே னகரத்துக்கு வீடுபேறடையும் ஆண்பாலை உணர்த்துகின்ற ஒரு சிறப்பு இருக்

கின்றது; அதனால் அது பின் வைக்கப்பட்டது' என்று விளக்கம் கொள்ளும்படி அவ்வாறெழுதினார் எனக்கொள்க. அதனால் தான் நச்சினார்க்கினியரும் இக்கருத்தினராக வீடுபேற்றுக்குரிய ஆண்பால் என்னாமல் 'ஆண்மகன்' என்றார்.

அகரத்தை முதலிலும் னகரத்தை யிறுதியிலும் அமைத்தவர் தொல்காப்பியர் அல்லர்; அவர் தம் முன்னோர். 'என்ப' என்றதைக் காண்க. முன்னோர் கூற்றும் அவர் கூற்றாகக் கொண்டு உரையாசிரியர்கள் அவ்வாறெழுதினார்கள்.

திரு. சுப்பிரமணிய சாத்திரியார் அவர்கள் டாக்டர் கால்டுவெல் ஐயர் கூறியதை மறுத்ததிலிருந்து ஓர் கருத்தும் நாம் பெறலாம். தொல்காப்பியர் காலத்தில் ககரம் முதலியனவற்றுக்கு வெவ்வேறிடங்களில் வெவ்வேறொலிகள் இல்லை என்பதும் அவர் காலத்துக்குப் பின்னர் தமிழ் மக்கள் தாங்கள் ஒலித்த முயற்சி வேறுபாட்டால் வெவ்வேறொலிகள் உண்டாயின என்பதும் அறியப்படும். ஓரெழுத்துக்கு ஓர் ஒலியே முதற்கண் இருந்தது என்பதைக் கொண்டால் வடமொழியில் க வருக்கம் முதலியனவாக வரும் ஓரெழுத்து வேற்றொலிகள் பிற்பட்டன என்பதும் புலனாகும்.

## பிறகுறிப்புகள்

இந்நூற்பா பாவண்ணத்துக்கு மேற்கோளாகப் பேராசிரியர் காட்டுவர். (தொல். பொருள்—செய்யுளியல் 214).

வழிநூல் இலக்கணம் கூறுமிடத்து, தொகையும் விரியுமாகக் கூறியதற்கு இது மேற்கோளாக இலக்கண விளக்கப் பாட்டியல் 141 ஆம் நூற்பா உரையில் ஆளப்பட்டது.

நேமிநாதப் பாயிர உரையில் அவிநயனார் எழுத்து ஏழுவகையால் உணரத்தகும் என்றார் என்று,

எண் பெயர் முறைபிறப் பளவியல் வடிவு
புணர்தலோ டேழும் பொருந்திய வழக்கே

என்ற அவரது நூற்பா காட்டப்பட்டுள்ளது.

நன்னூலார் பன்னிரண்டு வகையால் உணர்த்தப்படும் என்றார். (நன்னூல் 5)

வீரசோழியம் உடையாரும் நேமிநாதமுடையாரும் ஆய்தத்தையும் கூட்டி எழுத்து முப்பத்தொன்று என்பர். (வீரசோழியம் 1, நேமிநாதம் 1)

எழுத்து என்பது எழுதுதலாகிய தொழிலையுணர்த்தின் இயற் பெயர்; எழுதப்பட்ட பொருளை யுணர்த்தின் ஆகு பெயர் என்பர். (நன்னூல் 289) மயிலைநாதர்.

அரசஞ்சண்முகனார், 'இனி எழுத்தெனப்படுவது யாதோ வெனின் கண் முதலாய பிறவற்றுக்குப் புலனாகாது செவிப் புலனேயாகும் ஒலி வடிவும், செவி முதலாய பிறவற்றுக்குப் புலனாகாது கண்ணுக்கும் மெய்க்கும் புலனாகும் வரிவடிவும் உடைத்தாய்த் தனித்து நின்றாயினும் சார்ந்து நின்றாயினும் தன்னை யுணர்த்தலுடன், பொருளுணர்த்தும் சொல்லாகலும் அச் சொல்லுக்குறுப்பாகலும் ஆகிய இரு தன்மையும் ஒருங்கு பெற்றா யினும், அன்றி உறுப்பாக இயைதற்றன்மை யொன்றே பெற்றாயி னும் நிற்கும் ஒலியாம்' என்பர். தொல். (பாயிரவிருத்தி).

## சார்பெழுத்துகள்

அவைதாம்
குற்றிய லிகரம் குற்றிய லுகரம்
ஆய்தம் என்ற
முப்பாற் புள்ளியும் எழுத்தோரன்ன

### இளம்பூரணர்

இது, மேல் சார்ந்துவரும் என்னப்பட்ட மூன்றற்கும் பெயரும் முறையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ ள்) அவைதாம் - மேற்சார்ந்து வரும் எனப்பட்டவைதாம், குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்ற முப்பாற் புள்ளியும்— குற்றியலிகரமும் குற்றியலுகரமும் ஆய்தமும் என்று சொல்லப்பட்ட மூன்று கூற்றதாகிய புள்ளியும் என இவை, எழுத்து ஓர் அன்ன— (அவை) மேற் சொல்லப்பட்ட முப்பது எழுத்தோடு ஒரு தன்மைய.

அப்பெயர் பெயர்; முறை அம்முறை. 'எழுத்தோ ரன்ன' வென வேண்டா கூறியவதனான், முன் 'எனப்படுப' என்ற சிறப்பு அம் மூன்றற்கும் கொள்ளக் கிடந்தமையின், அது விலக்குதல் பெறுதும் என்பது. குற்றியலிகரமும் குற்றியலுகரமும் என்னும் எண்ணும்மை விகாரத்தால் தொக்கன. சந்தனக்கோல் குறுகின விடத்துப் பிரப்பங்கோல் ஆகாது; அது போல இகர உகரங்கள்

குறுகின விடத்தும் அவை உயிர் ஆகற்பாலன. அவற்றைப் புணர்ச்சி வேற்றுமையும் பொருள் வேற்றுமையும் நோக்கி வேறெழுத்தென்று வேண்டினார் எனவுணர்க.

**நச்சினார்க்கினியர்**

இது மேற் சார்ந்து வரும் என்ற மூன்றிற்கும் பெயரும் முறையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) மேற் சார்ந்து வரும் எனப்பட்டவைதாம், குற்றிய லிகரமும் குற்றியலுகரமும் ஆய்தம் என்று சொல்லப்பட்ட மூன்று கூற்றதாகிய புள்ளிவடிவுமாம்; அவையும் முற்கூறிய முப்ப தெழுத்தோடு ஒரு தன்மையவாய் வழங்கும் எ—று.

முற்கூறிய இரண்டும் உம்மை தொக்கு நின்றன. இகர உகரங் குறுகி நின்றன விகார வகையாற் புணர்ச்சி வேறுபடுதலின் இவற்றை இங்ஙனம் குறியிட்டாளுதல் எல்லார்க்கும் ஒப்ப முடிந்தது. சந்தனக்கோல் குறுகினாற் பிரப்பங்கோலாகாது. அது போல உயிரது குறுக்கமும் உயிரேயாம். இவற்றைப் புணர்ச்சி வேற்றுமையும் பொருள் வேற்றுமையும் பற்றி வேறோர் எழுத்தாக வேண்டினார்.

இவற்றுட் குற்றியலுகரம் நேர்பசையும் நிரைபசையுமாகச் சீர்களைப் பலவாக்குமாறு செய்யுளியலுள் உணர்க.

ஆயுதம் என்ற ஓசைதான் அடுப்புக் கூட்டுப்போல மூன்று புள்ளி வடிவிற்றென்பது உணர்த்தற்கு ஆய்தம் என்ற முப்பாற் புள்ளியும் என்றார். அதனை இக்காலத்தார் நடுவு வாங்கியிட் டெழுதுப. இதற்கு வடிவு கூறினார். ஏனைய ஒற்றுக்கள் போல உயிர் ஏறாது ஓசை விகாரமாய் நிற்பதொன்றாகலின். எழுத்தியல் தழா ஓசைகள் போலக் கொள்ளினும் கொள்ளற்க என்றற்கு எழுத்தேயாம் என்றார். இதனைப் புள்ளி வடிவிற்றெனவே, ஏனை யெழுத்துக்கள் எல்லாம் வரிவடிவினவாதல் பெற்றாம்.

முன்னின்ற சூத்திரத்தாற் சார்ந்துவரல் மரபின் மூன்றலங் கடையே எழுத்தெனப்படுப முப்பஃதென்ப எனவே, சார்ந்துவரல் மரபின் மூன்றுமே சிறந்தன; ஏனைய முப்பதும் அவ்வாறு சிறந்தில வெனவும் பொருள் தந்து நிற்றலின் அதனை விலக்கிச் சிறந்த முப்பது எழுத்தோடு இவையும் ஒப்ப வழங்கும் என்றற்கு எழுத்தோரன்ன வென்றார்.

இப்பெயர்களே பெயர். இம்முறையே முறை. தொகையும் மூன்றே. இம்மூன்று பெயரும் பண்புத் தொகை.

அவைதாம், ஆய்தம் என்ற என்பன சொற்சீரடி.

## வேங்கடராசுலு ரெட்டியார்

இவ்வுரைகளில் (இளம்பூரணர், நச்சினார்க்கினியர் உரைகளில்) ஆய்தம் என்னும் சொல், 'முப்பாற்புள்ளி' என்னும் சொற்கு அடைமொழியாகக் கொள்ளப்பட்டுள்ளது. ஆய்தவெழுத்தின் வரிவடிவினைப் புலப்படுத்துதல் ஆசிரியர்க்குக் கருத்தாயின், 'முப்பாற்புள்ளியாகிய ஆய்தம்' என்று கூறி, முப்பாற்புள்ளியை அடையாக்குவர்.

'முப்பாற் புள்ளி' யென்றதனைக் குற்றியலிகரம் முதலிய மூன்றற்கும் பொதுப் பெயராகக் கொள்ளுதல் அமைதி. என்னையெனின், ஒரு திறப்பட்ட மூன்று எழுத்துக்களைக் கூறுமிடத்து, அவற்றிற் கெல்லாம் ஒத்த தன்மையினைக் கூறுதல் முறையாதலேயன்றி, அவற்றுள் ஒரெழுத்திற்கு மட்டுஞ் சிறப்பியல் கூறி ஒருங்கு வைத்தல் அத்துணை முறையாதல் இன்று. சிவஞானமுனிவர் 'அம்மூன்றும் புள்ளி பெறுதல் பற்றிப் பொதுப்பெயராக, முப்பாற் புள்ளியும் என்றும்.....ஓதினார்' என்றது நோக்கத் தக்கது.

ஆயின் இம்மூன்றெழுத்துக்களும் புள்ளி பெறுதல் யாண்டுப் பெறுதும் எனின், குற்றியலுகரம் புள்ளி பெறுதல் புணரியலுள்ளும், குற்றியலிகரம் புள்ளி பெறுதல் "ஒற்றெழுத்தியற்றே குற்றியலிகரம்" என்னும் செய்யுளியற் சூத்திரத்தும் பெறுதும். 'ஒற்றெழுத்து' என்னும் சூத்திரத்தான் மெய்யெழுத்துப் போலக் குற்றியலிகரம் புள்ளி பெறும் என்றல் எவ்வாறு போதரும் எனின், 'இவற்றையெல்லாம் 'ஒற்றெழுத்தியற்றே' என்றதனால் புள்ளியிட்டெழுதுக' என்று பேராசிரியர் எழுதியிருத்தலின் அறியப்படும் என்க. ஆய்தம் புள்ளி வடிவின தாகலின் அதன் வடிவினை, விதந்து கூறினாரல்லர். ஆயினும் ஆய்தப்புள்ளி என்றாளுவர்.

ஆய்தம் என்பது ஆஸ்ரிதம் என்னும் வடசொல்லின் திரிபு என்ப ஆகலின், அஃகேனம் என்பதுவே தமிழ்ப் பெயராகும். ஆய்தம் நெடுங்கணக்கோலையேடுகளில் உயிர்வரியின் ஈற்றில் ஃ : இவ்வாறு எழுதப்பட்டுள்ளது. இவ்வாறு வரிவடிவில் இரண்டு புள்ளிகளோடு எழுதப் படுவதனானும், ஒலியில் தன்முன் வரும் வல்லெழுத்தின் ஒலி பெறுதலானும் (இது, பிறப்பியலிற் கூறப்

படும்), உயிர்வரியின் இறுதியில் வைக்கப்பட்டிருத்தலானும் இது வடமொழியிலுள்ள விஸர்க்கம் போல்வதாகும். வடமொழியில் விஸர்க்கம், ககாரபகாரங்கள் வருமிடத்து அவற்றின் ஒலிபெறும். நச்சினார்க்கினியர் 'அதனை யிக்காலத்தார் நடுவு வாங்கி யிட்டெழுதுப' என்று எழுதியிருத்தலின் அவர் காலத்தில் ஆய்தம் இரண்டு புள்ளி வடிவினதாக எழுதி வந்தமை அறியப்படும். அதுவே பழைய வடிவமாகும். ஆயின், அவர் கூற்றால் மூன்று புள்ளியிட்டெழுதுதலே பழைய வடிவம் என்று அறியப்படுமால் எனின், 'முப்பாற் புள்ளியும்' என்றதனை ஆய்தத்தின் வரிவடிவு கூறியதாக அவர் கருதினாராகலின், ஆய்த வெழுத்து அடுப்புக் கூட்டுப்போல மூன்று புள்ளி வடிவிற்று என்றும் 'நடுவுவாங்கியிட்டெழுதுப' என்றும் எழுதுவாராயினார்.

இவ்வெழுத்துக்கள் மூன்றனையும்

'அவ்வியல் நிலையும் ஏனை மூன்றே'

என்றும்,

'தேர்ந்து வெளிப்படுத்த ஏனை மூன்றும்'

என்றும்

'குற்றிய லிகரம் நிற்றல் வேண்டும்'
'குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே'
'ஆய்தம் அஃதாக் காலை யான'

என்றும் முன்னர் எடுத்தாளுவர்.

ஆசிரியர் தொல்காப்பியனார், சார்பெழுத்துக்கள் என்று இம் மூன்றனையுமே கூறியிருப்ப நன்னூலார் உயிர்மெய் முதலிய பத்தெழுத்துக்களைக் கூறியுள்ளார்; அன்றியும் அவற்றின், விரியாக 369 எழுத்துக்களைக் கொண்டுள்ளார். இலக்கண விளக்க முடையார் ஆய்தக்குறுக்கம் என்பதொன்றின்று என்று விலக்கிச் சார்பெழுத்து ஒன்பதென்று கொண்டு, அவற்றின் விரி 240 என்று குறித்து, 'உயிர்மெய் ஒழித்து, ஏனையவெல்லாம் இடவேற்றுமை யானன்றி எழுத்து வேற்றுமையான் அங்ஙனம் பல்காமையிற் சார் பெழுத்து முந்நூற்றறுபத்தொன்பதாமென்றல் நிரம்பா தெனவும் மறுக்க' என்றும் உரைத்தார். தொல்காப்பியனார் ஆய்தக் குறுக்கம் கூறாமையானும், குற்றியலிகரம் குற்றிய

1. தொல். பொருள்-செய்யுளியல்.8.
2. எழுத்ததி. மொழிமரபு-5.

லுகரங்களை ஒவ்வோரெழுத்தாக் எண்ணினாராகலானும் நன்னூலார் கொள்கையினும் இலக்கண விளக்கமுடையார் கொள்கையே அமைவுடையதாகும். இனி, குற்றியலுகரம் முப்பத்தா றென்றல் நிரம்பா தென்பது யான் எழுதியுள்ள குற்றியலுகரம் என்னும் கட்டுரையிற் காணலாகும்.

இவ்வதிகாரத்திற் செய்கைக்குப் பயன்படும் எழுத்துக் களையே ஈண்டுக் கூறல் வேண்டுமாகலின் ஆசிரியர் சார்பெழுத்து மூன்று என்று கொண்டார். ஆயின், ஆசிரியர் மொழி மரபிற் கூறியவற்றை யெல்லாம் தனித்தனி யெழுத்துக்களாகத் திரிய வுணர்ந்து, சார்பெழுத்துப் பத்து என்று கொண்டார் நன்னூலார். அவை செய்கைக்குப் பயன்படுதல் இன்மையின் வேண்டற் பாலனவல்ல.

### சுப்பிரமணிய சாஸ்திரியார்

(இ-ள்) முதற் சூத்திரத்துட் கூறப்பட்ட எழுத்தோடு ஒரு தன்மைப்பட்டுச் சார்ந்து வருகின்றனவாய அவை குற்றியலிகரமும் குற்றியலுகரமும் ஆய்தமும் ஆகிய முக்கூற்றதாகிய புள்ளியெழுத் துக்களாம்.

'தாம்' என்பது கட்டுரைச்சுவைபட நின்றது.

இச்சூத்திரத்தில் 'அவைதாம்' என்றது உத்தேசியம் 'குற்றிய லிகரம்...முற்பாற்புள்ளி' யென்றது விதேயம். 'எழுத்தோரன்ன' என்றது வினையாலணையும் பெயராய் 'அவைதாம்' என்றதற்கு அடைமொழி. 'எழுத்தோரன்ன' என்றதின் பயன்,

> சார்ந்துவரின் அல்லது தமக்கியல் பிலவெனத்
> தேர்ந்து வெளிப்படுத்த ஏனை மூன்றுந்
> தத்தஞ் சார்பிற் பிறப்பொடு சிவணி
> ஒத்த காட்சியிற் றம்மியல் பியலும் (தொல். எழுத் 104)

என்ற சூத்திரத்தால் விளங்கும். அஃதாவது அம்மூன்றும் சார்ந்துவரும் எழுத்துக்களோடு ஒரு தன்மைப்பட்டு அவை பிறந்த இடங்களிற் பிறக்கும் என்பதே. ஆகலின், 'எழுத்தோ ரன்ன' என்றதற்கு 'எழுத்தோரன்ன என வேண்டா கூறிய வதனுன் முன் 'எனப்படுப' என்ற சிறப்பு அம் மூன்றற்கும் கொள்ளக் கிடந்தமையின் அது விலக்குதல் பெறுதும் என்பது' என உரையாசிரியரும், 'முன்னின்ற சூத்திரத்தால் சார்ந்துவரல் மரபின் மூன்றுமே சிறந்தன; ஏனைய முப்பதும் அவ்வாறு

சிறந்தில எனவும் பொருள் தந்து நிற்றலின் அதனை விலக்கிச் சிறந்த முப்பது எழுத்தோடு இவையும் ஒப்ப வழங்கும் என்றற்கு எழுத்தோரன்ன என்றார்' என நச்சினார்க்கினியரும் கூறும் பயன் சிறக்கா.

எஃகு, கஃசு, முஃடீது, இஃது, அஃபோதம், கஃறீது என்ற விடங்களில் ஆய்தத்தின் ஒலி மாறுபட்டிருத்தல் வேண்டும் என்றது, முள் + தீது என்றது முஃடீது என்றேனும் முட்டீது என்றேனும், கல் + தீது என்றது கஃறீது என்றேனும் கற்றீது என்றேனும் மாறலாம் என்று கூறப்படுதலால் விளங்கும். "கூற்றக் கொஃறேர்" (பத்துப்பாட்டு 236) என்ற விடத்து ஓசையானும் விளங்கும். அன்றியும் வடமொழியில் ககரத்திற்கு முன்னுள்ள விஸர்க்கத்தின் ஒலிக்கும், பகரத்தின் முன் உள்ள விஸர்க்கத்தின் ஒலிக்கும் மாறுபாடு இன்றும் காணலாம். முன்னர் உள்ளதை ஜிஹ்வாமூலியம் என்றும், பின்னர் உள்ளதை உபத்மானியம் என்றும் கூறுவர். ஆயினும், நன்னூலார் காலத்துக்கு முன்னரே, ககரத்திற்கு முன்னர் உள்ள ஒலியே ஏனைய விடங்களிலும் வழங்கப்பட்ட தென்பது "ஆய்தக் கிடந்தலை" (நன்னூல் 87) என்ற நன்னூற் சூத்திரத்தால் விளங்கும். ஆகவே பண்டைக் காலத்தில் ஆய்தம் என்றது ஓரிடத்திற் பிறவாது ஆறிடங்களிற் பிறந்த தென்பதும், அக்காரணம் பற்றி அறுவகைப்பட்ட தென்பதும் வெளிப்படை. அவ்வாறே குற்றியலிகரமும் குற்றியலுகரமும் அவற்றின் பற்றுக்கோடு பிறந்த இடங்களிற் பிறந்து பல வகைப்பட்டன என்பதும் வெளிப்படை. ஆகலினன்றே அவற்றை ஆசிரியர் தனிச் சூத்திரத்தில் உணர்த்தினர்! முற்கூறிய காரணத்தானே குற்றியலிகரமும் முற்றிகரமும் ஓரினம் அல்ல என்றதும், குற்றியலுகரமும் முற்றுகரமும் ஓரினம் அல்ல என்றதும் விளங்கும். உரையாசிரியர்க்கு முன்பே அவை ஓரினம் என்றும், மாத்திரையில் மாத்திரம் வேறுபட்டன என்றும் திரிபுணர்ச்சி பிறந்தது என்றது, 'சந்தனக்கோல் குறுகினவிடத்துப் பிரப்பங் கோலாகாதது போல, இகர உகரங்கள் குறுகினவிடத்தும் அவை பெயர் ஆகாற்பாலன என்ற தொடரால் விளங்கும். இரண்டற்கும் பிறப்பிடம் ஒன்றென நன்னூலார் மயங்கினர் என்பது, "சார் பெழுத்தேனவும் தம் முதலனைய"(நன்.87) என்ற சூத்திரத்தான் விளங்கும்.

ஆசிரியர் ஓரளபாகும் இடனுமாருண்டே (தொல். எழுத். 57) என்ற சூத்திரத்தில் ஐகாரம் சில இடங்களில் ஒரு மாத்திரை பெறும் என்று கூறினும், அதனைச் சார்பெழுத்தாகக் கொள்ளாமைக்குக் காரணம், அஃது ஐகாரம் பிறக்கு மிடத்தே பிறக்கும் என்றதே. நன்னூலார் கூறிய சார்பெழுத்துகளுள், குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்பவற்றைத் தவிர்த்து ஏனைய சார்பெழுத்தாகா என்று சிவஞான முனிவர் கூறிய மறுப்பை நோக்குக.

பாட வேறுபாடு

இளம்பூரணர் க. பதி: சந்தனக்கோல்...அவை பெயராகற்பாலன.

இளம். சி. பதி: சந்தனக்கோல்...உயிர் ஆகற்பாலன.

உயிர் என்ற குறி இன்னும் இடப்படாமையானும், இகரம் உகரம் போல் குற்றியலிகரம் குற்றியலுகரம் எனப் பெயரிட்டமையானும், 'பெயர்' என்ற பாடமே சிறக்கும். பின்னர் உள்ள பாடம் உயிரது குறுக்கமும் உயிரேயாம் என்ற நச்சினார்க்கினியர் உரையைப் பின்பற்றி எழுதப்பட்டது போலும்.*

## வெள்ளை வாரணனார்

இது மேற் சார்ந்து வரும் என்ற மூன்றிற்கும் பெயரும் முறையும் கூறுகின்றது.

(இ-ள்.) மேற் சார்ந்து வரும் எனப்பட்டவைதாம் குற்றியலிகரமும் குற்றியலுகரமும் ஆய்தம் என்று சொல்லப்பட்ட மூன்று கூற்றதாகிய புள்ளிவடிவும் ஆம். அவையும் முற்கூறிய முப்பதெழுத்தினோடு ஒரு தன்மையாய் வழங்கும் எ—று.

---

* இளம்பூரணர் குற்றியலிகர குற்றியலுகரங்களை இகர உகரங்களின் திரிபே எனக் கொண்டனராதலின் பெயராகற்பாலன என்ற பாடத்தினும் உயிராகற்பாலன என்ற பாடமே சிறக்கும், ஒரு தடித்த சந்தனக்கோலே குறுகிக் குச்சியாவது போலக் குற்றியலிகர குற்றியலுகரங்களுக்குக் கூறுவதென்றால் எப்பெயர் எப்பெயராக மாறியது என்ற வினாவிற்கு விடையின்மையால் என்க. (சிவலிங்கனார்)

முற்கூறிய விரண்டும் உம்மை தொக்கு நின்றன. ஒரு மொழியைச் சார்ந்து வரும் இயல்பன்றித் தனித்தியங்கும் இயல்பு தமக்கில வென்றலின், அவை தம்மை எடுத்தோதிக் காட்டலாகா மையின், அவற்றிற்குக் குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம்என வேறுவேறு பெயரிட்டு ஈண்டு எடுத்தோதினார். அவை தனித்து ஒலிக்கப் பெருவாயினும் மொழியொடு சார்த்தியிசைக்கப்படுதலின் எழுத்தென்றற்கு ஒரு வகையான் உரிய வென்பார், 'எழுத்தோரன்ன' வென்றார். முற்றியலுகர இகரங்களோடு இவற்றிடை வேற்றுமை தெரிதற் பொருட்டு இகரம் உகரம் என்றொழியாது குற்றியலிகரம் குற்றியலுகரம் என்றார்.

... ... ... ... ... ...

ஒரு மாத்திரையாய் நின்ற குற்றெழுத்துக்களே ஈரொற்றுடனின்று கால் மாத்திரை பெற்ற மகரக் குறுக்கம் போல செயற்கையான் அரை மாத்திரை பெற்றுக் குறுகி நின்றன என உலகம்மலையாமைப் பொருட்டு இவை இங்ஙனமாதல் இயல்பென்பார், குற்றிகரம் குற்றுகரம் என்றொழியாது ஆசிரியர் குற்றியலிகரம் குற்றியலுகரம் எனக் குறிப்பிட்டார் எனவும் குற்றியலிகரம் நிற்றல் வேண்டும், 'குற்றியலுகரம் வல்லாறூர்ந்தே' நிற்றல் வேண்டும் எனவும் கூறி, இவை பற்றி மாத்திரை குறுகும் எனக் கூறிற்றிலர் எனவும், 'ஆயிரு மூன்றே யுகரங் குறுகிடன்' 'யகரம் வரும் வழி யிகரம் குறுகும்' என்புழி வரும் குறுகும் என்னும் சொல் 'கோயில் மன்னனைக் குறுகினள் சென்றுழி, 'நீங்கிற் றெறூஉம் குறுகுங்காற் றண்ணென்னும்' என்புழிப் போல அணுகுதற் பொருண்மைத் தெனவும் கூறிக் குற்றியலிகரமும் குற்றியலுகரமும் ஆய்தம் போல வேறெழுத்தே யாவதன்றி ஒரு மாத்திரையாய் நின்ற இகர உகரங்களே மகரக் குறுக்கம் முதலியன போல ஒரு காரணம் பற்றி அரை மாத்திரையாய் நின்றன வல்லவெனச் சிவஞான முனிவர் சூத்திர விருத்தியில் விளங்க உரைத்தார்.

ஆயினும் 'ஆயிரு மூன்றே யுகரம் குறுகிடன்' என்புழியும் 'யகரம் வரும்வழி யிகரம் குறுகும்' என்புழியும் வந்த குறுகும் என்ற சொல்லிற்கு அவர், கூறியவாறு அணுகும் எனப் பொருள் கூறின், முறையே அவ்விரு தொடரும், 'அவ்வாறு வகைச் சொல்லும் உகரம் வரும் இடம்' எனவும், 'யகர முதன் மொழி வரு மொழியாய் வருமிடத்து ஆண்டு இகரம் வரும்' எனவும் பொருள் பட்டு, அவ்வாறு வருவன முற்றிகர முற்றுகரமே யெனத்

திரிபுணர்ச்சி தோன்றிக் குற்றியலிகரம் குற்றியலுகரம் கொள்ளப் படாவாம் ஆதலின், அவ் இகர உகரங்கள் தன் மாத்திரையிற் குறுகி அரை மாத்திரை பெறும் என்பதே பொருத்தமுடைய தாகத் தோன்றுகிறது. குற்றியலிகரம் குற்றியலுகரம் என்பன. குறுகுதலை யியல்பாகவுடைய இகர உகரம் என்றே பொருள்படு மாகலின், அவை அவ் ஒலி வேற்றுமை காரணமாக வேறெழுத் தெனக் கொள்ளப்படுதலும் இகர வுகரங்களின் தொடர்புடைமை காரணமாக உயிரன்றெனத் தள்ளப்படாமையும் நன்கு விளங்கும்.

ஆய்தம் என்பதைப்பற்றி நச்சினார்க்கினியர் பின் வருமாறு கூறுவர்:—'ஆய்தம் என்ற ஓசைதான்...வரிவடிவினவாதல் பெற்றாம்'* என்பதாம். இதன்கண் ஆய்தம் மூன்று புள்ளி வடிவிற்றென்பதும், நச்சினார்க்கினியர் காலத்திலுள்ளார் சிலர் அதனை நடுவே வளைந்த கோடிட்டு வழங்கினார்கள் என்பதும், ஆய்தம் ஏனை ஒற்றுக்கள் போல் உயிர் ஏறாது நிற்பதொன்று என்பதும் புலப்படுதல் காணலாம்.

'நடுவு வாங்கியிட்டெழுதுப' என்பதற் கேற்ப 8-ஆம் நூற்றாண்டில் பல்லவ மல்லன் காலத்ததாக அமைந்த காசாக் குடிப்பட்டயத்துள் 'வெஃகா' என்ற சொல்லின் ஆய்தம் வெ̣̇கா என்று மேலும் கீழும் புள்ளியும் இடையில் வளைந்த கோடும் உடையதாக வரையப்பட்டிருப்பது ஆராயத்தக்கது.

வேதத்திலே ஜிஹ்வா மூலியத்தொனி பெறுவதோர் எழுத்துக்கு 'ஆஸ்ரதம்' என்ற பெயரை வேத இலக்கணம் இட்டு வழங்குவ தென்றும், அத்தகைய உச்சரிப்புடன் அஃகம் முதலியனவாகத் தமிழில் வழங்கும் எழுத்துக்கும் தமிழ் இலக்கணம் வகுத்த ஆதி யிருடிகள் அவ்வட சொல்லை ஆய்தம் எனத் திரிய வழங்கின ராதல் வேண்டும் எனவும் பின்வருவாறு கூறுவர்—"ஆய்தம் முப் புள்ளி யென்பதற்கு ஆதரவில்லை. ஆய்தம் என்ற வடசொற்கு நீண்டது என்பது பொருள் என்பவாகலின் ஈண்டு நீண்ட கோடுள தெனல் பொருந்தும். (பல வகை வடிவுகளைக் கூறுமிடத்து நன்னூற் பழைய வுரைகாரர் மயிலைநாதர்:—சதுரம், ஆய்தம், வட்டம், முக்கோணம், சிலை என்றிவற்றைக் குறிப்பிட்டுள்ளார்) இவற்றுள் இவ்வாய்தமும் ஒன்றாய் நீண்ட வடிவினைக் குறித்தல் காண்க. இதனால் நீண்ட கோடுள்ளதாய்ப் புள்ளி பெறுதலான்

---

* பக்கம் 46 ல் பார்க்க

அவ்வாய்தமே ஆய்தம் என்றும் ஆய்தப் புள்ளி யென்றும் வழங்க லாயிற்றுப் போலும். பல்லவ சாசனத்துக் கண்ட இவ்வாய்த வடிவைப் போலவே வடமொழி விஸர்க்கத்துக்கு மேலும் கீழும் அமைந்த இரட்டைப்புள்ளி வடிவேயன்றி (÷) என இடைக் கோடு வளைவின்றியும் பின் பாண்டிய சாசனம் ஒன்றில் காணப் படுகிறது ஈண்டு ஒப்பிடத்தக்கதாம். ஆகவே அச்சொல்லின் மூலம் ஆஸ்ரத மாயினும் ஆய்தமாயினும் அவ்வெழுத்துக்கும் ஒலி விசர்க்கத்துக்கும் வடிவும் வரிவடிவும் ஒன்றாகவே ஆசிரியர் காலத்தில் அமைந்திருந்த தென்பதும், முப்பாற் புள்ளியினதாகிய அது மிகப்பிற் காலத்தேதான் எழுதப்பட்ட தென்பதும் மேற் கூறியவற்றினின்றும் பெறப்படும்' என அறிஞர் மு. இராகவ அய்யங்காரவர்கள் கூறுவர்.

முதலில் ஆய்தம் முப்பாற் புள்ளியினதாகக் கருதப்பட்டது எக்காலத்தென நோக்குவோம். 'குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்ற முப்பாற் புள்ளியும்' என்ற தொடர்க்கு உரை கூறப் போந்த இளம்பூரணர், 'குற்றியலிகரமும் குற்றியலுகரமும் ஆய்தம் என்று சொல்லப்பட்ட மூன்று கூற்றதாகிய புள்ளியும் என இவை' எனக் கூறி, 'குற்றியலிகரமும் குற்றியலுகரமும் என்னும் எண்ணும்மை விகாரத்தாற்றொக்கன' எனக் குறிப்பும் வரைந் தனர். மூன்றனுள் முன் நின்ற இரண்டிற்கு எண்ணும்மை விகாரத்தால் தொக்கன எனவே, ஈற்றதாகிய ஒன்றன்கண் தொகாது நிற்கிற தென்பது கொள்ளப்படும். இச்சூத்திரத்தில் அவ்வாறு உம்மை தொகாது நிற்குமிடம் 'ஆய்தம் என்ற முப்பாற் புள்ளியும்' என்பதில் புள்ளியென்பதன் ஈற்றிடமே என்பது விளங்கும். ஆகவே, முப்பாற் புள்ளி யென்பது ஆய்தம் ஆதல் வேண்டும். ஆய்தம் என்ற முப்பாற் புள்ளி யென்பதில் ஆய்தம் என்பதன்கண் உம்மையில்லாதிருக்க, ஆய்தமும் என உரையிற் காணப்படுதல் ஏடெழுதுவோரால் நேர்ந்த பிழையாதல் வேண்டும். இங்கு முப்பாற் புள்ளியென்றது ஆய்தத்தின் வடிவை உணர்த்தியது என்பது உரையாசிரியர் உரையாலும் குறிப்பாலும் நன்கு தெளியப்படும். இதனைத் தழுவியே நச்சினார்க்கினியரும் உரை கூறினமை முற்கூறப்பட்டது. இகரமும் உகரமும் என உம்மை தொக்கதாகக் கொள்ளாமல் குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என அம்மூன்றும் புள்ளி பெறுதல் பற்றிப் பொதுப் பெயராக முற்பாற்புள்ளியும் என்றார் எனச் சிவஞான முனிவர் கூறுவர். அது கொண்டு, அவர் தமக்கு ஆய்தம் முப்புள்ளி வடி விற்றன்றெனல் கருத்தென்பது பொருந்தாது. அன்றியும் அவர்

கூறியபடி மூன்றும் புள்ளி பெறுதல் காரணமாக முப்பாற் புள்ளியெனப்பட்டன எனின், எகர ஒகரம் புள்ளி பெறுதல் காரணமாகப் புள்ளியென வழங்கப்படாமையானும், குற்றியலுகரம் மொழி யீற்றின்கண் அல்லது புள்ளி பெறாமையானும், அறிகுறியாகவரும் புள்ளியையுடைய ஈற்றுக்குற்றியலுகரத்தின் பிற வடிவுகளிருக்க மொழிமுதற் குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆகிய இவற்றிற்குப் புள்ளியெனப் பொதுப் பெயர் இடுதல் சாலா தாகலானும், ஆய்தத் திற்கு முப்பாற்புள்ளியல்லது வேறு வடிவின்மையானும், குற்றிய லிகர உகரங்களை யாண்டும் புள்ளியென்ற பெயரால் எடுத்தா ளாமல் மெய்யோடியைதல் முதலாக உயிரியல்பில் வைத்துணர்த்த லானும் அக்கூற்றுப் பொருந்தாதென்பது. எனவே, ஆய்தம் மூன்று புள்ளிவடிவிற்றென்பது உரையாசிரியர், நச்சினார்க் கினியர் உரைகளான் ஆசிரியர் தொல்காப்பியனார்க்கு உடன் பாடு என்பது பெறப்பட்டது. பின்னரும் ஆசிரியர் ஆய்தப் புள்ளி யென இதன் பெயர் உரைத்தலும் ஆய்தம் புள்ளிவடிவிற் றென்பதை வலியுறுத்தும். மூன்றுபுள்ளி வடிவிற்றாய் எழுதப் பட்டு வந்த ஆய்தம் ஃ என இடைக்காலத்தாரால் இடையே வளைத்து எழுதப்பட்ட தென்பது 8 ஆம் நூற்றாண்டிற் பல்லவ மன்னன் சாசனமாகிய காசாக்குடிப் பட்டயத்துள் வெஃகா என்ற சொல் வெஃகா என எழுதப்பட்டிருத்தலானும், நச்சினார்க்கினியர் உரையானும் நன்கு விளங்கும். ஒரு சிலரால் இங்ஙனம் ஆய்தம் இடையே வளைத்தெழுதப்பட்டாலும் பெரும்பாலார் மூன்று புள்ளி வடிவினதாகவே அதனை எழுதி வருகின்றமை எல்லார்க்கும் உடன்பாடாகும்.

வடமொழியில் ஜிஹ்வா மூலியத்தொனி பெறுவதோர் எழுத்து ஆஸ்ரதம் என வழங்கப்படுதல் கொண்டு தமிழ்ச் சார்பெழுத்தாகி ஓரொலியின் பெயராகிய ஆய்தம் அதன் திரிபென்று கோடற்கு யாதோர் இயைபும் இல்லை. வடமொழி 'ஆஸ்ரதம்' என்பதன் உருவமும், அச்சொற்பொருளும், அப்பெயருடைய எழுத்தியல்பும் வேறு. தமிழில் ஆய்தம் என்ற சொல்லுருவும் அதன் பொருளும் அப்பெயருடைய எழுத்தின் ஒலியும் வேறு. இவ்வாறு இவ் விரண்டின் உருவம், பொருள் இயல்பு என்பன வேறுபட்டனவாக எவ்வித இயைபும் இல்லாமல் வடசொல்லாகிய ஆஸ்ரதம் என்பது ஆய்தமாய்த் திரிந்ததென்றல் எவ்வாற்றானும் பொருந்தாத தாகும். புலவகை வடிவுகளைக் கூறப்போந்த மயிலைநாதர்

நீண்ட வடிவென்பதனை ஆயதம் என வடசொல்லாற் கூறியது கொண்டு, நீண்ட வடிவும் ஓசையும் இன்றிப் புள்ளி வடிவிற்றாகிய ஆய்தம் அவ்வாயதம் என்ற வடசொல்லின் திரிபாகும் என்றல் பொருந்தாது. நச்சினார்க்கினியர் தம் காலத்தார் இடையே வளைத்து எழுதுவார் என்றபடியே ''வெ஁கா'' எனப் பிறை வடிவமாக எழுதப்பட்டதனை நீண்ட கோடுளதாய்ப் புள்ளி பெற்ற தெனத் திரித்துக் கொண்டு, பாண்டிய சாசனம் ஒன்றில் ':' என மேலும் கீழும் புள்ளியையுடைய இரு புள்ளி வடிவாகிய வடமொழி விசர்க்க எழுத்தானது எழுதுவோர் பிழையால் இடையே ÷ என்றபடி வெட்டுக்கோடு விழுந்ததனை இயற்கையெழுத்தாக வைத்து அதனை யிடையே பிறை வடிவாக வளைத்தெழுதிய கோடுள்ள ஆய்தத்தோடு ஒப்புமை காட்டி ஆய்தம் என்ற வட சொல்லே ஆய்தமாகத் திரிந்த தெனவும் அவ்விசர்க்க ஒலியே ஆய்த எழுத்தெனவும் கூறுவது எவ்வித இயைபும் இன்றி முரணாதலுங் காண்க.

(1) நீண்ட வடிவத்தைக் குறிக்கும் ஆயதம் என்ற பெயர் வடமொழி விசர்க்கத்துக்கு வழங்குதலும், அவ்விசர்க்கத்திடையே நீண்ட கோடிட்டு எழுதுதலும் வடமொழியாளரிடையே வழங்கப் படவில்லை. அதனால், ÷ என விசர்க்கம் இடையே கோடு பெற்றுக் காணப்படுதல் வடமொழி வழக்கத்தோடு பொருந்தாத பிழை வடிவாதல் உண்மை.

(2) இடைக் காலத்துச் சாசனம் ஒன்றில் ஆய்தம் ⁛ என வரையப்பட்டிருத்தலை நீண்ட வடிவு என்ற பொருள் புலப்படும் படி ஆயதம் என்ற பெயராற் குறிப்பிடுதல் சாலாது. எனவே, ஃ என எழுதப்பட்டு வரும் வடிவும் இடைக்காலத்தில் ⁛ என நடுவு வாங்கியிட்டெழுதிய வடிவும் ஆய்தம் மூன்று புள்ளியாக வேனும் இடையில் வளைந்த கோடிட்டேனும் எழுதப்பட்ட தென்பதனை விளக்குமன்றி அங்ஙனம் எழுதப்படாத இருபுள்ளியாகிய விசர்க்க மும் முப்புள்ளியாகிய ஆய்தமும் ஒன்றே என்பதனை யுணர்த் தாது.

(3) தமிழ்ச் சார்பெழுத்தினுள் ஒன்றாகிய ஆய்தம் உயிர் ஏறாது ஓசை விகாரமாய்க் குற்றெழுத்தின் முன்னதாய் உயிரோடு கூடிய வல்லெழுத்து ஆறன் மேலதாய் அவற்றிடையே வரும் இயல்பிற்றென்பது,

'குறியதன் முன்னர் ஆய்தப் புள்ளி
உயிரொடு புணர்ந்த வல்லாறன் மிசைத்தே"

என்ற சூத்திரத்தால் விளக்கப்பட்டது. வடமொழி விசர்க்கமோ உயிரோசை அல்லது ஒலியா இயல்பிற்றாய் உயிரையடுத்து அவற்றிற் கேற்ற உயிரோசைத்தாய் நின்று மேற் கூறிய நியதி யின்றி இறுதிக் கண்ணும் நின்றொலிக்கும் இயல்புடையது. தமிழ்ச் சார்பெழுத்தாகிய ஆய்தம் குற்றெழுத்தின் பின்னதாய் வல்லின மெய்யின் முன்னின்று அதன் ஓசையை மென்மைப் படுத்தி நுணுகிய ஓசைத்தாய் நிற்றலும், வடமொழியில் விசர்க்கம் பெரும்பான்மையும் மெய் முன் நில்லாது உயிரையடுத்து அதன் ஓசைத்தாய் ஒலித்தலும் கடைசியில் க ப மெய்யின் மேல் நின்றும் பிறவற்றின் முன் அவ்வோசையிற்றிரிந்தும் ஒலித்தலும் இவ் விரண்டிற்கும் உள்ள வேற்றுமையாதலால் ஒலியால் இரண்டும் ஒத்தன என்றல் செவி கருவியாக ஓசையை நுனித்து உணரும் நுண்ணுணர்வினார்க்கு உடன் பாடன்றென்க.

இதுகாறும் கூறியவாற்றால் ஆய்தம் என்னும் பெயர் 'ஆஸ்ரதம்' அல்லது 'ஆயதம்' என்றவற்றின் திரிபன்று என்பதும், வடமொழி விசர்க்கத்திற்கும் இதற்கும் வடிவானும் இயல்பானும் ஒலியானும் நிலையானும் வேறுபாடு மிகுதியும் உள என்பதும் விளக்கப்பட்டன. இதனால் ஆய்தம் என்ற எழுத்து ஒலி தமிழிற்கேயுரிய சிறப்பொலி என்பதும் விளக்கப்பட்டது. ஆய்தத்தை 'ஹ' எழுத்தொலியாகத் தவறாகக் கருதுவாருள ரெனினும் அது மெய்யீறாய் மொழி முதல் நின்று உயிரேறி நிற்கு மியல்பறிந்து மயக்கம் நீங்குவாராக.

ஆய்தம் என்ற பெயர் தமிழாயின் அதன் பெயர்க் காரணம் என்ன வெனின், மொழிகள் எல்லாம் காரணமுடையவாயினும் அதன் காரணம் வெளிப்படத் தோன்றா என்றார் ஆசிரியர். ''ஓய்தல் ஆய்தல் நிழந்தல் சா அய் ஆவயி னான்கும் உள்ளதன், நுணுக்கம்'' என்றாராகலின் இச்சொல் ஆய்தல்' என்ற உரிச் சொல்லடியாகப் பிறந்து ஆய்தம் என்றாகி நுணுகிய ஓசையுடைய எழுத்தென்ற பொருளில் வழங்கியிருத்தல் கூடும் என உய்த்துணர லாம்.

அடிகளாசிரியர்

'அவைதாம்...எழுத்தோரன்ன' இந்நூற்பாவை அடியொற்றி யாப்பருங்கல விருத்தி இரண்டாம் நூற்பா வுரையுள் சார்பிற்

றோன்றுந்தன்மையாவன குற்றியலிகரமும் குற்றியலுகரமும் ஆய்தமும் என இவை; என்னை,

'குற்றியலிகரம் குற்றியலுகரம்
ஆய்தப் புள்ளி யென்றிவை மூன்றும்
சார்பிற் றோற்றத் துரிமையி னுளவே'

என்பவாதலின் என்றும் எழுதப்பட்டுள்ளது. இங்குக் காணப்படும் நூற்பா ஆய்தத்தை 'ஆய்தப்புள்ளி' என்று கூறுகின்றது, தொல் காப்பிய நூற்பா 'ஆய்தம் என்ற முப்பாற்புள்ளி' என்று கூறு கின்றது. தொல்காப்பியரே மொழி மரபு 5-ஆம் நூற்பாவிலும் புள்ளி மயங்கியல் 95-ஆம் நூற்பாவிலும், குற்றியலுகரப் புணரியல் 18-ஆம் நூற்பாவிலும் ஆய்தத்தை ஆய்தப்புள்ளி என்றே கூறி யுள்ளார். 'அஃகேனம் ஆய்தம் தனி நிலை புள்ளி ஒற்றிப் பாலஇவ் வைந்தும் இதற்கே' என்றார் அவிநயனார் (யா.வி.உ) என்னும் யாப்பருங்கல விருத்தி யுரையானும், 'தனி நிலைபுள்ளி ஆய்தம் ஒற்றெழுத்தே' என்ற திவாகர நூற்பாவானும் ஆய்தத் திற்குப் புள்ளி என்று ஒரு பெயருண்டு என்பதை யறிகின்றோம்; மெய்யெழுத்திற்கும் புள்ளியென்று பெயர் இருத்தலை 'புள்ளி மயங்கியல்' என்னும் பெயராலேயே அறிந்து கொள்ளலாம். மெய் யெழுத்தாகிய புள்ளியினின்றும் வேறுபடுத்திக் காட்டவும்' ஆய்தத்தின் வரிவடிவு இன்ன தென்று புலப்படுத்தவும் வேண்டித் தொல்காப்பியர் 'ஆய்தம் என்ற முப்பாற் புள்ளி' என்றனர்.

நச்சினார்க்கினியரும், 'ஆய்தம் என்ற ஓசைதான் அடுப்புக் கூட்டுப் போல மூன்று புள்ளி வடிவிற்று என்பது உணர்த்தற்கு 'ஆய்தம் என்ற முப்பாற்புள்ளியும்' என்றார்' என்று உரைத் தலைக் காணலாம். இந்நூற்பா பெயரும் முறையும் உணர்த்த வந்த நூற்பாவாதலின் 'ஆய்தம்' என்ற முப்பாற்புள்ளி, என்பது ஆய்தத்தின் பெயரை உணர்த்த வந்ததாகல் வேண்டும். முப்பாற் புள்ளி யென்னும் பெயருடன் ஆய்தமும் அதற்கொரு பெயராதலின் இளம்பூரணர் உரையெழுதும் பொழுது எச்ச உம்மையை விரித்து 'ஆய்தமும் என்று சொல்லப்பட்ட' என்று உரை கூறினார். நூற் பாவில் முப்பாற்புள்ளியும் என்ற விடத்துள்ள உம்மையை எண்ணும்மையாகக் கொண்டு குற்றியலிகரமும் குற்றியலுகரமும் என்னும் எண்ணும்மைகள் விகாரத்தாற் றொக்கன வென்றார்.

சிவலிங்கனார்

இந்நூற்பா சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் (1955) பதிப்பில்

அவைதாம்
குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்ற
முப்பாற் புள்ளியும் எழுத்தோ ரன்ன

என்ற அமைப்பில் காணப்படுகின்றது. அது பொருந்தாது. குற்றியலிகரம் குற்றியலுகரம் என்பன நாலசைச்சீர்களாகி ஓசையினிமையில்லையாதலின்.

இனி இந்நூற்பாவின் முதலில் சொற்சீரடியாக உள்ள 'அவைதாம்' என்பதற்குப் பதிலாக 'அவற்றுள்' என்பது அமைந்திருப்பின் சிறக்கும் என்னலாம்.

இதன்முன் நூற்பாவில் அகர முதல் னகர இறுவாய் எழுத்துகள் முப்பது என்பதும், சார்பெழுத்து மூன்றுள என்பதும் கூறப்பட்டன. அவ்விரண்டு செய்திகளுள் 'அவைதாம்' என்பது எதைச் சுட்டும்? சார்ந்துவரல் மரபின் மூன்று என்றதற் கேற்ப இந்நூற்பாவில் மூன்று கூறப்பட்டமையின் 'அவைதாம்' என்பது சார்பெழுத்துகளைச் சுட்டும் என்று கொண்டனர் யாவரும்.

'அவைதாம்' என்பதற்குப் பதிலாக 'அவற்றுள்' என்பதிருந்தால், முன் நூற்பாவில் உள்ள இரண்டு செய்திகளையும் அது சுட்டுவதாகக் கொண்டு பின்னுள்ள வரிகளில் அவ்விரண்டனுள் சார்பெழுத்துக்களின் பெயரும் முறையும் எழுத்தாந் தன்மையும் பிரித்துக் கூறப்பட்டன என்றும் கொள்ளலாம்.




## 2. மாத்திரை

### ஒரு மாத்திரையுடைய குற்றுயிர்

3. அவற்றுள்
அ இ உ
எ ஒ வென்னும் அப்பால் ஐந்தும்
ஓரள [1] பிசைக்கும் குற்றெழுத் தென்ப.

1. சு. வே. விசைக்கும்

## இளம்பூரணர்

இது மேற் கூறப்பட்டனவற்றிற் [1]களபும் குறியும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) அவற்றுள்—மேற் கூறப்பட்ட எழுத்தினுள், அ இ உ எ ஒ என்னும் அப்பால் ஐந்தும்—அ இ உ எ ஒ என்று சொல்லப் படுகின்ற அக்கூற்று ஐந்தும், ஓர் அளபு இசைக்கும்—(ஒரோ வொன்று) ஓர் அளபாக [2]இசைக்கும், குற்றெழுத்து என்ப—அவை தாம் குற்றெழுத்தென்னும் குறிய என்று [3]சொல்லுவர் (புலவர்).

இவர் காரணம் பற்றியன்றிக் குறியிடார். ஆகலின், இது தன் குறுமையான் [4]இக்குறி பெற்றது. இக்குறியை ஆண்டவாறு மேல் வந்த வழிக்கண்டு கொள்க.

## நச்சினார்க்கினியர்

இது முற்கூறியவற்றுட் சிலவற்றிற்கு அளவும் குறியும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) முற்கூறிய முப்பதெழுத்தினுள் அகர இகர உகர எகர ஒகரம் என்று கூறப்படும் அப்பகுதிகள் ஐந்தும், ஒரோவொன்று ஓரளபாக ஒலிக்கும் குற்றெழுத்து என்னும் குறியினையுடைய என்று கூறுவர் புலவர் எ—று.

இக்காரணப் பெயர் மேல் ஆளுமாறு ஆண்டு உணர்க.

தமக்கு இனமாயவற்றின்கண் அல்லது குறுமை நெடுமை கொள்ளப்படாமையின், அளவிற்பட்டு அமைந்தனவாங் குற்றெழுத்திற் குறுகி மெய் அரை மாத்திரை பெற்றதேனும் குற்றெழுத்து எனப் பெயர் பெறாதாயிற்று. ஒரு மாத்திரை பெற்ற மெய் தமக்கு இனமாக இன்மையின் குற்றெழுத் தென்பது பண்புத் தொகை.

இனி இசைப்பதும் இசையும் வேறாக உணரற்க. அது பொருட்டன்மை.

---

1. சிலவற்றிற் களபும்
2. ஒலிக்கும்
3. சொல்லுப
4. இக்குறியை

'அவற்றுள்,' 'அ இ உ' இவை என்பன சொற்சீரடி.

## சுப்பிரமணிய சாஸ்திரியார்

ஈண்டு 'அ, இ, உ, எ, ஒ' என்பன உத்தேசியம். 'குற்றெழுத்து' என்பது விதேயம். அவ்வாறாயின் 'ஓரள பிசைக்கும்' என்ற தொடர் ஏற்றுக் கெனின், அது குற்றெழுத்து என்ற குறி முன்னோரான் ஓரள பிசைக்கும் எழுத்துக்களுக்கே இடைப்பட்ட தெனக் குறித்தற்கு என்னலாம்.

அகரம் முதல் னகரம் இறுதியாய் உள்ளனவற்றிற்கு எழுத்து என்ற பொதுக்குறியிட்ட பின்னர் இச்சூத்திரத்தைக் கூறாது, ஔகார விறுவாய், பன்னீரெழுத்தும் உயிரென மொழிப" என்ற சூத்திரத்தையே கூற வேண்டாவோ எனின், அற்றன்று: குற்றுயிர் நெட்டுயிர் என்ற குறிகளை முறையே அ, இ, உ, எ, ஒ என்ற வற்றிற்கும், ஆ, ஈ, ஊ, ஏ, ஓ, ஔ என்ற வற்றிற்கும் இடாது குற்றெழுத்து நெட்டெழுத்து என்ற குறியிட்டமையின். அளவு என்றதும் மாத்திரை என்றதும் ஒரு பொருட்கிளவி.

இளம்பூரணத்தில் இசைக்கும் என்றது முற்றுவினையாய்க் கொள்ளப்பட்டது. நச்சினார்க்கினியத்தில் பெயரெச்சமாகக் கொள்ளப்பட்டுக் குற்றெழுத் தென்றதைத் தழுவுவதாகக் கூறப் பட்டுள்ளது. இவற்றுள் நச்சினார்க்கியர் கொள்கையே சிறக்கும்.

நச்சினார்க்கினியத்தில் 'மெய் அரை மாத்திரை பெற்ற தேனும் குற்றெழுத்தெனப் பெயர் பெறாதாயிற்று; ஒரு மாத்திரை பெற்ற மெய் தமக்கு இனமாக இன்மையின்' என்றுளது. குறுமை நெடுமை யிரண்டும் அங்கா முயற்சியுள்ள ஒலிகளாகிய உயிர் களுக்கே சிறப்பாக நிகழுமாகலின், அவர் கூற்று ஆராய்தற் குரியது.

## சிவலிங்கனார்

சுப்பிரமணிய சாத்திரியார், "மாத்திரை என்பது 'மாத்ரா' என்பதின் தற்பவம்; மாத்ரா' என்பது அளத்தற் பொருள் கொண்ட 'மா' என்று தாதுவினின்று பிறந்தது என்று உரைக்கீழ்க் குறிப்பில் எழுதினர். மா என்பது பழந்தமிழரின் அளவுப்பெயர் 'மாநிறை வில்லதும் பன்னாட்காகும்.' (புறம்) என்ற விடத்து நில அளவு குறிக்கப்பட்டது காணலாம். 'பொன்னின் மாத்து (மாற்று)' என்பது இன்றும் வழங்கப்படுவதாம்.

பிற குறிப்புக்கள்

1. இந்நூற்பா.
அவற்றுள்
அ இ உ எ ஒ என்னும்
அப்பாலைந்தும்
ஓரள பிசைக்கும் குற்றெழுத் தென்ப

எனக் கழகப்பதிப்பிலும் (நச்சினார்க்கினியர் உரை)

அவற்றுள், அ இ உ
எ ஒ என்னும் அப்பாலைந்தும்
ஓரள பிசைக்கும் குற்றெழுத் தென்ப

எனத் தஞ்சைச் சரசுவதிமகால் நூல் நிலையப் பதிப்பிலும் காணப் படுகின்றன.

'அவற்றுள்','அ இ உ' என்பன சொற்சீரடியென நச்சினார்க் கினியர் எழுதியிருப்பதால் 'அ இ உ' என்பதைத் தனி அடியாகக் கொள்வதே பொருந்தும்.

இந்நூற்பா பாஅ வண்ணத்திற்கு மேற்கோள். (தொல்- பொருள். 526-பேராசிரியர்)

'அஇஉ எஒ என்னும் அப்பாலைந்தும்' எனவும் இவை கட்டுரைக்கண் சொல்லுமாறுபோல எண்ணினமையிற் கட்டுரை வகையான் எண்ணொடு புணர்ந்தன'.

(தொல். பொருள். 435. பேராசிரியர்)

## இரண்டு மாத்திரையுடைய நெட்டுயிர்

4. ஆ ஈ ஊ
ஏ ஐ
ஓ ஔ வென்னும் அப்பா லேழும்
ஈரள பிசைக்கும் நெட்டெழுத் தென்ப

### இளம்பூரணர்

இதுவும் அது.

(இ-ள்.) ஆ ஈ ஊ ஏ ஐ ஓஔ என்னும் அப்பால்ஏழும்—ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ என்று சொல்லப்படுகின்ற அக்கூற்று ஏழும், ஈர் அளபு இசைக்கும்-(ஓரோ வொன்று) இரண்டு மாத்திரையாக ஒலிக்கும்,

சு.வே. 1. விசைக்கும்

நெட்டெழுத்தென்ப-([1]அவைதாம்) நெட்டெழுத்து என்னும் குறிய என்று [2]சொல்லுவர் ([3]புலவர்) ஐகார [4]ஔகாரங்களுக்கு இனம் இல்லையெனினும், மாத்திரை யொப்புமையான் அவை நெட்டெழுத் தெனப்பட்டன.

## நச்சினார்க்கினியர்

இதுவுமது.

(இ-ள்) ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ என்று சொல்லப்படும் அக்கூற்று ஏழும், ஓரோ ஒன்று இரண்டு மாத்திரையாக ஒலிக்கும் நெட்டெழுத்து என்னும் குறியினையுடைய என்று கூறுவர் ஆசிரியர் எ-று.

எனவே, அளவும் காரணக்குறியும் இங்ஙனம் உணர்த்தி மேல் ஆளுப. ஐகார ஔகாரங்கள் குறிய எழுத்தின் நெடியவாதற்குக் குற்றெழுத்தாகிய இனந்தமக்கின்றேனும் மாத்திரை ஒப்புமையான் நெட்டெழுத் தென்றார்.

'ஆ ஈ ஊ', 'ஏ ஐ' என்பனவற்றைச் சொற்சீரடியாக்குக.

## சுப்பிரமணிய சாஸ்திரியார்

ஈண்டு அவற்றுள் என்றது அதிகரித்தது. இளம்பூரணத்தில் 'ஐகார ஔகாரங்கள் ... நெட்டெழுத்தெனப்பட்டன'*என்று கூறப்பட்டுள்ளது. நெட்டெழுத்து என்றதற்கு இலக்கணம் இரண்டு மாத்திரை ஒலிக்கும் எழுத்து என்றே முன்னோர் கொண்டனரே யன்றி, குற்றெழுத்து உடையன என்று கூறாமையின் அவ்வாறு கூறுதல் சாலாது.

மொழியின்கண் அவை (ஐ, ஔ) ஓரளபிசைக்கும் இடனும் உண்டு என ஆசிரியர் பின்னர்க் கூறினும், அவற்றை அப்போது குற்றெழுத்தாகக் கொள்ள உடன்பட்டிலர் எனத் தோன்றுகின்றது.

---

1. அவை
2. புலவர் என்பது சில சுவடிகளில் இல்லை.
3. ஔகாரங்கடமக்கு

* பக்கம் 63ல் பார்க்க.

## வெள்ளை வாரணனார்

இவ்விரு (3, 4) சூத்திரங்களிலும் ஆசிரியர் அ, இ, உ, எ, ஒ, என்னும் ஐந்தும் குற்றெழுத்தெனப் பெயர் பெறும் என்றும், ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்றும் ஏழும் நெட்டெழுத்தெனப் பெயர் பெறும் என்றும் கூறினார், இவற்றைப் பின்வரும் சூத்திரங்களில் எடுத்தாளுதற் பொருட்டு; குற்றெழுத்து நெட்டெழுத்து என்ற இவற்றை இப்பெயர்களாற் கூறுதலே யன்றிக் குற்றெழுத்தைக் 'குறியது' என்றும் (தொல். 38, 226, 234) நெட்டெழுத்தை 'நெடியது (தொல். 160, 401) என்றும் சில இடங்களில் வழங்கி யுள்ளார்.

### பிற குறிப்புகள்

இந்நூற்பா நச்சினார்க்கினியர் கூறிய சொற்சீரடிகளுக்கேற்ப அடிவரையறை செய்யப்பட்டது. பிறவாறு அடிவரையறை காணப்படுவது சிறவாது.

நெட்டெழுத்துகள் ஏழும் எழிசைகளை யுணர்த்தும் என்பது பிங்கலம்.

ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ என்று
ஏழும் ஏழிசைக் கெய்தும் அக்கரங்கள். (பிங்கலம்)

### ஓரெழுத்தே மூன்று மாத்திரை யாகாமை

5. மூவள பிசைத்தல் ஓரெழுத் தின்றே

## இளம்பூரணர்

இது உயிரளபெடை யெழுத்திற்கு மாத்திரை கூறுதல் நுதலிற்று.

(இ-ள்) மூஅளவு இசைத்தல் ஓர் எழுத்து இன்று மூன்று மாத்திரையாக ஒலித்தல் இயல்பாகிய ஓர் எழுத்திற்கு இல்லை. (விகாரமாகிய இரண்டு கூடியதற்கு உண்டு)

## நச்சினார்க்கினியர்

இஃது ஐயம் அகற்றியது, ஓரெழுத்து மூவளபாயும் இசைக்குங் கொல்லோ வென்று ஐயப்படுதலின்-

---

சு. வே. 1 விசைத்தல்

(இ-ள்) ஓரெழுத்தே நின்று மூன்று மாத்திரையாக இசைத்தல் இன்று; எ—று.

எனவே, பல எழுத்துக் கூடிய இடத்து மூன்று மாத்திரையும் நான்கு மாத்திரையும் இசைக்கும் என்றவாறு.

எனவே, பெரும்பான்மை மூன்று மாத்திரையே பெறும் என்றார் புலவர். பலவெழுத்தெனவே, நான்கு மாத்திரையும் பெறுதல் பெற்றாம்.

### வெள்ளைவாரணனார்

இதனால் இயற்கை நிலையில் உள்ள ஓர் எழுத்து மூன்று மாத்திரை யளவாக ஒலித்தல் இல்லை யென்பதே ஆசிரியர் கருத்தாதல் அறியலாம்.

### பிறகுறிப்பு

'மறுதலை சிதைத்துத் தந்துணியுரைத்தல்' என்றவிடத்து மறுதலை சிதைத்தலுக்கு இந்நூற்பாவைக் காட்டினர் பேராசிரியர் (தொல். பொருள். 665)

## மாத்திரை நீளுமாறு

6\. நீட்டம் வேண்டின் அவ்வள புடைய
கூட்டி யெழூஉதல் என்மனார் புலவர்,

### இளம்பூரணர்

இது உயிரளபெடை யாமாறுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) நீட்டம் வேண்டின்—நீண்ட மாத்திரையையுடைய அளபெடை யெழுத்துப் பெற வேண்டின். அ அளபு உடைய கூட்டி எழூஉதல்—மேற்கூறிய இரண்டளபுடைய நெடிலையும் ஓரளபுடைய குறிலையும் (பிளவுபடாமற்) கூட்டி[2] யெழூஉக, என் மனார் புலவர்—என்று சொல்லுவர் புலவர்.

### நச்சினார்க்கினியர்

இது மாத்திரை நீளுமாறு கூறுகின்றது.

(இ.ள்) வழக்கிடத்துஞ் செய்யுளிடத்தும் ஓசையும் பொருளும் பெறுதல் காரணமாக இரண்டு மாத்திரை பெற்ற எழுத்து அம்

---

1. ஓரளபும் ஈரளபும் உடைய குறிலையும் நெடிலையும்
2. எழுதுக. (இப்பாடம் தவறு)

மாத்திரையின் மிக்கு ஒலித்தலை விரும்புவாராயின், தாங்கருதிய மாத்திரையைத் தருதற்குரிய எழுத்துக்களைக் கூட்டி அம்மாத் திரைகளை எழுப்புக என்று கூறுவர் ஆசிரியர்; எ-று.

கூட்டி யெழுப்புமாறு 'குன்றிசை மொழி' (எழு. 41) 'ஐ ஔ என்னும் (எழு. 42) என்பனவற்றான் எழுவகைத்தெனக் கூறுப.

எடுத்துக் காட்டு: ஆஅ, ஈஇ, ஊஉ, ஏஎ, ஐஇ, ஓஒ, ஔஉ. 'நெட்டெழுத்தேழே ஓரெழுத்தொரு மொழி" (எழு. 43) என்ற அந்நெட்டெழுத்துக்களே அளபெடுத்தலிற் சொல்லாதல் எய்தின. இனி, 'அளபெடை யசைநிலை யாகலும் உரித்தே' (செய்யுளியல் 17) என்னும் செய்யுளியற் சூத்திரத்தான் எழுத்தாந் தன்மையும் எய்திற்று.

இதுதான் இயற்கையளபெடையும் செய்யுட்குப் புலவர் செய்து கொண்ட செயற்கை யளபெடையுமாய்ச் சொற்றன்மை யெய்தி நின்று அலகு பெறுமாறும் குற்றியலிகரக் குற்றியலுகரங்கள் போல எழுத்தாந் தன்மை யெய்தி அலகு பெறாது நிற்குமாறும் அச் சூத்திரத்தான் உணர்க. எனவே, எழுத்தாந் தன்மையும் உடைமையின் அளபெடையோடு கூடி எழுத்து நாற்பது என்றலும் பொருந்திற்று. ஒற்றளபெடை செய்யுட்கே வருதலின் ஈண்டுக் கூறாராயினர்.

அவ்வளபுடைய எனப் பன்மையாகக் கூறியவதனான் இவரும் நான்கு மாத்திரையும் கொண்டார். என்னை? இவ்வாசிரியரை 'முந்து நூல் கண்டு' என்றாராகலின். மாபுராணத்து,

செய்யுட்கள் ஓசை சிதையுங்கால் ஈரளபும்
ஐயப்பா டின்றி யணையுமாம்—மைதீர் ஒற்று
இன்றியும் செய்யுட் கெடினொற்றை யுண்டாக்கு
குன்றுமேல் ஒற்றளபும் கொள்

என்ற சூத்திரத்தான் அவர் கொண்ட நான்கு மாத்திரையும் இவ் வாசிரியர்க்கு நேர்தல் வேண்டுதலின் அது 'செறா அஅய் வாழிய நெஞ்சு' (குறள் 1200) 'தூஉஉத் தீம்புகைத் தொல்விசும்பு', (மலைபடுகடாம் இறுதி வெண்பா) 'பேஎஎர்த்துக் கொல்', 'இலாஅஅர்க்கில்லை தமர்'(நாலடியார் 283) 'விரா அஅய்ச் செய் யாமை நன்று'(நாலடியார் 246) மரீஇஇப் பின்னைப் பிரிவு (நாலடி யார் 220) எனச் சான்றோர் செய்யுட்கள் எல்லாம் நான்கு மாத் திரைபெற்று நின்றன. அன்றி மூன்று மாத்திரை பெற்றனவேல்

ஆசிரியத்தளை தட்டுச் செப்பலோசை கெடுமாயிற்று. இங்ஙனம் அளபெடாது நின்று ஆசிரியத்தளை தட்டு நிற்பன கலிக்கு உறுப்பாகிய கொச்சக வெண்பாக்கள். இவை யன்ன அன்றென உணர்க.

கோட்டு நூறும் மஞ்சளும் 'கூடிய வழிப் பிறந்த செவ் வண்ணம் போல நெடிலும் குறிலும் கூடிய கூட்டத்துப் பிறந்த பின்னர்ப் பிளவுபடா ஓசையை அளபெடை யென்று ஆசிரியர் வேண்டினார். இவை கூட்டிச் சொல்லிய காலத்தல்லது புலப் படா, எள்ளாட்டிய வழியல்லது எண்ணெய் புலப்படாவாறு போல என்று உணர்க. இனி அளபெடை யல்லாத ஓசைகள் எல்லாம் இசையோசை யாதலின் அவற்றை 'அளபிறந் துயிர்த்தலும்' (எழு 33) என்னும் சூத்திரத்தாற் கூறுப.

## வேங்கடராசுலு ரெட்டியார்

இச்சூத்திரங்களில் (5. 6.ல்) முறையே ஓர் எழுத்து மாத்திரை யளவு ஒலித்தல் இல்லை யென்றும், இரண்டு மாத்திரைக்கு மேல் நீட்டி ஒலித்தல் வேண்டுமாயின், அவ்வளபினையுடைய எழுத்தினைக் கூட்டி ஒலித்தல் வேண்டும் என்றும் ஆசிரியர் கூறியுள்ளார்.

வடமொழியில் ஓர் எழுத்து மூன்று மாத்திரையும் பெறும் ஆகலின், அவ்வாறு இம்மொழியில் இல்லையென்று கூறவேண்டுவ தாயிற்று. ஒரு மாத்திரையளவொலிக்கும் எழுத்து 'ஹ்ரஸ்வம்' என்றும், இரண்டு மாத்திரையளவொலிக்கும் எழுத்து 'தீர்க்கம்' என்றும், மூன்று மாத்திரை யளவொலிக்கும் எழுத்து 'ப்லுதம்' என்றும் வடமொழியில் வழங்கும்.

தமிழில் ஓர் எழுத்து இரண்டு மாத்திரையளவிற்கு மேல் ஒலித்தல் இல்லை. மூன்று மாத்திரை ஒலித்தல் வேண்டுமாயின், இரண்டு மாத்திரை ஒலிக்கும் நெட்டெழுத்தின் பின் ஒரு மாத்திரை யொலிக்கும் குற்றெழுத்தொன்றனைக் கூட்டி ஒலித்தல் வேண்டும். இன்ன குற்றெழுத்து என்பது முன்னர் மொழி மரபின் 8, 9—ம் சூத்திரங்களிற் கூறுவர். 'அவ்வளபுடைய' என்று பன்மையாற் கூறியிருத்தலின், இரண்டு குற்றெழுத்துக்களைக் கூட்டி நான்கு மாத்திரையள வொலித்தலும் உண்டு. இது நச்சினார்க்கினியர் உரையினால் விளக்கமுறும்.

---

சு. வே. 1 கூடிய கூட்டத்து.

இனி எழூஉதல் என்னும் சொல்லின் அமைப்பினை நோக்குதும்.

எழு-தன்வினை; எழூஉ—பிறவினை. எழூ என்பது, எழு+உ என்பவற்றாலாய சொல். முதல் நிலையின் (எழு) உகரத்தோடு பிறவினைப் பொருளில் வந்த உகரம் சேர்ந்து ஊகாரமாகி எழூ என்றாயிற்று. இவ்வாறே தழு; குழு என்பவற்றோடு விகுதியாக வந்த உகரம் சேர்ந்து, தழூ, குழூ என்பன அமைந்துள்ளன. ஆயின் எழூஉ தழூஉ, குழூஉ என்பவற்றின் ஈற்றில் உகரம் நிற்றலின், எழு, தழு, குழு என்பன அளபெடுத்தன என்றலே யமையும் எனின், அற்றன்று; செய்யுளிலன்றி உரைநடையிலும் தழூஉ குழூஉ என்றெழுதப்படுதலின் ஆண்டும் அளபெழுந்தன என்றல் அமையாதன்றே? அளபெழுதல் செய்யுட்களில் ஓசை குறைந்தவிடத்தன்றே உளதாகும்? இவற்றால், தழூ குழூ என்பன அளபெடுத்தன என்றல் அமைதியாகாது என்பது புலனாகும். ஆயின், இச்சொற்களின் ஈற்றில் உகரம் நிற்றற்குக் காரணம் என்னையோ எனின், தழு குழு என்பன போன்ற சொற்களில் ஈற்றுகரத்தோடு விகுதியாய் வந்த உகரம் சேர்ந்து ஊகாரமாய் நிற்குமிடத்து, அவற்றின் உண்மையறியாது, அவை, இயல்பாய் ஊகாரவீற்றுச் சொற்களே யென்று கருதுதலும் கூடுமாகலின், முதனிலையொடு சேர்ந்த உகரத்தை அறிவிக்கும் பொருட்டு ஈற்றில் அறிகுறியாக உகரமிட்டு எழுதப்பட்டது என்பது உய்த்துணரத் தக்கது.

தழு குழு என்பனவற்றின் ஈற்றுகரத்தோடு விகுதி யுகரம் ஒருங்கு சேர்ந்து தழூ குழூ என நிற்றல் பண்டைய வழக்கு; அம் முதனிலைகளின் உகரத்தோடு விகுதி யுகரம் ஒருங்கு சேராது, வகரவுடம்படு மெய் பெற்று, தழுவு, குழுவு என நிற்றல் பிற்கால வழக்கு. எடுப்பது+உம்=எடுப்பதூஉம் என்பது போல்வன பலவும் இவ்வாறமைந்தனவே. மகாஅர் என்னும் சொல்லில், மக என்னும் முதனிலையின் அகரத்தோடு அர் என்னும் விகுதியின் அகரம் சேர்ந்து ஆகாரமாகி மகார் என்றாகியவழி, மக என்பதனோடு விகுதியின் அகரம் சேர்ந்துளது என்பதை யறிவித்தற் பொருட்டு ஆண்டு அகரம் (மகாஅர்) நிற்றல் ஈண்டைக்கு நோக்கத் தகும். 'கெடுப்பதூஉம் (குறள் 15) என்பதுவும் கெடுப்பது என்னும் சொல்லோடு உம் சேர்ந்து ஆகியதுவே. அஃது இக்காலத்தில் உடம்படு மெய் பெற்றுக் கெடுப்பதுவும் என்று வழங்குகின்றது. இவற்றால் எழு என்பதனோடு உகரம்

சேர்ந்து எழூஉ என்றாயவாறு தெளியப்படும்.

................

என்மன என்பது வினைமுற்று. அதனோடு அவர் என்பதன் திரிபாகிய ஆர் என்பது சேர்ந்து 'என்மனார்' என்றமைந்தது. உணரும் என்னும் வினைமுற்றோடு ஆர் என்பது சேர்ந்து உணருமோர் (எழுத்து 193) என்று வந்துளது காண்க. செய்யும் என்னும் வினைமுற்றுப் போலவே செய்மன என்னும் வினை முற்றும் ஆசிரியர் காலத்தில் வழங்கியது என்பது,

"செய்மன என்னும் தொழிலிறு சொல்லும்" (எழு. 210)

"செய்மன செய்யும் செய்த என்னும்" (சொல் 222)

என்னும் இடங்களான் அறியப்படும். இனி ஆசிரியர், இசைக்கு மன சொல்லிலே (சொல். 1) என்று ஆளுதலும் காண்க. இவற்றால், என்மனார் என்னும் சொல்லின் இயல்பு உணரப்படும். ஆயின், என் மன என்னும் வினைமுற்றின் அமைதி என்னையோவெனின், அதனைச் சொல்லதிகாரத்தில் விளங்கக் கூறுவேன்.

வெள்ளைவாரணனார்

'கூட்டி யெழுஉதல்' என்பதற்கு 'கூட்டியெழுப்புக' என முன்னையோர் உரைத்த வழியே பொருள் கொள்ளாது, 'கூட்டி எழுதுக' எனப் பொருள் கொள்வாரும் உளர். 'எழு' என்ற தன் வினைப்பகுதி இறுதி யுகரம் நீண்டு அளபு பெற்று நின்ற தாகலின், 'எழுதுக' என 'எழுது' என்பதனைப் பகுதியாய் வைத் துரைத்தல் பொருந்தாது. அன்றியும் இரண்டு மாத்திரை பெற்ற எழுத்து ஓசை குன்றுவதான சொற்கண் மூன்று மாத்திரையாய் நின்று ஓசை பெறவேண்டின் அதனோடு ஒத்த குற்றெழுத்து அதன் பின்னர் நின்று அதன் ஓசையை நிறைவிக்கும் என்ற அளபெடைச் சூத்திரத்தோடு இது மாறுபட்டு, வரிவடிவில் இனவெழுத்தை அறிகுறியளவாகக் கூட்டி எழுதுதல் ஒன்றே ஓசை நீடற்குரிய வழியாம் எனப் பொருள் தந்து ஆசிரியர் கருத்தை மயங்க வைப்பதாகும்.

சிவலிங்கனார்

நீட்டம் என்பதற்கு 'நீண்ட மாத்திரையுடைய அளபெடை யெழுத்து' எனப் பொருள் கொண்டார் இளம்பூரணர். 'அளபெடை எழுத்து' என்பது ஒன்று கொண்டார் அவர். 'குன்றிசைமொழி

வயின்' (தொல். எழு. 41) என்ற நூற்பாவில் 'குன்றிசைமொழி' என்பதற்கு அவர், 'அளபெடையோசையாகச் சொல்லா தொழியின் குன்றுவதான ஓசையையுடைய அவ்வளபெடை யெழுத்தானாய மொழி' என்றுரை எழுதியதும், 'சண்டு மொழி யென்றது அவ்வளபெடையெழுத்து ஒரு பொருள் உணர்த்தி ஓரெழுத் தொரு மொழியாய் நிற்கும் நிலைமையினை' என்று விளக்கம் எழுதியதும் காண்க. மேலும், மறுதலை சிதைத்துத் தந்துணிபு உரைத்தல் என்ற உத்திக்கு, 'பிற நூலாசிரியன் கூறின பொருண்மையினைக் கெடுத்துத் தன் துணிவு கூறுதல்' என விளக்கம் எழுதி, 'அஃதாவது நெட்டெழுத்தேழ் அளபெடை என்பன குற்றெழுத்தின் விகாரம் என்பாரை மறுத்து வேறோர் எழுத்தாக ஓதுதல்' என எழுதியதும் காண்க.(தொல்.மரபியல் 111)

## மாத்திரைக்கு அளபு

7. கண்ணிமை நொடியென அவ்வே மாத்திரை
நுண்ணிதின் உணர்ந்தோர் கண்ட வாறே.

### இளம்பூரணர்

இது அம்மாத்திரை இலக்கணம் கூறுதல் நுதலிற்று.

(இ-ள்) கண் இமை நொடி என அவ்மாத்திரை—கண் இமையும் நொடியுமாகிய அவை மாத்திரைக்கு [1]அளபு, நுண்ணிதின் உணர்ந்தோர் கண்ட ஆறு—(இது) நுண்ணிதாக நூலிலக்கணத் தினை உணர்ந்த ஆசிரியர் கண்டநெறி.

இமையென்றது, [2]இமைத்தல் தொழிலை. நொடியென்றது. நொடியிற் பிறந்த ஓசையை. தன் [3]குறிப்பின்றி நிகழ்தலின் இமை முன் கூறப்பட்டது. நிறுத்தளத்தல் பெய்தளத்தல், நீட்டி யளத்தல், [4]நெறித்தளத்தல், தேங்கமுகந்தளத்தல், சார்த்தி யளத்தல், எண்ணியளத்தல் என எழுவகைய அளவினுள் இது, சார்த்தியளத்தல். 'நுண்ணிதின் உணர்ந்தோர் கண்டவாறு' என்றதனான், நாலுழக்குக் கொண்டது நாழி என்றாற் போல அவ்வளவைக்கு அளவை பெறாமை [5]அறிக.

---

சு. வே: 1. அளவு
2. இமைத்தொழிலை
3. குறிப்பின்றி
4. தெறித்தளத்தல்
5. கொள்க.

### நச்சினார்க்கினியர்

இது மாத்திரைக்கு அளவு கூறுகின்றது.

(இ-ள்) கண் இமையெனவும் நொடியெனவும் அவ்விரண்டே எழுத்தின் மாத்திரைக்கு அளவு; நுண்ணிதாக நூலிலக்கணத்தை யுணர்ந்த ஆசிரியர் கண்டநெறி; எ-று.

'என' எண்ணிற் பிரிந்து இரண்டிடத்தும் கூடிற்று. கண்ணிமை நொடி யென்னும் பலபொருள் ஒரு சொற்கள் ஈண்டுத் தொழில் மேலும் ஓசைமேலும் முறையே நின்றன. ஆசிரியர் எல்லாரும் எழுத்திற்கு இவையே அளவாகக் கூறலின் இவரும் கூறினார். இயற்கை மகன் தன் குறிப்பினன்றி இரண்டிமையும் ஒருகாற் கூடி நீங்கின காலக்கழிவும் 'அ' எனப் பிறந்த ஓசையது தோற்றக் கேட்டுக் காலக்கழிவும் ஒக்கும். இக்கண்ணிமையினது பாகம் மெய்க்கும் சார்பிற்றோற்றத்திற்கும் இதன் பாகம் மகரக் குறுக்கத் திற்கும் கொள்க. இக் கண்ணிமை இரட்டித்து வருதல் நெடிற்கும் அது மூன்றும் நான்குமாய் வருதல் அளபெடைக்கும் கொள்க. அதுபோலவே நொடித்தற்றொழிலில் பிறந்த ஓசையது தோற்றக் கேட்டுக் காலக்கழிவும் 'அ' எனப் பிறந்த ஓசையது தோற்றக் கேட்டுக் காலக்கழிவும் ஒக்கும். ஏனையவற்றிற்கும் கூறியவாறே கொள்க.

இனி அவ்வளவைதான் நிறுத்தளத்தல், பெய்தளத்தல், சார்த்தியளத்தல், நீட்டியளத்தல், தெறித்தளத்தல், தேங்கமுகந் தளத்தல், எண்ணியளத்தல் என எழுவகைத்து. அவற்றுள் இது சார்த்தியளத்தலாம்.

கண்ணிமைக்கும் நொடிக்கும் அளவு ஆராயின் வரம்பின்றி ஓடும் என்று கருதி 'நுண்ணிதின் உணர்ந்தோர் கண்டவாறு என்று முடிந்தது காட்டல் என்னும் உத்தி கூறினார். இஃது ஆணை கூறுதலுமாம். எனவே, எழுத்திற்கே அளவு கூறி மாத்திரைக்கு அளவு கூறிற்றிலர். நொடியிற் கண்ணிமை சிறப்புடைத்து, உள்ளத்தான் நினைத்து நிகழாமையின்.

### வேங்கடராசுலு ரெட்டியார்

மேல் 'ஓரள பிசைக்கும் குற்றெழுத்' தென்றும் 'ஈரள பிசைக்கும் நெட்டெழுத்து' என்றும் கூறியவதனான், ஈண்டு, அவ்வளபின் இலக்கணம் கூறுகின்றார். உரையாசிரியரும் இவ் வாறே கருத்துக் கொண்டார். ஆகலின், நச்சினார்க்கினியர், இச்

சூத்திரத்தால் 'எழுத்திற்கே அளவு கூறி, மாத்திரைக்கு அளவு கூறிற்றிலர்' என்றது அமைதியுடையதாகத் தோன்றவில்லை. இது (இச்சூத்திரம்) மாத்திரைக்கு அளவு கூறுகின்றது' என்று கருத்துரை கூறிய அவர்தாமே, 'மாத்திரைக்கு அளவு கூறிற்றிலர்' என்றது மாறாயுளது. ஆகலின் கருத்துரையில், 'இஃது எழுத்தின் மாத்திரைக்கு அளவு கூறுகின்றது' என்றிருத்தல் வேண்டும் எனத் தோன்றுகின்றது. இனி 'நுண்ணிதின் உணர்ந்தோர் கண்டவாறு' என்றதனான், நாலுழக்குக் கொண்டது நாழி என்றாற் போல அவ்வளவைக்கு அளவை பெறாமையறிக' என்னும் இளம்பூரணர் உரையைக் கொண்டு நச்சினார்க்கினியர் இவ்வாறு எழுதினாராவர் போலும்.

வடநூலார் மாத்திரையின் அளவிற்குக் [1]கண் இமைத் தலையும் [2]விரல் நொடித்தலையுமே யன்றி வேறு பலவற்றையும் கூறியுள்ளார். அவையாவன: [3]ஓர் அகங்கைக்கு மேல் நான்கு அங்குலம்இடைகிடப்ப மற்றோர் அகங்கையை வைத்துக்கொண்டு மெதுவும் விரைவும் இன்றியடித்தல், விரைதலும் நீட்டித்தலும் இன்றி முழங்காலைக் கையாற் சுற்றுதல் முதலியன. இனி, [4]குருவி கூவுதல் ஒரு மாத்திரைக்கும், காகம் கரைதல் இரண்டு மாத்திரைக்கும், மயில் அகவுதல் மூன்று மாத்திரைக்கும், கீரியின் குரல் அரைமாத்திரைக்கும் கொள்க என்றும் கூறப்பட்டுளது.

மற்று [5]நோயில்லாத இளையோன் குற்றெழுத்தினைக் குறைந்தவளவில் எத்துணை நேரம் ஒலிப்பானோ அத்துணை நேரம் ஒரு மாத்திரை யெனப்படும் என்று கூறப்பட்டுள்ளது. இது மாத்திரைக்கு அளவு.

---

1 'நிமேஷோந்மேஷ காலேந ஸமம் மாத்ராது ஸாஸ்ம்ருதா.'

2. 'அங்குலீஸ்ப் போடநம் யாவத்காலே மாத்ரேதி ஸோச்யதே.'

3. சதுரங்குலமாநாந்தராலகம் கரதாடநம்
அக்ஷிப்ரமந்தம் யத்தத்ஸ்யாத் மாத்ரா ஸைவ லகுர்ப வேத்.'
'ஜானுப்ரதக்ஷிணம் யத்தத் ந த்ருதம் ந விலம்பிதம்.'

4. 'சடகோரௌத்யோகமாத்ரம் த்விமாத்ரம் ரௌதி வாயஸ;
த்ரிமாத்ரம் து ஶிகீ ரௌதி நகுலஸ்த்வர்த்த மாத்ரகம்!

5. ஸ்வஸ்தோ யுவா ருஜுஶ்வாஸ உச்சரத்யக்ஷரம் லகு
காலேந யாவதா ஸா ஸ்யாந்மாத்ரேதி முகயோ விது:
(கர்ணாடக ஶப்தாநு ஶாஸகம் 3. வ்யாக்.)

சுப்பிரமணிய சாஸ்திரியார்

(இ-ள்) நுண்மையாய்ப் புலவர் அறிந்த வழியின்கண் மாத்திரை யென்றது கண்ணிமைக்கும் பொழுதும், விரல்நொடிக்கும் பொழுதுமாகிய அவையாம்.

ஈண்டுக் கண்ணிமை, நொடி இச்சொற்கள் ஆகுபெயரால் கண்ணிமைக்கும் பொழுது, நொடிக்கும் பொழுது என்ற பொருள் கொண்டன. 'ஆறு' என்றதை ஏழாம் வேற்றுமையுருபு தொக்க சொல்லாகக் கொள்ளின் பொருந்தும். முற்சூத்திரங்களிற் கூறப் பட்ட 'அளபு' என்றது உத்தேசியம். அதனை 'மாத்திரை' என்ற சொல்லாற் கூறினர்; கண்ணிமை நொடி என்றது விதேயம்.

...... ...... ......

இருவரும் (இளம்.,நச்.) 'மாத்திரை' என்றதற்கு 'மாத்திரைக்கு அளவு' எனப் பொருளும் கூறினர். மாத்திரையின் இலக்கணம் இச்சூத்திரம் கூறுகின்றமையின், மாத்திரை யென்ற சொல்லை ஆகுபெயராகக் கொள்ளாது, கண்ணிமை, நொடி இவற்றைக் கண் இமைக்குங் காலம், நொடிக்குங் காலம் என்ற பொருளில் ஆகு பெயராகக் கொள்வது நேரிதாகும்.

நச்சினார்க்கினியம் தாமோதரம்பிள்ளை, சுன்னாகம் பொன்னையா இவர்களது பதிப்பில் 'இக்கண்ணிமை இரட்டித்து வருதல் நெடிற்கும், அது மூன்றும் நான்குமாய் வருதல் அளபெடைக்குங் கொள்க ......ஏனையவற்றிற்குங் கூறியவாறே கொள்க' என்ற சொற்றொடர் உளது. இது மகாலிங்கய்யர் பதிப் பிலும் சைவசித்தாந்தக் கழகப் பதிப்பிலும் இன்று. ஆகலின் இஃது இடைச் செருகல் எனக் கருதலாம்.

வெள்ளைவாரணனார்

இது, மேல் எழுத்தெனப் பட்டவற்றுள் குற்றெழுத்து நெட் டெழுத்து எனப் பெயர் கூறியவழி உடம்பொடு புணர்த்தலான் அவற்றளபாக மாத்திரையும் கூறப்பட்ட தாகலின் இயைபு பட்டமை கருதி மாத்திரை இன்னதென அதன் அளவு கூறு கின்றது.

...... ...... ......

கண் இமைத்தலும் நொடியோசையும் இங்கு இயற்றமிழா சிரியர் எழுத்தோசையின் எல்லையாக அமைத்துக் கொண்ட ஓரளபிற்கு (ஒருமாத்திரைக்கு) அளவாதல் கூறப்பட்டது.

...... ...... ......

அவ்வே என்பதன் ஏகாரம், அளவு கருவிகள் எல்லாவற்றுள்ளும் இவையே ஒரு மாத்திரையியல்பினை விளங்க உணர்த்துவன எனப் பிரிநிலை குறித்தது.

**சிவலிங்கனார்**

நொடி என்பது நொடிக்கும் பொழுது எனக்கொள்வது பொருந்தாது. நொடித்தல் இயல்பில் எழுவதன்று. ஒருவன் நினைந்து செயல்படுவது. நொடிக்கத் தொடங்கும் பொழுதும் முடிக்கும் பொழுதும் அவரவர்க்கேற்றவாறு காலத்தோற்ற முடிபுகள் நீடலும் குறுகலும் ஆகும். அதனால் நொடியிற் பிறக்கும் ஓசை எனப் பொருள் கொள்வதே சிறக்கும்.

பிற குறிப்புகள்

இந்நூற்பா முடிந்தது காட்டல் என்னும் உத்தியின் இனத்துக்கு மேற்கோள் (தொல். பொருள். 665. பேராசிரியர்).

தொல். சொல். இடையியல் 46 ஆம் நூற்பாவில் 'என' என்பது முன்னும் கூட்டப்படுதற்கு மேற்கோளாக இளம், நச், சேனா. ஆகியோர் காட்டினர்.

# 3. எண்

## பன்னீருயிர்

8. ஔகார விறுவாய்ப்
பன்னீ ரெழுத்தும் உயிர்என மொழிப

**இளம்பூரணர்**

இது, மேற்கூறிய குறிலையும் நெடிலையும் தொகுத்து வேறு ஓர் குறியிடுதல் நுதலிற்று.

(இ-ள்.) ஔகார இறுவாய் பன்னீரெழுத்தும்—ஔகாரமாகிய இறுதியையுடைய பன்னிரண்டு [1]எழுத்தினையும், உயிர் என மொழிப—உயிரென்னும் குறியினையுடைய என்று சொல்லுவர்.

---

சு. வே: 1. எழுத்தையும்

### நச்சினார்க்கினியர்

இது குறிலையும் நெடிலையும் தொகுத்து வேறோர் குறியீடு கூறுகின்றது.

(இ-ள்.) அகரம் முதலாக ஔகாரம் ஈறாகக் கிடந்த பன்னிரண் டெழுத்தும், உயிரென்னும் குறியினையுடைய என்றும் கூறுவர் புலவர்; எ-று.

இதுவும் ஆட்சியும் காரணமும் நோக்கியதோர் குறி. மெய் பதினெட்டினையும் இயக்கித் தான் அருவாய் வடிவின்றி நிற்றலின் உயிராயிற்று. இவை மெய்க்கு உயிராய் நின்று மெய்களை இயக்கு மேல் உயிர்என வேறோர் எழுத்தின்றாம் பிறவெனின், மெய்யின் நிற்கும் உயிரும் தனியே நிற்கும் உயிரும் வேறெனவுணர்க. என்னை? 'அகர முதல' (குறள். 1.) என்புழி அகரம் தனியுயிரு மாய்க் ககரவொற்று முதலியவற்றிற்கு உயிருமாய் வேறு நிற்றலின். அவ்வகரந் தனியே நிற்றலானும் பல மெய்க்கண் நின்று அவ்வம் மெய்கட்கு இசைந்த ஓசைகளைப் பயந்தே நிற்றலானும் வேறு பட்டதாகலின் ஒன்றே யாயும் பலவேயாயும் நிற்பதோர் தன்மை யையுடைத்தென்று கோடும்; இறைவன் ஒன்றேயாய், நிற்கும் தன்மையும் பல்லுயிர்க்குந் தானேயாய் அவற்றின் அளவாய் நிற்கும் தன்மையும் போல, அது 'அ' என்ற வழியும், ஊர' என விளியேற்ற வழியும் 'அகரமுதல' என்ற வழியும் மூவினங்களில் ஏறின வழியும் ஓசை வேறுபட்டவாற்றான் உணர்க. இங்ஙனம் இசைத்துழியும் மாத்திரை யொன்றேயாம். இஃது ஏனையுயிர் கட்கும் ஒக்கும்.

ஔகார விறுவாய் என்பது பண்புத்தொகை. உம்மை முற்றும்மை. 'அகரமுதல்' என முற்கூறிப் போந்தமையின் ஈண்டு ஈறே கூறினார்.

### சுப்பிரமணிய சாஸ்திரியார்

நச்சினார்க்கினியத்தில் "மெய்பதினெட்டினையும் இயக்கித் தான் அருவடிவாய் வடிவின்றி நிற்றலின், உயிராயிற்று" என்ற தொடர் உளது. 'அருவாய்' என்றதற்கு உருவமின்றி என்பது பொருளாகும். இவ்வாறு கூறுதற்குக் காரணம் ''மெய்யினியக்கம் அகரமொடு சிவணும்'' (தொல். எழுத். 46) என்ற சூத்திரத்தில் அகரம் தனிமெய்க்கண் கலந்து நிற்கும் என்ற அவர் கொள்கையே யாகும். அச்சூத்திரத்திற்கு உரையாசிரியர் கொள்ளும் பொருள்

''தனி மெய்களினது இயக்கம் அகரத்தோடு பொருந்தும்" என்றது. அப்பொருளைக் கொள்ளின் நச்சினார்க்கினியர் கூற்றுப் பொருந் தாது. 'மெய்யினிற்கும் உயிரும் தனியே நிற்கும் உயிரும் வேறென உணர்க' என்ற நச்சினார்க்கினியர் கொள்கை மொழிநூல் வல்லோர் கொள்கைக்கு மாறுபட்டது. நச்சினார்க்கினியர் இவ்வாறு கூறுதற்குக் காரணம் 'உயிர்' என்றதும் 'சீவன்' என்றதும் ஒரு பொருட்கிளவி என்றதாகும். 'உயிர்' என்றது 'பிராணன்' என்ற பொருளில் வந்ததெனின் அவர் கூற்றுப் பொருந்தாது. 'இறைவன் ஒன்றேயாய் நிற்கும் தன்மையும் பல்லுயிர்க்குந் தானேயாய் அவற்றின் அளவாய் நிற்கும் தன்மையும் போல' என்றவிடத்து 'அவற்றின் அளவாய்' என்ற தொடரால் ஜைனர் கொள்கையை நச்சினார்க்கினியர் கூறினர் என அறியத்தகும்.

குறிப்பு

அவற்றின் அளவாய் என்பதற்கு அவற்றின் உடனாய் எனப் பொருள் கொள்ளின் ஜைனர் கொள்கையைக் கூறினார் என்பதற் கில்லை.

## பதினெண்மெய்

9. னகார விறுவாய்ப்
பதினெண் எழுத்தும் மெய்யென மொழிப.

### இளம்பூரணர்

இது மேற்கூறிய உயிரல்லா எழுத்திற்கும் ஓர் குறியிடுதல் நுதலிற்று.

(இ-ள்) னகார இறுவாய் பதினெண் எழுத்தும்—னகாரமாகிய இறுதியையுடைய பதினெட்டு எழுத்தினையும், மெய்யென மொழிப—மெய்யென்னும் குறியினையுடைய என்று சொல்லுவர்.

### நச்சினார்க்கினியர்

இஃது உயிர் அல்லனவற்றைத் தொகுத்து ஓர் குறியீடு கூறு கின்றது.

(இ-ள்) ககாரம் முதல் னகாரம் ஈறாய்க் கிடந்த பதினெட்டு எழுத்தும், மெய்யென்னும் குறியினையுடைய என்று கூறுவர் புலவர்; எ-று.

இதுவும் ஆட்சியும் காரணமும் நோக்கியதோர் குறி. என்னை? பன்னீருயிர்க்குந் தான் இடங்கொடுத்து அவற்றான் இயக்குந் தன்மை பெற்ற உடம்பாய் நிற்றலின்.

னகார இறுவாய் என்பது பண்புத்தொகை. உம்மை முற்றும்மை. முன்னர் னகார இறுவாய் என்புழி முப்பதெழுத்திற்கும் ஈறாம் என்றார், ஈண்டுப் பதினெட்டெழுத்திற்கும் ஈறாம் என்றாராதலிற் கூறியது கூறிற்றன்று.

## வெள்ளைவாரணனார்

மேற் சூத்திரத்து ஔகார இறுவாய் எனக் கூறிப் போந்தாராதலின் ஈண்டு 'னகர இறுவாய்' என்றே கூறினும் ஔகாரத்திற் கடுத்த ககரம் முதல் என்பது தானே பெறப்படும் ஆதலிற் கூறாதொழிந்தார்.

அகர முதல் ஔகாரம் ஈறாம் பன்னிரண்டெழுத்துக்களும் உலகத்து உடலையியக்கும் உயிர்போல ஏனைப் பதினெட்டு எழுத்துக்களையும் இயக்கித் தாம் அவையின்றியும் இயங்கும் ஆற்றலுடைமை கண்டு, அவை பன்னிரண்டனையும் உவம ஆகு பெயரான் 'உயிர்' எனக் குறியிட்டும், உயிரின்றியியங்கா உலகத்து ஏனையுடல்கள் போல இவையின்றி யியங்காக் ககர முதல் னகரம் விறுவாய்ப் பதினெட்டெழுத்துக்களையும் அவ் ஆகுபெயரான் மெய்யெனக் குறியிட்டும் வழங்கிய பண்டைத் தமிழ் இலக்கண நூலாசிரியரின் ஒலி நூலறிவு இவ்வுலகத்து எம்மொழியினும் காணப்படாத தனிச் சிறப்புடையது எனப் பேராசிரியர் பலர் கூறுப.

இவ்வாறு தனித்தியங்கும் ஆற்றலுடையவாய் அவ்வாற்றலில்லாத பதினெட்டெழுத்துக்களையியக்கியும் வரும் பன்னிரண்டெழுத்தினையும் 'உயிர்' எனவும், அவ்வாற்றலில்லாது அவற்றான் இயக்கப்படும் பதினெட்டெழுத்தினையும் 'மெய்' எனவும் முன்னையோர் மொழிப என ஆசிரியர் தொல்காப்பியனார் வேறு பிரித்துக் கூறுதலால், அவர்க்கு முற்பட்ட பண்டைத் தமிழாசிரியர்கள் உடலையியக்கும் ஆற்றல் ஒன்று உண்டெனக் கொண்டு அதனை 'உயிர்' எனவும், அவ்வுயிரால் இயக்கப்படும் உடலை மெய்யெனவும் குறியிட்டு வழங்கினார்கள் என்பதும், எனவே உயிர் வேறு உடல்வேறு என்னும் கொள்கை அவர் தமக்கு உடன்பாடு என்பதும் பெறப்படும்.

உயிர் ஆவி யென்பன ஒரு பொருளன. மெய் உடம்பு என்பன ஒரு பொருட் சொற்கள்.

## உயிர்மெய்க்கு அளபு

10. [1]மெய்யோ டியையினும் உயிரியல் திரியா

### இளம்பூரணர்

இது, உயிர் மெய்க்கு அளபு கூறுதல் நுதலிற்று.

(இ-ள்) மெய்யோடு இயையினும்—(உயிர்மெய்யாவன) மெய் களோடு உயிர் இயையப் பிறந்த நிலைமைய வாயினும், உயிரியல் திரியா—(அவ்வுயிர்மெய்கள் அவ்வியல்பின் கண்ணே வேறு ஓர் எழுத்தாய் நின்றமையின், மெய்யோடு இயைபின்றி நின்ற) உயிர் களது இயல்பில் திரியா.

உயிரும் மெய்யும் கூடுகின்ற உயிர்மெய்க் கூட்டத்தினை மெய்யோடியையினும்' என உயிர்மேல் வைத்துக் கூறியது. அவ்வுயிரின் மாத்திரையே இதற்கு மாத்திரையாகக் [2]கூறு கின்றமை நோக்கிப் போலும். இயலென்றது பெரும்பான்மை மாத்திரையினை. சிறுபான்மை குறியும் எண்ணும் கொள்க க' எனவும் 'கா' எனவும் அவ்வாறு நின்றமை அறிக.

### நச்சினார்க்கினியர்

இஃது உயிர்மெய்க்கு அளவு கூறுகின்றது.

(இ-ள்) பன்னீருயிரும் பதினெட்டு மெய்யோடு கூடி நின்றன வாயினும், தம் அளவும் குறியும் எண்ணும் திரிந்து நில்லா. எ-று.

இது 'புள்ளியில்லா' (எழு. 17) என்பதனை நோக்கி நிற்றலின் எதிரது போற்றலாம். உயிரும் மெய்யும் அதிகாரப்படு தலின் ஈண்டு வைத்தார். 'அ' என்புழி நின்ற அளவும் குறியும் ஒன்றென்னும் எண்ணும் 'க' என நின்ற இடத்தும் ஒக்கும்; 'ஆ' என்புழி நின்ற அளவும் குறியும் ஒன்று என்னும் எண்ணும் 'கா' என நின்ற இடத்தும் ஒக்கும் என்பது இதன் கருத்து. பிறவும் அன்ன. ஆயின் ஒன்றரை மாத்திரையும் இரண்டரை மாத்திரையும் உடையன ஒருமாத்திரையும் இரண்டு மாத்திரையும் ஆயவாறு என்னையெனின், நீர் தனித்து அளந்துழியும் நாழியாய் அரைநாழி உப்பிற் கலந்துழியும் கூடி ஒன்றரை நாழியாய் மிகாத

---

சு. வே. 1. மெய்யொ டியை
2. கூறினமை.

வாறு போல்வதோர் பொருட் பெற்றி யென்று கொள்வதல்லது காரணம் கூறலாகாமையுணர்க. ஆசிரியன் ஆணை யென்பாரும் உளர்.

விளங்காய் திரட்டினாரில்லை களங்கனியைக்
காரெனச் செய்தாரு மில் (நாலடியார் 103)

என்பதே காட்டினார் உரையாசிரியரும்.

## சுப்பிரமணிய சாஸ்திரியார்

இச்சூத்திரத்தான், உயிராற் றொடரப்பட்ட மெய்களுக்கு மாத்திரை யில்லை யென்பது அறியக்கிடந்தது. கருத்து வகையாற் பொருள் அறியுமாறு சூத்திரிக்காது.

'உயிரோ டியையயின் மெய்மாத் திரை யில'
என ஏன் ஆசிரியர் சூத்திரிக்கவில்லை யெனின், ஓடுவென் கிளவி சிறப்புப் பொருளோடு வருதலானும், ஈண்டு மெய்யே அவ்வாறாதலானும் என்க.

'மெய்யோ டியையினும்' என்பதற்கு 'உயிர்மெய் யாவன மெய்களோடு உயிர் இயையப் பிறந்த நிலைமைய வாயினும்' என இளம்பூரணர் பொருள் கூறுதல் பொருந்தாததாகும், உயிர்மெய் யாவன என்பதற்கு அதிகாரம் இன்மையான்.

இச்சூத்திரத்தில் 'இயல்' என்ற சொல் மாத்திரையையே குறிக்கும் என்பது இதற்கும் முன் சூத்திரத்திற்கும் உள்ள இயைபால் அறியப்படுதலின், 'இயல் என்றது.......எண்ணும் கொள்க' என்ற இளம்பூரணர் உரையும், 'அ என்புழி நின்ற அளவும் ..... ஒக்கும் என்பது இதன் கருத்து' என்ற நச்சினார்க்கினியர் உரையும் பொருந்தா வென்க.

## வெள்ளைவாரணனார்

உயிர் மெய் என்னும் பெயர், உயிரும் மெய்யும் கூடி நின்ற நிலையிற் பெற்றதாயினும் அக்கூட்டத்து, மற்றதனோடு இயைதலாகிய வினையினை உயிரின் தனிவினையாக்கிக் கூறியது, தன்னிலையில் தனித்தியங்குந் தன்மை உயிர்க்கே யன்றித் தனி மெய்க்கு இன்மையின் அவ்வாற்றலில்லா மெய்யோடு சென்று பொருந்துந் தனிச் சிறப்பு உயிர்க்கே உரித்தாதல் கருதியென்க. இங்ஙனம் மெய்யும் உயிரும் கூடிய நிலையினதாகிய உயிர்மெய்

எழுத்துக்கள், மெய்யினளவும் உயிரளவும் பெற்று ஒன்றரை மாத்திரையும் இரண்டரை மாத்திரையுமாக நிற்க வேண்டியன, ஒரு மாத்திரையாயும் இரண்டு மாத்திரையாயும் ஒலித்து நிற்றற் குரிய காரணம் கூறப்புகுந்த நச்சினார்க்கினியர், 'ஆயின் ஒன்றரை மாத்திரையும் இரண்டரை மாத்திரையும் உடையன ஒரு மாத்திரையும் இரண்டு மாத்திரையும் ஆயவாறு என்னையெனின், நீர்தனித்து அளந்துழியும் நாழியாய், அரைநாழி யுப்பிற் கலந்துழி யும் கூடி ஒன்றரை நாழியாய் மிகாதவாறு போல்வதோர் பொருட் பெற்றியென்று கொள்வதல்லது காரணம் கூறலாகாமையுணர்க' என்று கூறினார். ஒரு நாழி நீரிலே அரை நாழி உப்பைக் கலந்தால் அஃது ஒன்றரை நாழியாய் மிகாதவாறு போல்வதோர் பொருட் பெற்றியை உயிர் மெய் அளவிற்கு உவமை கூறிப் போந்த இதன் கண், நாழி நீரிற் கலக்கப்பட்ட அரை நாழியுப்பு நீரோடு கலந்து ஒனறரை நாழியாய் மிகாது ஒரு நாழியளவு படுமாயினும் அவ்வரை நாழி யுப்பின் பருமை ஒரு நாழி நீரிற் கலந்து, முன் அவ்வளவு நிறையில்லாத நீர், முன்னிலும் நிறையினாற் பெருகுதல் போல, மெய்யின் மாத்திரை உயிரளவிற்பட்டு அடங் கினும், அக்கூட்டத்துப் பொருட் பெற்றியால் மெய்யினது ஓசையும் எண்ணும் அதனோடு ஒன்றுபட்டு அழியாது நிற்கும் என்பது கொள்ளக் கிடக்கின்றது. உலகத்து உயிர்களின் உடம்பானது, உயிர் வழியாய் அடங்கி அதன் விரிவுபெற்று நிற்றல் போல, இம் மெய்யெழுத்தும் உயிரெழுத்தளவிற்றாய் அடங்கி அதன் ஒலியோடு ஒத்தொலிக்கும் என்பது, உயிர் மெய் என்ற நிறை யுவமப் பெயரால் நன்கு விளங்கும்.

## தனிமெய்க்கு அளபு

11 மெய்யின்[1] 'அளபே அரையென மொழிப

### இளம்பூரணர்

இது[2] தனிமெய்க்கு அளபு கூறுதல் நுதலிற்று.

(இ.ள்) மெய்யின் அளவு—[3]மெய்யது மாத்திரையினை, அரை யென மொழிப— (ஓரோவொன்று) அரை மாத்திரையுடைய வென்று சொல்லுவர்.

---

சு.வே. 1 அளவே
2 மெய்க்கு
3 மெய்யினது

எ—டு. காக்கை, கோங்கு எனக் கண்டு கொள்க. ஈண்டு வேற்றுமை நயமின்றி ஒற்றுமை நயம்[4] கருதப்பட்டது.

நச்சினார்க்கினியர்

இஃது தனிமெய்க்கு அளவு கூறுகின்றது.

(இ-ள்) மெய்யினது மாத்திரையினை ஓரோவொன்று அரை மாத்திரையுடைய என்று கூறுவர் புலவர்; எ—று.

அவ்வரை மாத்திரையுந் தனித்துக் கூறிக் காட்டலாகாது, நாச் சிறிது புடை பெயரும் [5]தன்மையாய் நிற்றலின். இனி அதனைச் சில மொழிமேற் பெய்து காக்கை கோங்கு கவ்வை யெனக் காட்டுப. மெய் என்பது அஃறிணை யியற்பெயராதலின் மெய்யென்னும் ஒற்றுமை பற்றி அரையென்றார்.

சுப்பிரமணிய சாஸ்திரியார்

தங்கை என்றவிடத்து 'ங்' என்றதற்கு அரை மாத்திரை; அதற்கு அரை மாத்திரை யென்றது ககரத்தின் பின்னர் உள்ள உயிராகிய 'ஐ'யை ஒலித்தபின்னரே அறியப்படும்.

'மெய்' என்றாரேனும் உயிரான் தொடரப்படாத தனி மெய்யே கொள்ள வேண்டும்.

இச்சூத்திரவுரையில் இளம்பூரணத்தில், 'ஈண்டு வேற்றுமை நயம் கருதப்பட்டது' என்ற தொடர் உளது. வேற்றுமை நயம் என்பதற்கு உயிர்மெய்யினை உயிர், மெய் என வேறுபடுத்துக் காட்டும் நயம் எனப் பொருளும், ஒற்றுமை நயம் என்பதற்கு அதனை ஒன்றாகக் காட்டும் நயம் எனப் பொருளும் கொள்ளின் இத்தொடர் ஈண்டுப் பொருந்தாது. முன் சூத்திரத்தில் இருப்பின் நலம். இச்சூத்திரத்திலே இளம்பூரணர் அவ்வாறு கூறியிருப்பின் 'காக்கை', 'கோங்கு' என்ற விடத்திலுள்ள ககர ஙகர ஒற்றுக்கள் இடத்தானும் முயற்சியானும் வேறுபடினும் அரை மாத்திரை ஒலிக்கும் என்ற தன்மையில் ஒற்றுமைப் பட்டன என்ற பொருளை அத்தொடர்க்குக் கூறல் வேண்டும்.

---

4. கூறப்பட்டது
5. துணையாய்

**சிவலிங்கனார்**

'காக்கை கோங்கு...ஒற்றுமை நயம் கருதப்பட்டது'* என இளம்பூரணர் எழுதியதன் விளக்கமாவது:

தனிமெய் அரை மாத்திரை பெறும் என்பதற்குக் காட்டிய இவ்விரண்டுதாரணங்களிலும் 'க்', 'ங்' என்னும் எழுத்துக்களே அரை மாத்திரை பெறுவன. வேற்றுமை நயமின்றி ஒற்றுமை நயம் கருதப்பட்டது எது என்பது புரியவில்லை. க், ங் என்பவற்றை அவ்வாறு கருத இடமில்லை. காக்கை கோங்கு என்பவற்றுள்ள உயிர்மெய்கள் ஏறிய உயிரின் மாத்திரையே தமக்கு மாத்திரையாகக் கூறப்படுதலின் அவை வேற்றுமை நயமின்றி ஒற்றுமை நயமாகக் கருதப்பட்டன என்னலாம். ஆனால் அவை அரைமாத்திரைக்கு உதாரணம் ஆகாவே. அன்றியும்ஒற்றுமைநயம் வேற்றுமை நயம்பொருந்த ஆசிரியர் தொல்காப்பியரே நூற்பாக்கள் யாத்திருக்க இங்கு மட்டில் உரையாசிரியர் தம் உதாரணத்தில் அவைகாட்டவேண்டியது ஏன்? இந்நூற்பாவில் தொல்காப்பியரே அந்நயம் பொருந்திய சொல்லை அமைத்திருக்கிறார் என்று கொள்வதே சிறக்கும். சுப்பிரமணிய சாஸ்திரியார், 'காக்கை கோங்கு என்ற விடத்திலுள்ள ககர ஙகர...அத்தொடர்க்குக் கூறல் வேண்டும்'‡ என்று எழுதியதும் பொருந்துவதில்லை. ககர ஙகரங்கள் அரை மாத்திரை யொப்புமையால் ஒற்றுமைப்பட்டன என்பது ஈண்டுக் கூற வேண்டுவதில்லை.

ஆசிரியர் தொல்காப்பியர் இந்நூற்பாவில் 'மெய்' என்று கூறியது வேற்றுமை நயமின்றி ஒற்றுமை நயம் கருதி என்னலாம். இதன் முன் நூற்பா,

மெய்யோடியையபினும் உயிரியல் திரியா, என்பதாம். உயிர் மெய்யானது உயிர் இயையப் பிறந்த, நிலைமையதாயினும் அம் மெய்களுக்கு மாத்திரை யின்றி உயிர்களின் மாத்திரையே மாத்திரையாய் வரும் என்பது அதன் கருத்து. எனவே ஏறிய உயிரின் அளபே உயிர்மெய்க்கும் அளபாம் என்பது பெறப்பட்டது. இதற்கடுத்து இந்நூற்பாவில் 'மெய்' என்பது தனிமெய்யா, உயிர் மெய்யெழுத்தில் உள்ள மெய்யா என்ற ஐயம் வரும். அதனால் ஆசிரியர் 'மெய்' என இரண்டையும் சேர்த்தே கூறினார். அதாவது தனிமெய்யும் உயிர்மெய்யில் உள்ள மெய்யும் மெய்

---

* பக்கம், 81ல் பார்க்க.

‡ பக்கம், 81ல் பார்க்க

யெனப்படும் ஒற்றுமை கருதிப் பொதுவில், 'மெய்யின் அளபு அரை' யென்றார் என்பதாம். ஆதலின் ஆசிரியர் 'மெய் 'என்றது ஒற்றுமை நயம் பற்றியென்ன வேண்டும். இதுவே இளம்பூரணர் கூறியது என்க.

அடுத்து ஒற்றுமை நயம் பற்றி 'மெய்' எனக் கூறினார் ஆசிரியர் என்றாலும், அதனால் உயிர் மெய்யில் உள்ள மெய்க்கும் அரை மாத்திரை உண்டென்று கொள்ளலாகாது. 'மெய்யோ டியையினும் உயிர் இயல் திரியாது' என்றதால் அதை விலக்கியமை காணவேண்டும். 'மெய்யின் அளபே' என்னும் நூற்பாவானது, 'மெய்யோ டியையினும்' என்னும் நூற்பாவுக்கு முன் வைக்கப்பட்டிருந்தால் மிகவும் பொருத்தம்.

## சார்பெழுத்துக்கு அளபு

12. அவ்வியல் நிலையும் [1]ஏனைமூன்றே

### இளம்பூரணர்

இது, சார்பிற்றோற்றத்து எழுத்து மூன்றற்கும் அளபு கூறுதல் நுதலிற்று.

(இ-ள்) அ இயல் நிலையும்—மேற்கூறிய அரை மாத்திரை யாகிய அவ்வியல்பின் கண்ணே நிற்கும், ஏனை மூன்று[2]ஒழிந்த சார்பிற்றோற்றத்து மூன்றும்.

எ—டு. கேண்மியா, நாகு, எஃகு எனக் கண்டு கொள்க.

### நச்சினார்க்கினியர்

இது சார்பிற்றோற்றத்து மூன்றற்கும் அளவு கூறுகின்றது.

(இ-ள்) சார்பிற்றோற்றத்து மூன்றும் முற்கூறிய அரை மாத்திரையாகிய இயல்பின் கண்ணே நிற்கும்; எ—று.

கேண்மியா, நாகு, எஃகு எனவரும்.

### பிறகுறிப்புகள்

இந்நூற்பா சார்பெழுத்து மூன்றும் ஒவ்வொன்றும் அரை மாத்திரை பெறும் என்பதற்கு மேற்கோள் (யாப்பருங்கல விருத்தி. நூற்பா. 2)

---

1. சு.வே. ஏனைய (நச்சர் பாடம்)
2. ஓரோவொன் றொழிந்த.

## மகரக் குறுக்கம்

13 அரையளபு [1]குறுகல் மகரம் உடைத்தே
இசையிடன் அருகுந் தெரியுங் காலை

### இளம்பூரணர்

இது மெய்களுள் ஒன்றற்கு மாத்திரைச் சுருக்கம் கூறுதல் நுதலிற்று.

(இ-ள்) அரையளபு குறுகல் மகரம் உடைத்து—அரையளபாகிய எல்லையிற் குறுகிக் கான்மாத்திரையாதலை மகர மெய் உடைத்து; (அஃதியாண்டோவெனின்) இசையிடன் அருகும்—வேறு ஓர் எழுத்தினது ஒலியின் கண் [2]அது சிறுபான்மையாகி வரும், தெரியும் காலை—ஆராயுங்காலத்து.

எ—டு. போன்ம், வரும் வண்ணக்கன் என வரும். கான் மாத்திரை யென்பது உரையிற் கோடல்.

### நச்சினார்க்கினியர்

இது மெய்களுள் ஒன்றற்கு எய்தியது விலக்குதல் நுதலிற்று.

(இ-ள்) வேறோர் எழுத்தினது ஓசையின்கண் மகரவொற்றுத் தன் அரைமாத்திரையிற் குறுகிக் கால் மாத்திரை பெறுதலை யுடைத்து, ஆராயுங்காலத்துத் தான் சிறுபான்மையாய் வரும் எ-று.

எ—டு போன்ம், வரும் வண்ணக்கன் என ஒரு மொழிக் கண்ணும் இருமொழிக் கண்ணும் கொள்க. இது பிறன் கோட் கூறல் என்னும் உத்தி.

### வேங்கடராசுலு ரெட்டியார்

மகர மெய் அரைமாத்திரையிற் குறுகியொலித்தல் இன்ன இடத்தில் என்பது, முன்னர் மொழி மரபில் "னகாரை முன்னர்" (தொல். மொழி. 19) என்னும் சூத்திரத்தானும், புள்ளிமயங்கியலுள் "வகார மிசையும்" (புள்ளி. 35) என்னும் சூத்திரத்தானும் அறியப்படும்.

பேராசிரியர் இச்சூத்திரத்தை, பிறன்கோட் கூறல் என்னும் உத்திக்கு உதாரணமாகக் காட்டினர். அவர், இச்சூத்திரத்தில்

---

சு.வே. 1. அரையளவு.
2. அதுதான்

'இசையிடன்' என்பதற்கு 'இசைநூலின்கண்' என்று பொருள் கொண்டார் ஆவார் எனத் தெரிகின்றது. என்னையெனின், 'இவை அவ்வந் நூலுட் கொள்ளுமாற்றான் அமையும் என்றவாறா யின' என்று அவர் எழுதியிருத்தலான் என்க.

ஆசிரியர் 'அளபிறந்துயிர்த்தலும்' என்னும் சூத்திரத்தில் 'இசையொடு சிவணிய நரம்பின் மறைய என்மனார் புலவர்' (எழுத் 33) என்று கிளந்து கூறியாங்கு, ஈண்டு, 'இக்குறுக்கம் இசை நூலின் கண்ணது என்று கிளந்து கூறாமையானும், மகரக் குறுக்கம் இயற்றமிழின்கண் படுவதோர் இலக்கணம் ஆதலானும் இச்சூத்திரம் பிறன் கோட்கூறுதல் ஆதல் இன்று.

இனி இசை நூலின் கண் என்று பொருள் கூறாது வேறோர் எழுத்தினது ஓசையின் கண் மகரவொற்றுத் தன் அரை மாத்திரை யிற் குறுகும் என்று உரை கூறிய நச்சினார்க்கினியர், இச்சூத்திரம் பிறன்கோட் கூறல் என்ற உத்தி என்றல் பொருந்துவதன்று.

## சுப்பிரமணிய சாஸ்திரியார்

ஈண்டு அரையளவு என்றதற்கு 'அரைமாத்திரை' எனப் பொருள் எனவும், அஃது ஐந்தாம் வேற்றுமை யெனவும், 'கான்மாத்திரை' யென்பது உரையிற் கோடல் எனவும் கொண்டனர் இளம்பூரணர். நச்சினார்க்கினியர் அவ்வாறே கொண்டு ''ஈது பிறன்கோட் கூறல் என்னும் உத்தி'' எனவும் கூறினர். அவர்களுள் மாறுபாடு ஓரிடத்திலுண்டு:—''இசையிடன்'' என்றது இளம்பூரணர் கொள்கையில் 'அருகும்' என்றதைத் தழுவும்; நச்சினார்க்கினியர் கொள்கையில் 'குறுகுதலுடைத்து' என்றதைத் தழுவும். 'அரையளவு' என்றதற்குத் தன் இயற்கை யளவின் அரையளவு எனப் பொருள் கொள்ளின், அதற்கே கான் மாத்திரை யென்ற பொருள் கிடைக்கும். அப்போது கான் மாத்திரையை உரையிற் கோடலாற் கொள்ளல் வேண்டாம்.

## அந்த இசை னகரம் என்பது

னகாரை முன்னர் மகாரம் குறுகும் (எழுத். 52) என்ற சூத்திரத்தாற் பெறப்படும்.

''சார்பெழுத்து மூன்றென்பவர்க்கு இது கூறல் வேண்டா வாகலின் பிறன்கோட் கூறல் என்னும் உத்தியென்றார்'' என வித்துவான் சி. கணேசய்யரது குறிப்பில் உள்ளது. மகரக்

குறுக்கத்தைச் சார்பெழுத்தாகக் கொள்ளாமைக்குக் காரணம் அது மற்றொன்றைச் சார்ந்து அதன் பிறப்பிடத்திற் பிறவாமையே யாகும். அக்காரணம் பற்றி மகரக் குறுக்கத்தை ஆசிரியர் தன் கொள்கையாகக் கொள்ளவில்லை என்பது நேரிதாகாது. அவ்வாறு கொள்ளாக்கால் ஆசிரியர் ஐகாரக் குறுக்கத்தைக் கூறியதும் குற்றமாகும். ஆகலின் பிறன்கோட் கூறலாக நச்சி னார்க்கினியர் கொள்வது பொருந்தாது.

### வெள்ளைவாரணனார்

ஆசிரியர் இங்ஙனம் மகரமெய் தன் அரை மாத்திரையினும் குறுகி வரும் எனப் பொதுப்படக் கூறினார். உரையாசிரியர் இளம்பூரணர் அதன் மாத்திரைச் சுருக்கத்தினை வரையறுத்து எல்லை கூறுதல் வேண்டி 'அரையளவு குறுகல் மகரம்உடைத்தே' என்பதற்கு ''அரையளபாகிய எல்லையிற் குறுகிக் கால் மாத்திரை யாதலை மகர மெய் உடைத்து'' என உரையிற் கோடலால் கால் மாத்திரை பெறும் என வரையறை கூறியுள்ளார். இதனைத் தழுவியே நச்சினார்க்கினியரும் நன்னூலார் முதலிய பின் னூலாரும் மகரக்குறுக்கத்திற்குக் கால் மாத்திரை யெல்லை யாதலை வரையறுத்துக் கூறியுள்ளார்கள். ''கால் குறள் மஃகான்'' (நன். எழுத். 44) என்பது நன்னூல் சூத்திரத் தொடர்.

### பிறகுறிப்பு

பாவாணர்: தொல்காப்பியர் மகரக்குறுக்கத்தை ஒரு சார் பெழுத்தாகக் கொண்டிலர், நன்னூலாரே அதைச் சார்பெழுத் தாகக் கொண்டார். நச்சினார்க்கினியரும் அதைச் சார்பெழுத் தாகக் கருதிக் கொண்டு இது பிறன்கோட்கூறல் என்றார்.

அடிகளாசிரியர்: ''அரையளவு குறுகல் மகரம் உடைத்தே'' எனத் தொல்காப்பியத்துள் இன்னவிடத்துக் குறுகும் என்று யாப்புறுத்துக் கூறிற்றிலரேனும் உரையிற்கோடல் என்னும் உத்தி பற்றி வகரத்தின்பின் மகரம் குறுகும் என்று விருத்தியுள் விளங்கக் கூறினார்; அதுபோலக் கொள்க'' என யாப்பருங்கல விருத்தி யாசிரியர் கூறுவர் (யாப்பருங்கலம். 15); ஆனால் இளம்பூரணர் உரையில் 'கான் மாத்திரை என்பது உரையிற் கோடல்' என்பது மட்டும் காணப்படுகின்றது. இதனால் வேறு விருத்தியுரை தொல் காப்பியத்திற்கு இருந்திருக்கும் போலும். ஞானியார் மடத்துச்

சுவடியில் எழுத்ததிகாரத்துக் கடைசியில் இளம்பூரண விருத்தி காண்டிகை முற்றிற்று’ என்பது காணப்படுகின்றது. அதனால் விருத்தியுரை என்பது இளம்பூரணர் உரையையும் குறிக்கலாம்.

# 4. வடிவு

## மகரத்தின் வடிவம்

14. உட்பெறு புள்ளி [1]உருவா கும்மே

### இளம்பூரணர்

இது [2]பகரத்தின் மகரத்திடை வரிவடிவு வேற்றுமை செய்தல் நுதலிற்று.

(இ-ள்) உள்பெறு புள்ளி உருவு ஆகும்—[3]புறத்துப் பெறும் புள்ளியோடு உள்ளாற்பெறும் புள்ளி மகரத்திற்கு வடிவாம் அஃதின்மை பகரத்திற்கு வடிவாம்.

எ—டு, ப ப எனக் கண்டு கொள்க.

கப்பி, கப்பி, க ப பி (கம்மி) எனவரும்.

### நச்சினார்க்கினியர்

இது பகரத்தோடு மகரத்திடை வரிவடிவு வேற்றுமை செய்கின்றது.

மகரம் அதிகாரப்பட்டு நிற்றலின் ஈண்டுக் கூறினார்.

(இ-ள்) புறத்துப் பெறும்புள்ளியோடு உள்ளாற் பெறும் புள்ளி மகரத்திற்கு வடிவாம்; எ—று.

எனவே புறத்துப் பெறும் புள்ளியாவது மேற் சூத்திரத்தான் மெய்கட்குக் கூறும் புள்ளி. ஈண்டு உருவென்றது காட்சிப் பொருளை உணர்த்தி நின்றது.

---

சு.வே. 1. உருபாகும்மே
2. பகரத்தொடு
3. புறத்தே

எ-டு கப்பி கபபி (கம்மி) எனவரும். இது எதிரது போற்றல்.

**வேங்கடராசுலு ரெட்டியார்**

மேல் அளபினைக் கூறி வந்த வழி மகர மெய்க்குப் படுவ தோர் மாத்திரைச் சுருக்கம் கூறநேர்ந்தது. அதனால், மேற் சூத்திரத்தான் மகரம் ஒலி வடிவிற் குறுகுதலைக்கூறி, இச்சூத்திரத் தான் அதற்கு வரிவடிவு கூறுகின்றார்.

ம்—மகரமெய்
:
ம—மகரமெய்க் குறுக்கம்.

எழுத்துக்கள் புள்ளியிடப் பெறின், அவை, தம் அளபில் செம் பாதி குறைவானவாகும்.

எ— இரண்டு மாத்திரை
ஏ —ஒரு மாத்திரை
க—ஒரு மாத்திரை
க்—அரை மாத்திரை
(ந)கு—ஒரு மாத்திரை
(நா)கு—அரை மாத்திரை

இவற்றால், அரை மாத்திரை யொலிக்கும் மகர மெய், குறுகிய தனை அறிவிக்க, பின்னும் ஒரு புள்ளி பெறுதல் முறையே யாதல் அறியப்படும்.

இனி இச்சூத்திரம் பகரத்தொடு மகரத்துக்குள்ள வரிவடிவின் வேறுபாடு உணர்த்துகின்றது எனக் கொண்டு உரையாசிரியர்கள் உரை கூறினரால் எனின், மாத்திரை குறுகுதலை அறிவித் தற்கே புள்ளியிடுதல் இயல்பு என்பது மேற் காட்டியவற்றான் அறியப்படுதலானும், ஒருமெய்யெழுத்து மற்றொரு மெய்யெழுத் தாதற்குப் புள்ளி பெறுதல் வேறு அறியப்படாமையானும் அது பொருந்துதல் இன்று. அன்றியும், வீரசோழியத்தில் 'முன்வரிற் கால் வவ்வரின்' (சந்திப் படலம் 19) என்பதற்கு உரையாசிரியர், ''வருமொழி முதல் வகரம் வந்து புணர்ந்தால், அந்த மகரமானது குறுகிக் கால் மாத்திரையாய் உட்புள்ளி பெறும்'' என்று உரை கூறியிருப்பதனானும் இச்சூத்திரம் மகரக் குறுக்கத்தின் வரிவடிவு கூறுகின்றது எனக் கொள்ளுதலே அமைதியாகும்.

## வெள்ளைவாரணனார்

இது பகரத்தோடு மகரத்திடை வரிவடிவு வேற்றுமை செய்கிற தெனக் கொண்டு உரையாசிரியரும் நச்சினார்க்கினியரும் 'புறத்துப் பெறும் புள்ளியோடு உள்ளாற் பெறும் புள்ளி மகரத்திற்கு வடிவாம்' எனப் பொருள் உரைப்பர். இதன்கண் பகரவடிவையும் மகர வடிவையும் சேர்த்தற்குரிய இன்றியமையாமையும், இச் சூத்திரத்தின்கண் அங்ஙனம் சேர்த்துரைத்தார் ஆசிரியர் என்பதற்குரிய சொற்கிடக்கையும் காணப்படாமையான் இச் சூத்திரத்தாற் சுட்டப்பட்ட உண்மைப் பொருள் அதுவெனக் கொள்ளற்கில்லை. ப, ம முதலியவற்றின் வரிவடிவு இன்ன தெனக் கிளந்து கூறாமலே ஆசிரியர் அவற்றின் வரிவடிவு வேறு பாட்டைக் கூறினார் என்றல் பொருந்தாததாம். அன்றியும் ப, ம இவற்றின் வேறுபாடு உரைக்கப் போந்த ஆசிரியர் தாம் எவ்வெழுத்துக்களுக்கு வரிவடிவு வேற்றுமை கூறுகின்றாரோ அவ்வெழுத்துக்கள் இவையென எடுத்துரைத்தன்றிக் கூற மாட்டார். மகரம் மேலைச் சூத்திரத்தாற் பெறப்படினும், அதனோடு வேறுபாடு கூற எடுத்துக் கொண்ட பகரத்தினை இச் சூத்திரத்து எடுத்துரையாமலே அவ்விரண்டிற்கும் வேறுபாடு கூறினார் என்றல் எங்ஙனம் பொருந்தும்?

இனி இச்சூத்திரவரி தனியே ஒரு சூத்திரமாக இருந்திருத்தல் இயலாது என்னையெனின், இதனுட் கூறப்படும் விதி இன்னதற் கென்பது பெறப்படாத நிலையில் இதனை ஒரு சூத்திரமாக ஆசிரியர் வையார். பின் வரும் ''மெய்யின் இயற்கை புள்ளி யொடு நிலையல்'' என்ற சூத்திரம் மெய்களின் பொதுவியல் புரைத்தலால் இவ்வரி அதனைத் தொடர்ந்ததாகாது. எனவே இத்தொடர், மேலைச் சூத்திரத்தினையே சேர்ந்ததாதல் வேண்டும். ஆகலின் இது மகரத்தோடு மகரக் குறுக்கத்திற்கு வரி வடிவு வேற்றுமை செய்கின்றது என்பதே பொருத்த முடைத்து.

(இ-ள்) புறத்துப் பெறும் புள்ளியோடு உள்ளாற் பெறும்புள்ளி மகரக் குறுக்கத்திற்கு வடிவாம்; எ-று.

மேலைச் சூத்திரத்து அரை மாத்திரையினின்றும் குறுகி இசையிடனருகி வருமெனப்பட்ட மகரக் குறுக்கத்தினை, அவ்வாறு குறுகாத அரை மாத்திரை பெற்று இயல்பான மகரத் தோடு பிரித்தறிந்து கொள்ளுதற்கு அறிகுறியாக வரிவடிவில்

எல்லா மெய்களுக்கும் உரிய புறத்துப் பெறும் புள்ளியோடு, இக் குறுகிய மகரமெய்க்கு வரிவடிவில் உள்ளே பெறும் புள்ளியே பொருந்திய வடிவாம் என்பதைக் குறிக்கவே இச்சூத்திரம் மேலைச் சூத்திரத்தோடு இயைத்துக் கூறப்பட்டது. இச்சூத்திரம் மகரக் குறுக்கத்தைப் பற்றியதாயினும் வரிவடிவு வேற்றுமை கூறுதல் காரணமாக வேறே பிரித்துக் கூறப்பட்டுள்ளது; ஒரு பொருள் நுதலியதே சூத்திரம் ஆதலின் என்க.

மெய்களுள் ஒன்றாகிய மகரத்தின் குறுகிய நிலையை அறிந்து கொள்வதற்கெனவே அக்காலத்தார், எல்லா மெய்களும் பெறுதற் குரியதாய தலைப் புள்ளியோடு குறுகிய மகரத்தின் உள்ளேயும் ஒரு புள்ளியை யிட்டு வரிவடிவில் அதனைக் குறித்துப் போந்தார் கள் என்பது இச்சூத்திரத்தாற் குறிக்கப்பட்டது. ஓசை குறுகிய எழுத்தினைப் புள்ளியிட்டுக் காட்டும் முறை உண்டென்பது "மெய்யீறெல்லாம் புள்ளியொடு நிலையல்" (எழு.104) என்றதன் விதியைக் "குற்றியலுகரமும் அற்றென மொழிப" (எழு 105) என அடுத்த சூத்திரத்தில் மாட்டெறிந்து 'ஈற்றுக் குற்றியலுகரமும் மெய்போலப் புள்ளியொடு நிற்கும்' எனக் கூறுதலாற் பெறப்படும். இவ்வாறு தன்னியல்பாம் ஒரு மாத்திரையினின்றும் குறுகி அரை மாத்திரையியல்பின் நிற்கும் குற்றியலுகரம் ஈற்றில் புள்ளி பெறுதல் போலத் தன்னரை மாத்திரையிற் குறைந்த மகரமும் புள்ளி பெறுதல் இயல்பும் முறையும் ஆகும்.

பிற குறிப்புகள்

எதிரது போற்றல் என்பது முன்பு கூறிய சூத்திரத்தானே மேல்வரும் சூத்திரப் பொருளையும் பாதுகாத்தமைத்தல். அஃதாவது நூல் மரபினுள் "உட்பெறுபுள்ளி யுருவாகும்மே" எனப் பகரத்தோடு மகரத்திடை வரிவடிவிற்கு இலக்கணங் கூறப் புகுந்து, மேல்வருஞ் சூத்திரத்தின் "மெய்யினியற்கை புள்ளியொடு நிலையல்" என்றதனால், மெய்களிற்கூடிப் புறத்திற் பெறும் புள்ளியோடு உள்ளாற் பெறும் புள்ளியும் மகரத்திற்கு வரிவடிவாம் எனக் கோடல் எதிரது போற்றலாயவாறு காண்க.' (மாறனலங் காரம். 25. உரை.)

## மெய்யெழுத்தின் இயல்பு

15. மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்

### இளம்பூரணர்

இது, உயிர்மெய்யோடு தனிமெய்யிடை வடிவு வேற்றுமை செய்தல் நுதலிற்று.

(இ-ள்) மெய்யின் இயற்கை—தனிமெய்யினது இயல்பு, புள்ளியொடு நிலையல்—புள்ளியொடு நிற்றல் (உயிர் மெய்யினது இயல்பு புள்ளியின்றி நிற்றல்)

எ-டு க் ங் ச் ஞ் ட் ண் த் ந் ப் ம் ய் ர் ல் வ் ழ் ள் ற் ன் எனக் கண்டு கொள்க.

## நச்சினார்க்கினியர்

இது தனிமெய்க்கும் உயிர்மெய்க்கும் ஒப்புமைமேல் வேற்றுமை செய்தல் கூறுகின்றது. என்னை? உயிர்மெய்யான ககர ஙகரங் கட்குந் தனிமெய்யான ககர ஙகரங்கட்கும் வடிவு ஒன்றாக எழுதியவற்றை ஒற்றாக்குதற்குப் பின்புள்ளி பெறுக என்றலின்.

(இ-ள்) பதினெட்டு மெய்களின் தன்மையானது புள்ளிபெற்று நிற்றலாம்; எ-று.

எனவே உயிர்மெய்க்குப் புள்ளியின்றாயிற்று. க் ங் ற் ன் என வரும். இவற்றைப் புள்ளியிட்டுக் காட்டவே புள்ளி பெறுவதற்கு முன்னர் அகரம் உடன் நின்றதோர் மெய்வடிவே பெற்று நின்றன வற்றைப் பின்னர் அப்புள்ளியிட்டுத் தனிமெய் ஆக்கினர் என்ப தூஉம் பெறுதும். இதனாலே ககர ஙகரம் முதலியன புள்ளி பெறு வதற்கு முன்னர் இயல்பாக அகரம் பெற்றே நிற்கும் என்பதூஉம் புள்ளிபெறுங் காலத்து அவ்வகரம் நீங்கும் என்பதூஉம் பின்னர் அப்புள்ளி நீங்கி உயிர்ஏறுமிடத்துத் தன்கண் அகரம் நீங்கியே போக வருகின்றதோர் உயிர் யாதானும் ஒன்று ஏறி நிற்கும் என்பதூஉம் பெற்றாம். 'மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்' (எழு. 46) என்னும் சூத்திரந்தானும் இதுவே இதற்குக் கருத்தாதல் உணர்க.

## சுப்பிரமணிய சாஸ்திரியார்

இச்சூத்திரம் உயிர் மெய்யோடு தனிமெய்யிடை வடிவு வேற்றுமை செய்தல் நுதலிற்று என்று இளம்பூரணர் நச்சினார்க் கினியர் இவ்விருவரும் கொண்டனர். இது ஆசிரியர் உயிர் மெய்யினைப் பற்றிக் கூறாமையானும்,

புள்ளி யில்லா எல்லா மெய்யும்
உருவுரு வாகி யகரமோ டுயிர்த்தலும் (எழுத்.17)

எனப் பின்னர்க் கூறப் போகின்றமையானும் அவர் தம் கூற்று ஆராய்தற்பாலது.

வடிவத்தின்கண் புள்ளிபெறும் இயல்பை நோக்கி 'மெய் எனக் கூறுமிடத்து 'புள்ளி' என ஆசிரியர் வழங்கினர். (தொல் எழுத். 151, 165...)

பிற குறிப்புகள்

உயிருள் எகரமும் ஒகரமும் மெய்யைப் போலப் புள்ளி பெறும் என்பதற்கு இந்நூற்பாவும் அடுத்த நூற்பாவும் மேற்கோளாக யாப்பாருங்கல விருத்தி நூற்பா 2ல் கூறப்பட்டுள்ளது.

## எகர ஒகரங்களின் இயல்பு

**16. எகர ஒகரத் தியற்கையும் அற்றே**

### இளம்பூரணர்

இது, எகர ஒகரங்கட்கு ஏகார ஓகாரங்களோடு [1]வடிவு வேற்றுமை செய்தல் நுதலிற்று.

(இ-ள்) எகர ஒகரத்து இயற்கையும் அற்று—எகர ஒகரங்களது இயல்பும் அவ்வாறு புள்ளிபெறும் இயல்பிற்று. (ஏகார ஓகாரங் களது இயல்பு [2]அப்புள்ளி பெறா இயல்பிற்று.)

எ,ஒ; ஏ, ஓ

### நச்சினார்க்கினியர்

இதுவும் அது.

(இ-ள்) எகர ஒகரங்களினது நிலையும் மெய்போலப் புள்ளி பெறும் இயல்பிற்று; எ-று.

எனவே ஏகார ஓகாரங்கட்குப் புள்ளியின்றாயிற்று. எ் ஒ் என வரும். இஃது உயிர்மெய்க்கும் ஒக்கும்.

மகரம் ஆராய்ச்சிப்பட்டது கண்டு மகரத்திற்கு வடிவு வேற்றுமை செய்து, அதிகாரத்தான் மெய்யின் தன்மை கூறி அதன்பின் மாட்டேற்றலின் எகர ஒகரத்தையும் கூறினார்.

### வேங்கடராசுலு ரெட்டியார்

உயிர் எழுத்துகளுள் எகர ஒகரம் ஒழிந்த பத்து எழுத்துக்களும் புள்ளியில்லாதனவாய் வழங்க, இவ்விரண்டெழுத்துக்கள் மட்டும்

---

சு. வே. 1. வரிவடிவு
2. புள்ளி

புள்ளிபெற்று வழங்குதலை நோக்குமிடத்து, தமிழ் மொழிக்கு இலக்கணம் வகுத்த தொல்லாசிரியர் எகர ஒகரங்கள் வட மொழியில் இல்லையாகலின் அவற்றிற்கு ஆண்டு வரிவடிவு இன்மையான், தமிழில் அவற்றிற்கு வழங்கிய தனிவடிவினைக் கொள்ளாமல், ஏகார ஓகாரங்களின் வடிவிற்குப் புள்ளியிட்டு வழங்கினராவர் எனத் தோன்றுகின்றது. முதல் எழுத்துக்களுள் ஏனை இருபத்தெட்டு எழுத்துக்களுக்கும் தனித்தனி வடிவம் அமைத்து வழங்கிய தமிழ் மக்கள் இவ்விரண்டெழுத்துக்கட்கு மட்டும் தனிவடிவம் அமைத்திலர் என்று கொள்ளுதல் பொருந்துவ தன்று. இவ்வாறாயின், முதன்முதலில் இலக்கணம் வகுத்த ஆசிரியர் வடமொழிநோக்கி நெடுங்கணக்கினுள் வைப்பு முறையில் வேறுபாடு செய்தது போலவே, வரிவடிவிலும் வேறுபாடு செய்தாராவர்.

## வெள்ளை வாரணனார்

பண்டைக்காலத்து எ, ஏ ஆகிய குறில் நெடில் இரண்டிற்கும் 'எ', என்ற வடிவும், ஒ, ஓ ஆகிய குறில் நெடில் இரண்டிற்கும் 'ஒ' என்ற வடிவும் வரிவடிவில் வழங்கப்பட்டன என்பதும், அவற்றுள் குறிலிது நெடிலிது என்ற வேறுபாடு உணர்தற்குக் குற்றெழுத்தைக் குறிக்குமிடத்து அவ்விரண்டன் மேலும் புள்ளியிட்டெழுதினார்கள் என்பதும் இவ்விதியாற் புலனாம். இவ்வாறு புள்ளியிடுதல் எகர ஒகரங்களுக்கே அன்றி மெய்யூர்ந்த எகர ஒகரங் களுக்கும் உண்டென்பது தந்திவர்மன் ஆட்சியில் 4ஆம் ஆண்டில் (கி.பி. 800—840) திருவெள்ளறைக்கிணறு ஒன்றில் வெட்டப்பட்ட சாசனத்து "நான்காவ தெடுத்து" பெருங்கிணறு, செய்து என்ற சொற்களின் மெய்யூர்ந்த எகரங்கள் புள்ளியிட் டெழுதப் பெற்றிருத்தலால் அறியப்படும் ...............

எகரமும் ஒகரமும் புள்ளிபெறுதலைப் பின்வரும் மாத்திரைச் சுருக்க அணியமைந்த செய்யுட்களாலும் நன்கறியலாம்.

"நேரிழையார் கூந்தலினோர் புள்ளிபெற நீள் மரமாம்
நீர்நிலையோர் புள்ளிபெற நெருப்பாம்"
"மயிர்நிறுவி மற்றதற்கோர் புள்ளி கொடுப்பின்
செயிர்தீர் மரமாகும் சென்று" (நன்னூல் 268. மேற்கோள்)

இதன்கண் நேரிழையார் கூந்தல், மயிர் என்பன 'ஓதி' என்று கொள்ளப்படும். அதன்கண் ஓதி எனப்புள்ளி கொடுத்தால் ஒதி

என்ற மரத்தைக் குறிக்கும். அவ்வாறே நீர்நிலை யென்பது ஏரி. அதன் ஏகாரத்துப் புள்ளியிட்டால் எரி என நெருப்பை யுணர்த்தும்.

..........................

இக்காலத்து எகர ஒகரம் என்பன, மகரக்குறுக்கம் குற்றிய லுகரம் என்பன போலப் புள்ளி பெறுதலை யொழிந்தன. எகர, ஒகரங்களோடு ஏகார ஓகாரங்கட்கு வரிவடிவு வேற்றுமை செய்ய எண்ணிய பிற்காலத்தார் குறில்களின் தலையிற் புள்ளியிடும் பழைய முறையினை மாற்றி நெடில்களின் கோட்டினைக் கீழ் விலங்கு போலச் சிறிது வளைத்தெழுதுதலை வழக்கமாகக் கொள் வாராயினர்.

**சிவலிங்கனார்**

தொல்காப்பியர் காலத்தில் எகர ஒகரத்துக்குப் புள்ளியிட் டெழுதும் வழக்கம் இல்லை, அவர் இப்போது காணப்பட்ட இந் நூற்பாவை யியற்றியிருக்க மாட்டார். அவர் இயற்றியது

"ஏகார ஓகாரத் தியற்கையு மற்றே"

என்பதாகத்தான் இருத்தல் வேண்டும். இந்நூற்பாவானது மகரக் குறுக்கம் கூறிய

"அரையளபு குறுகல் மகரம் உடைத்தே"

என்ற நூற்பாவை அடுத்த

"உட்பெறு புள்ளி உருவா கும்மே"

என்ற நூற்பாவுக்குப் பின்னரும்

"மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்"

என்ற நூற்பாவுக்கு முன்னரும் கூறப்பட்டிருத்தல் வேண்டும். காரணம் வருமாறு:

"அரையளபு குறுகல்" என்ற நூற்பா, "மகரம் தன் அரை மாத்திரையிற் குறைந்து வரும்" என்பது. அதை வரிவடிவில் எப்படிக் காணலாம் என்றால், அம்மகரத்தின் உள்ளால் புள்ளி யிட்டுக் காணலாம். ஆகவே அதற்கு வரிவடிவம் இது என்பதைக் குறிக்க வந்தது "உட்பெறு புள்ளி உருவாகும்மே" என்ற நூற்பா.

அது போலவே ஏகாரக் குறுக்கமும் ஓகாரக்குறுக்கமும் வரி வடிவில் உணரவேண்டுவதற்குப் புள்ளியிட்டு எழுதுதல் வேண்டும்

என்பதைக் கூற வந்த ஆசிரியர் ''ஏகார ஒகாரத்தியற்கையு மற்றே'' என்றார்.

ஏகாரக் குறுக்கம் என்பது ஒன்றுண்டா?

ஆசிரியர், சொல்லதிகார இடையியலில்

''ஈற்றுநின் றிசைக்கும் ஏயென் இறுதி
கூற்றுவயின் ஓரள பாகலும் உரித்தே'' (இடை. 38)

என்றார். இதற்கு,

''செய்யுள் இறுதிக்கண் நின்றிசைக்கும் ஈற்றசையேகாரம் கூற்றிடத்து ஒருமாத்திரைத் தாகலும் உரித்து''

என்று உரையெழுதி,

''கடல்போல் தோன்றல காடிறந் தோரே'' (அகம்.1)

என உதாரணமும் காட்டினர் சேனாவரையர். இளம்பூரணரும் தெய்வச் சிலையாரும் இக்கருத்தினரே*

எனவே ஏகாரக் குறுக்கம் வரிவடிவில் உட்பெறு புள்ளியுடைய தாகும் என்பதைத்தான் ஆசிரியர், ''ஏகார ஒகாரத் தியற்கையு மற்றே'' என்றார். ''காடிறந்தோரே'' என்பதில் ஈற்று ஏகாரத் திற்கு உட்பெறு புள்ளி வடிவைக் காட்ட ''காடிறந்தோரே'' எனக் குறிக்கலாம்.

ஏகாரக் குறுக்கம் சொன்ன ஆசிரியர் ஓகாரக் குறுக்கம் சொல்லவில்லை. (ஒருகால் சொல்லி மறைந்ததோ?) ஒன்று கூறி அது போலும் ஒன்றைக் கூறாது விடுதல் ஆசிரியர் இயல்பே.

ஓரள பாகும் இடனுமா ருண்டே
தேருங் காலை மொழிவயி னான (எழு. 57)

என ஐகாரக் குறுக்கம் கூறியவர் ஔகாரக் குறுக்கம் கூறவில்லை. நச்சினார்க்கினியர் உரையிற் கொண்டார். அது போலவே ஔகாரக் குறுக்கம் விடுபட்டது என்னலாம்.

---

* இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம் திருவனந்த புரத்தில் நடத்திய நான்காவது கருத்தரங்கில் (1972) ஏகாரக் குறுக்கம் உண்டு என்ற கருத்தை வெளிப்படுத்தியவர் சென்னைப் புரசவாக்கத்தைச் சேர்ந்த புலவர் க. வா, சச்சிதானந்தம் ஆவர்.

பிற குறிப்புகள்

'எகர ஒகர மெய்யிற் புள்ளிமேவும்'' (வீரசோழியம். 3) தொன்னூல் விளக்கம் 12இல் இந்நூற்பா மேற்கோளாக ஆளப் பட்டுளது.

## உயிர் மெய்யெழுத்தின் இயல்பு

17. புள்ளி யில்லா எல்லா மெய்யும்
[1]உருவுரு வாகி அகரமோ டுயிர்த்தலும்
ஏனை யுயிரோ டுருவுதிரிந் துயிர்த்தலும்
ஆயீ ரியல வுயிர்த்த லாறே.

### இளம்பூரணர்

இது, உயிரும் மெய்யும் கூடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ—ள்) எல்லா மெய்யும் புள்ளியில்லா—எல்லா மெய்களும் புள்ளியில்லையாம் படியாக, உருவு உருவு ஆகி—தத்தம் முன்னை வடிவே பின்னும் [2]வடிவாக, அகரமோடு உயிர்த்தலும்—அகரத் தோடு கூடி ஒலித்தலும், ஏனை உயிரோடு உருவு திரிந்து உயிர்த் தலும்—ஒழிந்த உயிர்களோடு வடிவு வேறுபட்டு ஒலித்தலுமாகிய, அ ஈர் இயல—அவ்விரண்டு இயல்பினையுடைய, உயிர்த்தல் ஆறு— அவை ஒலிக்கும் முறைமை.

''தன்னின முடித்தல் எண்பதனான், அளபெடை உயி ரோடும் சார்பிற்றோற்றத்து உயிரோடும் கூடும் [3]உயிர்மெய்யும் கொள்க.

எ—டு [4]உருவு உருவாகி ஒலித்தல் க, ங எனக் கண்டுகொள்க. [5]உருவு திரிந்து உயிர்த்தல் கா, ஙா எனக் கண்டு கொள்க.

ஈண்டு உயிரும் மெய்யும் கூடுகின்ற உயிர்மெய்க் கூட்டத்தினை, எல்லா மெய்யென்று மெய்மேல் வைத்துக் கூறியது, அது முன் கூறிக் கூறப்படுதல் நோக்கிப் போலும். உயிர்

---

சு.வே: 1. உரு புரு பாகி
2. வடிவாகி
3. உயிரும்
4. உருபுருபாகி
5. உருபு

மெய்யென்பதனை, ஒற்றுமை கொள்வழி உம்மைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையெனவும், வேற்றுமை கொள்வழி உம்மைத் [6]தொகையெனவும் கொள்க. [7]'இல்லாத' என்பது 'இல்லா' என நின்றது. [8]உருவு திரிந்து உயிர்த்தல் மேலும் கீழும் விலங்கு பெறுவன விலங்கு பெற்று உயிர்த்தலும்' கோடு பெறுவன கோடு பெற்று உயிர்த்தலும், புள்ளி பெறுவன புள்ளி பெற்று உயிர்த்தலும், புள்ளியும் கோடும் உடன் பெறுவன புள்ளியும் கோடும் உடன் பெற்று உயிர்த்தலும் எனக் கொள்க

**நச்சினார்க்கினியர்**

இது மெய்யும் உயிரும் [9]கூடிப் புணருமாறும் ஆண்டு அவை திரியாதும் திரிந்தும் நிற்குமாறும் கூறுகின்றது.

(இ—ள்) உயிரைப் பெறுதற்குப் புள்ளியைப் போக்கின எல்லா மெய்களும், புள்ளி பெறுகின்ற காலத்து இயல்பாகிய அகர நீங்கிய வடிவே தமக்கு வடிவாகி நின்று பின்னர் ஏறிய அகரத்தோடு கூடி ஒலித்தலும், ஒழிந்த பதினோ ருயிரோடுங் கூடி அவ்வடிவு திரிந்து ஒலித்தலும், என அவ்விரண்டியல்பினை யுடைய அவை ஒலிக்கும் முறைமை; எ-று.

'புள்ளியில்லா மெய்' எனவே முன்பெற்று நின்ற புள்ளியை உயிர் ஏற்றுதற்குப் போக்கினமை பெறுதும். 'உருவுருவாகி' யெனவே புள்ளி பெறுதற்காக இயல்பாகிய அகரம் நீங்கிய வடிவே பின்னர் அகரம் பெறுதற்கு வடிவாம் என்பது கூறினார்.

க—ங—ய எனவரும்.

உருவு திரிந்து உயிர்த்தலாவது மேலுங் கீழும் விலங்கு பெற்றும் கோடு பெற்றும் புள்ளிபெற்றும் புள்ளியுங் கோடும் உடன் பெற்றும் உயிர்த்தலாம். கி கீ முதலியன மேல் விலங்கு பெற்றன. கு கூ முதலியன கீழ் விலங்கு பெற்றன. கெ கே முதலியன கோடு பெற்றன. கா ஙா முதலியன புள்ளி பெற்றன. அருகே பெற்ற புள்ளியை இக்காலத்தார் காலாக எழுதினர். [10]மகரம் உட்பெறு புள்ளியை வளைத்தெழுதினார். கொ கோ ஙொ ஙோ முதலியன

---

சு.வே: 6. தொகையாகவும்
7. இல்லாக
8. உருபு
9. கூடுமாறும்
10. மகரம் இரண்டு புள்ளியுள் உட்பெறு புள்ளியை

புள்ளியும் கோடும் உடன்பெற்றன. இங்ஙனந் திரிந்து ஒலிப்பவே உயிர்மெய் பன்னிரு பதினெட்டு இருநூற்றொருபத் தாறாயிற்று. ஆகவே உயிர்மெய்க்கு வடிவும் ஒருவாற்றாற் கூறினாராயிற்று. இதனானே மெய் தனக்கு இயல்பாகிய அகரத்தை நீங்கி நிற்ப தோர் தன்மையும் பிறிதோருயிரை ஏற்குந் தன்மையும் உடைய தென்பதூஉம், உயிர்மெய்க்கட் புலப்படாது இயல்பாகிய அகரமாய் நிற்கும் தன்மையும், மெய் புள்ளி பெற்றழிந்த வழி அவற்றிற்குத் தக்க உயிராய்ப் புலப்பட்டு வருந்தன்மையும் உடைய தென்பதூஉம் பெற்றாம். உயிர்மெய் என்பது உம்மைத் தொகை

வேங்கடராசுலு ரெட்டியார்

கா கி கீ முதலியன ஒலிக்கையில், ககரத்தொடு ஆ இ, ஈ. முதலிய ஒலிகள் சேர்ந்திருத்தல் புலனாதல் போல, கா, கி, கீ முதலியவற்றின் வரி வடிவிலும், ஆ, இ, ஈக்களின் வரிவடிவு சேர்ந்திருத்தல் புலனாதல் முறை. தெலுங்கில் உயிர்மெய் எழுத்துக்களின் வடிவில் உயிர்எழுத்துக்களின் வடிவும் ஒரு பகுதி காண்கிறது. தமிழ் எழுத்துக்களிலும் உயிர்மெய்க்கண் உயி ரெழுத்தின் வடிவின் ஒரு பகுதி சேர்ந்திருந்தது என்றும், பின்னர், வரிவடிவில் நேர்ந்த மாறுபாட்டால் சில எழுத்துக்களில் அவ் வடிவம் ஒழிந்தது என்றும் கொள்ளுதல் தகும்.

| உயிர்எழுத்து. | உயிர்வடிவில் ஒரு பகுதி. | உயிர்மெய் யெழுத்து |
|---|---|---|
| இ | ⌒ | கி |
| ஈ | ೯ | கீ |

இங்குக் காட்டிய* ஆகார இகர ஈகாரங்களின் வடிவின் ஒரு பகுதி கா, கீ என்னும் உயிர்மெய்யெழுத்தின் வடிவிற் சேர்ந்திருத்தல் நன்கு தெரிகின்றது. ஆயின், உ, ஊக்களின் ஒரு பகுதி வடிவம் 'கு' கூ† முதலியவற்றில் இக்காலத்திற் காணப்படவில்லை. இதனால், வரிவடிவில் மாறுபாடு நேர்ந்திருத்தல் வேண்டும் என்பது துணியப்படும்.

(இச்சூத்திரத்தில், 'உயிர்த்தல்' என்பதற்கு வெளிப்படுதல் என்பது பொருளாகும். 'பொறையுயிர்த்தல்' என்பதில் உயிர்த்தல், என்னும் சொல்லின் பொருள் ஈண்டு ஒப்பிடத்தகும். 'உருவு திரிந்துயிர்த்தல்' என்னுமிடத்து, உருவு திரிதல் வரி வடிவிற்கே பொருந்துவதாகலின், உயிர்த்தல், என்பதற்கு

---

* புத்தகத்தில் ஆகார வடிவுக் குறியீடு விடுபட்டுள்ளது.

† 'கூ—வில் சேர்ந்துளது எனினும் அமையும்' என்று கீழ்க் குறிப்பு எழுதியுள்ளார். அதுவே அமையும்.

ஒலித்தல்' என்று உரையாளர்கள் கூறிய பொருள் பொருந்துவதன்று. அவருரையைச் சிவஞானமுனிவர் மறுத்துக் கூறியிருத்தல் அறியத் தக்கது.

இச்சூத்திரத்தில் உயிர்மெய் எழுத்துக்களின் வரிவடிவினைக் குறித்துக் கூறினார்; முன் சூத்திரத்தில் அவற்றின் ஒலிவடிவினைக் குறித்துக் கூறுவார்.

சுப்பிரமணிய சாஸ்திரியார்

'இல்லா'—ஈறுகெட்ட பெயரெச்சமாகும். அதற்கு இளம்பூரணர் 'இல்லையாம்படியாக' எனப் பொருள் கூறினர். அவர் கூற்றில் அது வினையெச்சமாகும். அவ்வாறாயின் கன்னியப்ப முதலியார் பதிப்பில் 'இல்லாத என்பது இல்லா' என நின்றது. என்ற பாடமே பொருந்தாது. சிதம்பரம்பிள்ளை பதிப்பிலுள்ள 'இல்லாக' என்ற பாடமே பொருந்தும். அதற்கு 'இல்லையாக' என்பது பொருளாகும்.

''தன்னின முடித்தல் 'என்பதனால் அளபெடையுயிரோடும் சார்பிற்றோற்றத் துயிரோடும் கூடும் உயிர்மெய்யும் கொள்க" எனக்கூறினர் இளம்பூரணர். ஈண்டு அளபெடையைக் கூறியதற்குக் காரணம் அது மூன்று மாத்திரை பெறும் எழுத்து என்ற கருத்தானாகும். அஃது ஆசிரியர்க்கு உடம்பாடன்றென முன்னரே கூறப்பட்டது. நச்சினார்க்கினியத்தில் ''கா, ஙா முதலியன புள்ளி பெற்றன. அருகே பெற்ற புள்ளியை இக்காலத்தார் காலாக எழுதினார்'' என்றுளது. ஆகலின் கா, ஙா என்றவிடத்து முற்காலத்தில் க, ங என்ற வடிவமே இருந்தன என்பது வெளிப்படை.* ஆங்கே ''மெய் தனக்கு இயல்பாகிய அகரத்தை நீங்கி நிற்பதோர் தன்மையும்...உடைய தென்பதூஉம்'' என்றுளது. மெய்க்கு அகரம் இன்மையானும், க, ங முதலியன உயிர்மெய்யாகக் கொள்ளப்பட்டமையானும், ''தனக்கு இயல்பாகிய'' என்ற அடைமொழி பொருந்தாதெனத் தோன்றுகிறது. இளம்பூரணத்தில், ''ஈண்டு உயிரும் மெய்யும் கூடுகின்ற உயிர்மெய்க் கூட்டத்தினை எல்லா மெய்யும் என்று மெய்மேல் வைத்துக் கூறியது அது முன் கூறிக் கூறப்படுதல் நோக்கிப் போலும்" என்றுளது. உயிர்த்தல் என்றதற்கு 'மெய் என்றது சொல்வகையான் எழுவாயா யிருப்பினும், பொருள் வகையான் புள்ளியில் மெய், உருவு திரிந்த மெய் என்பனவே எழுவாயாகும். ''இராமன் சிங்காதனமேற அரசி

* சுன்னாகம் கணேசய்யர் குறிப்பும் இவ்வாறேயாம்.

யற்றுவான்'' என்றாற் போன்ற உலக வழக்குக்களை நோக்கின், ஆசிரியரது சூத்திரத்தில் வழுவன்மையும் இளம்பூரணர் கூறிய தற்கு இடமின்மையும் அறிதல் கூடும்.

பா-ம். ம. பதி: ''மகரமும் இரண்டு புள்ளியுளுட்பெறு புள்ளியை வளைத்தெழுதினார்.

தா.பதி: மகரம் உட்பெறு புள்ளியை வளைத்தெழுதினார்.

முன்பாடம் சிறக்கும்.

பிற குறிப்புகள்:

அஃதேல் எழுத்து முப்பத்து மூன்றெனக் கூறிப் பின்னர் இரு நூற்றொருபத்தாறுயிர்மெய்க் குப்பை கோடலும் வேற்றெ ழுத்தாகி வரும் என்பது, வகுத்து மெய்ந்நிறுத்தல் என்பத னாற் கொள்ளாமோ எனின், கோடுமன்றே, ''புள்ளியில்லா எல்லா மெய்யும்'' என்புழி உருபுருபாகி யகரமோ டுயிர்த்த லும்'' என ஆசிரியன் இரண்டெழுத்தின் கூட்டமாகச் சூத்திரஞ் செய்திலனாயின்—'' (தொல்-பொருள்.665. பேராசிரியர் உரை) மேற்கொள்.

### உயிர்மெய் ஒலிக்குமாறு

18 மெய்யின் வழியது உயிர்தோன்று நிலையே.

### இளம்பூரணர்

இது, உயிர்மெய்யுள் உயிரும் மெய்யும் நிற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ—ள்) உயிர்—உயிர், மெய்யின்வழியது — மெய்களின் பின்னவாம், தோன்றும்நிலை—[3]உயிர்கள் தோன்றும் நிலைமைக் கண்;

'தோன்றுநிலை' என்றதனான், உயிர்மெய்களைப் பிரிக்கு மிடத்தும் கூட்டுமிடத்தும், அவ்வாறே முன்னும் பின்னும் [4]ஆதலைக் கொள்க. மெய்யும் உயிரும் முன்னும் பின்னும் பெற

சு.வே: 1. வழிய
2. உயிர்கள்
3. அவ்வுயிர்கள்
4. ஆதல்

நிற்கும் என்றமையால், அக்கூட்டம் பாலும் நீரும்போல உடன் கலந்ததன்றி, விரல் நுனிகள் தலைப் பெய்தாற்போல வேறு நின்று [1]கலந்தனவல்ல என்பது பெறுதும். ஈண்டு வேற்றுமை நயம் கருதப்பட்டது.

### நச்சினார்க்கினியர்

இது மெய்யும் உயிரும் கூடியவழி அவற்றின் ஓசை நிற்கும் முறைமை கூறுகின்றது.

(இ-ள்.) மெய்யினது ஓசை தோன்றிய பின்னதாம், உயிரினது. ஓசை தோன்று நிலை; எ—று.

முன்னின்ற சூத்திரத்தான் மெய் முன்னர் நிற்ப உயிர் பின் வந்து ஏறும் என்றார். அம்முறையே ஓசை பிறக்கும் என்றார் இதனாலே மாத்திரை கொள்ளுங்கால் உப்பும் நீரும் போல ஒன்றேயாய் நிற்றலும் வேறு படுத்துக் காணுங்கால் விரலும் விரலும் சேர நின்றாற்போல வேறாய் நிற்றலும் பெற்றாம். நீர் உப்பின் குணமேயாயவாறுபோல உயிரும் மெய்யின்குணமேயாய் வன்மை மென்மை இடைமை எய்தி நிற்றல் கொள்க.

எ—டு: க—ங—ய எனக் கூட்டமும் பிரிவும் மூவபிகைகயோ சையும் காண்க.

### சுப்பிரமணிய சாஸ்திரியார்

(பொருள்):- உயிர்தோன்றுமிடம் மெய்யின் பின்னரே யாகும் உ-ம். க=க்+அ.

''புள்ளியில்லா எல்லா மெய்யும்'' என்ற முன் சூத்திரத்தைக் கேட்டவுடன் அவ்வுயிர் எங்குத் தோன்றும் என்ற எண்ணம் உடனே உண்டாதல் இயற்கையாதலின், நச்சினார்க்கினியர் கொண்டவாறே கொள்ளுதல் சிறப்புடைத்து. மிகையால் இளம் பூரணர் கொள்ளும் பொருள் சொல்லாதே கிடைக்கும். இங்கு, ''அக்கூட்டம்......கலந்தனவல்ல''* என இளம்பூரணரும், ''இதனானே......வேறாய் நிற்றலும் பெற்றாம்''† என நச்சினார்க் கினியரும் கூறிகின்றனர். பாலில் நீரின் தன்மையிருத்தலானும்

---

சு. வே : 1. மொழிந்தன

* பக்கம் 101 ல்பார்க்க

† பக்கம் 101 ல்பார்க்க

உப்பில் நீரின் தன்மையில்லாமையானும் மெய்யில் உயிரின் தன்மை யில்லாமையானும் ''பாலும் நீரும்'' என்றஉதாரணத்தைக் காட்டிலும் "உப்பும் நீரும்" என்றது சிறக்கும் நச்சினார்க்கினியத்தில் ''நீர் உப்பின் குணமே யாயவாறு போல........... எய்தி நிற்றல் கொள்க. உ-ம். க—ங—ய என்க் கூட்டமும் பிரிவும் மூவகை யோசையும் காண்க''** என்றுளது. ஙகரப் புள்ளியின் பின்னர் உள்ள அகரத்தின் ஒரு பகுதி மூக்கினால் ஒலிக்கப்படுவதாகக் கருதப்படினும், ககர யகரப் புள்ளிகளின் பின்னர் ஒலிக்கப்பட்ட அகரங்கட்கு வேறுபாடு ஒலிநூல் வல்லோர்கள் கொள்ளாமையின், உயிர்க்கு வன்மை இடைமையுண்டென நச்சினார்க்கினியர் கொள்வது ஆராய்தற் பாலது.

குறிப்பு:

இந்நூற்பாவையும், மேல்நூற்பாவையும் தொல். பொருள் 65ல் மறுதலை சிதைத்துத் தன் துணி புரைத்தல் விளக்கத்தில் பேராசிரியர் ஆண்டுள்ளார்.

### வல்லினமெய்

19. வல்லெழுத் தென்ப கசட தபற.

**இளம்பூரணர்**

இது தனி மெய்களுள் சிலவற்றிற்கு [1]வேறு ஓர் குறியிடுதல் நுதலிற்று.

(இ-ள்.) வல்லெழுத்தென்ப—வல்லெழுத்தென்னும் குறிய என்று சொல்லுவர், கசட தபற—கசட தபற என்னும் தனி மெய்களை.

வல்லென்றிசைத்தலானும், வல்என்ற தலைவளியாற் பிறந்த லானும் வல்லெழுத்தெனப்பட்டது. மொழிக்கு முதலாம் எழுத்து நான்கு உளவாகலானும், அவற்றால் வழக்குப் பயிற்சி பெரிதாக லானும் (வல்லினம்) முன் கூறப்பட்டது.

**நச்சினார்க்கினியர்**

இது தனி மெய்களுள் சிலவற்றிற்கு வேறோர் குறியீடு கூறுகின்றது.

---

** பக்கம் 101ல் பார்க்க.

சு.வே, 1. 'வேறு ஓர்'—சில சுவடிகளில் இல்லை.

(இ-ள்) கசட தபற என்னும் தனி மெய்களை வல்லெழுத்தென்னும் குறியினையுடைய என்று கூறுவர் ஆசிரியர்; எ-று.

இஃது ஆட்சியும் காரணமும் நோக்கிய குறி. ஒழிந்த மெல்லெழுத்தையும் இடையெழுத்தையும் நோக்கித் தாம் வல்லென்றிசைத்தலானும் வல்லெனத் தலைவளியாற் பிறத்தலானும் வல்லெழுத்தாயிற்று.

## பிறகுறிப்புகள்

1. இலக்கண விளக்க உரையாசிரியர் 'தலைவளி' என்பதற்குப் பதில் 'தலைவழி' என்பர். (இல. வி. எழு.7)
2. வல்லினம் கல்மேல் விரலிட்டாற் போல்வது என்பர் நேமிநாத உரைகாரர். (நேமி. 2. உரை)

### மெல்லினமெய்

20. மெல்லெழுத் தென்ப ஙஞண நமன.

### இளம்பூரணர்

இதுவும் அது.

(இ-ள்.) மெல் எழுத்து என்ப—மெல்லெழுத்து என்னுங் குறிய என்று சொல்லுவர், ங ஞ ண ந ம ன—ங ஞ ண ந ம ன என்னும் தனி மெய்களை.

மெல்லென் றிசைத்தலானும், மெல் என்ற மூக்கின் வளியிற் பிறத்தலானும், மெல்லெழுத்தெனப் பட்டன. மொழிக்கு முதலாம் எழுத்து மூன்று உளவாகலானும், அவற்றின் வழக்குப் பயிற்சியானும் (மெல்லினம்) முதலாம் எழுத்துச் சிறுபான்மை வழக்கினவாய் இரண்டாகிய இடையினத்தின் முன் வைக்கப்பட்டது. வன்மை மென்மை கூறலின், எழுத்து அருவின்றி உருவாதல் [1]பெறப்பட்டது. உயிருக்கும் குறுமை நெடுமை கூறலின் உருவென்பது பெறுதும்.

### நச்சினார்க்கினியர்

இதுவும் அது.

(இ-ள்.) ங ஞ ண ந ம ன என்னுந் தனி மெய்களை மெல்லெழுத் தென்னுங் குறியினை யுடைய என்று கூறுவர் ஆசிரியர்; எ-று.

---

சு,வே. 1. கூறப்பட்டது.

இதுவும் ஆட்சியும் காரணமும் நோக்கிய குறி. மெல்லென்றி சைத்தலானும் மெல்லென்று மூக்கின் வழியாற் பிறத்தலானும் மெல்லெழுத்தாயிற்று.

பிறகுறிப்புகள்:

1. இலக்கண விளக்க வுரையாசிரியர் 'மூக்குவளி' என் பதற்குப் பதில் 'மூக்கு வழி' என்பர். (இல. விள. எழு7. உரை)

2. ''மெல்லினம் மணல்மேல் விரலிட்டாற் போலும்'' என்பர் நேமிநாத உரைகாரர். (நேமி. 2. உரை)

## இடையினமெய்

21. இடையெழுத் தென்ப யரல வழள.

### இளம்பூரணர்

இதுவும் அது.

(இ-ள்) இடையெழுத்து என்ப—இடையெழுத்து என்னுங் குறிய என்று சொல்லுவர், யரல வழள— யரல வழள என்னுந் தனி மெய்களை

இடை நிகரவாகி யொலித்தலானும் இடை நிகர்த்தாய மிடற்று வளியாற் பிறத்தலானும் இடையெழுத்து எனப்பட்டது.

### நச்சினார்க்கினியர்

இதுவும் அது.

(இ-ள்) யரலவ ழ ள என்னுந் தனி மெய்களை இடையெழுத் தென்னும் குறியினை யுடைய என்று கூறுவர் ஆசிரியர்; எ—று

இதுவும் ஆட்சியும் காரணமும் நோக்கிய குறி. இடைநிகர்த் தாய் ஒலித்தலானும் [1]இடைநிகர்த்தாய மிடற்றுவளியாற் பிறத்த லானும் இடையெழுத்தாயிற்று.

வல்லினத்துக் க—ச—த—ப என்னும் நான்கும் மெல்லினத்து ஞ—ந—ம என்னும் மூன்றும் இடையினத்து ய—வ என்னும் இரண்டும் மொழிக்கு முதலாதல் நோக்கி இம் முறையே வைத் தார். இப் பெயரானே எழுத்தென்னும் ஓசைகள் உருவாயின. உயிர்க்குங் குறுமை நெடுமை கூறலின் அவையும் உருவாயின. இது சார்பிற் றோற்றத்திற்கும் ஒக்கும்.

---

சு.வே: 1. இடைநிகர்த்தாய்.

**சுப்பிரமணிய சாஸ்திரியார்**

வல்லெழுத்து, மெல்லெழுத்து, இடையெழுத்து எனக் குறி யிட்டதற்குக் காரணம் வல்லென்ற தலைவளியாற் பிறத்த லானும், மெல்லென்ற மூக்கின் வளியாற் பிறத்தலானும், இடை நிகர்த்தாய மிடற்று வளியாற் பிறத்தலானும்,என்பர் இளம்பூரணர். அவ்வாறே கூறினர் நச்சினார்க்கினியரும். வல்லெழுத்து தலை வளியானும், இடையெழுத்து மிடற்று வளியானும் பிறக்கும் என மொழிநூல் வல்லோர் ஒருவரும் கூறவில்லை. அன்றியும் ''இடைநிகர்த்தாய மிடற்றுவளியால்'' என்னுமிடத்து 'இடை நிகர்த்தாய' என்ற அடைமொழியும் பொருந்தவில்லை; மிடற்றுவளி தலைவளிக்கும் மூக்கின் வளிக்கும் இடையின் மையின். அவர்கள் அவ்வாறு கூறியதற்கு ஞாபகம் ''மெல்லெழுத் தானும்'' (எழுத். 100) என்ற சூத்திரத்தில் "யாப்புற" என்ற சொல் எனக் கூறுகின்றனர். எல்லா வொலிகட்கும் வளி மிடற்று வழியாய்ப் போக வேண்டியிருத்தலான் அவ்வாறு கூறுதல் பொருந்தாதென்க. ''உந்திமுதலா...''என்ற சூத்திரத்தில் ''தலை யினும் மிடற்றினும் நெஞ்சினும் நிலைஇ'' என்றிருத்தலின் அவ் வாறு கூறினர் எனின் ''நெஞ்சுவளியாற் பிறக்குப் எழுத்துக்களை ஏன் கூறாதிருந்தனர் என்ற வினாவிற்கு விடையளித்தல் வேண்டும்.

நெடுங்கணக்கில் மெய்களும் ககரம் முதலாயிருத்தலானும், மெல்லினம், வல்லினம் பிறக்குமிடத்தையும் மூக்கினையும் தமக்குப் பிறப்பிடமாகக் கொண்டமையானும், அப்பன்னிரண்டு மெய்யும் உண்டாம்போது வாய் முழுவதும் மூடியிருத்தலானும், வல்லினத்தை முன்னரும் பின்னர் மெல்லினத்தையும் கூறினர். இடையெழுத்து உண்டாம்போது வாய் சிறிது மூடியும் சிறிது திறந்தும் இருத்தலான் அவற்றைப் பின் கூறினர். அவை, முழுதும் வாய் திறக்க உண்டாம் வல்லின மெல்லினங்கட்கும் இடையாய் நிற்றலின் இடையெழுத்து எனப் பெயர் பெற்றன. ஆகலின் ''அவ்விரண்டு நோக்கியல்லது இடை நிகரனவா யொலித்தல் அறியப் படாமையின் அதுபற்றி இடையெழுத்துக்கள் அவ்விரு கூற்றிற்கும் பின் வைக்கப்பட்டன" எனச் சிவஞான முனிவர் கூறியது ஆராய்தற்பாலது. இம் மூன்று சூத்திரங் களிலும் 'என்ப' என்ற சொல் வழங்கப் படுதலின், வல்லெழுத்து முதலிய மூன்று குறிகளும் முன்னோரால் இடப்பட்டன என்பது அறியத்தகும்.

பிறகுறிப்புகள்:

இலக்கண விளக்க வுரையாசிரியர் 'மிடற்றுவளி' என்பதனை 'மிடற்றுவழி' என்பர். (இல-விள. எழு. 7. உரை)

இடையினம் மண்மேல் விரலிட்டாற் போலும் என்பர் நேமிநாத உரைகாரர். (நேமி. 2. உரை)

மூவினங்களின் குறிகளையும் ஆசிரியர் ஆண்டவாறு:

"உயிரொடு புணர்ந்த வல்லாறன் மிசைத்தே" (எழுத்-38)

"குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே" (எழுத்-36)

"எப்பெயர் முன்னரும் வல்லெழுத்து வருவழி" (எழுத்-129)

"மெல்லெழுத் தாறும் பிறப்பின் ஆக்கம்" (எழுத்-100)

"மரப்பெயர்க் கிளவிக்கு மெல்லெழுத்து மிகுமே" (எழுத்-218)

"இடையொற்றுத் தொடரும் ஆய்தத் தொடரும்" (எழுத்-414)

ஈரெழுத் தொருமொழி உயிர்த்தொடர் இடைத்தொட) (எழுத்-407)

# 5. மயக்கம்

## மெய் மயங்குமாறு

22. அம்மூ வாறும் வழங்கியல் மருங்கின்
மெய்ம்மயங் குடனிலை தெரியுங் காலை

### இளம்பூரணர்

இது, தனிமெய் மயக்கத்திற்குப் பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அ மூ ஆறும் — மேற் சொல்லப்பட்ட (மூவாறு) பதினெட்டு மெய்யும், வழங்கு இயல் மருங்கின்—தம்மை மொழிப் படுத்தி வழங்குதல் உளாதாமிடத்து, மெய் மயங்கு—மெய் மயக்கம் என்றும், உடன்நிலை—உடனிலை மயக்கம் என்றும் இருவகைய, தெரியுங்காலை—(அவை மயங்கு முறைமை) ஆராயுங்காலத்து.

உயிர், மெய், உயிர்மெய் என்னும் மூன்றனையும் உறழ்ச்சி வகையான் உறழ ஒன்பது உளவாம் அன்றே, அவற்றுள் [1]தனி மெய்யோடு தனிமெய் [2]மயக்கம் ஒன்றே கூறிய தென்னெனின்.

---

சு. வே: 1. மெயமயக்
2. மயக்கமேயாதல்-(ஒன்றே என்பது இல்லை).

[1]மற்றவற்றிற்கு வரையறையின்மையின், வரையறை[2]யுடைய தனிமெய் மயக்கமே [3]கூறி யொழிந்தார் என உணர்க. மெய் என்றதனான் தனிமெய்யோடு தனிமெய் மயக்கமாதல் கொள்க.

**நச்சினார்க்கினியர்**

இது தனிமெய் பிறமெய்யோடும், தனிமெய்யோடும் மயங்கும் மயக்கமும், உயிர்மெய் உயிர்மெய்யோடும் தனிமெய்யோடும் மயங்கும் மயக்கமும் கூறுகின்றது.

(இ-ள்) அங்ஙனம் மூன்று கூறாகப் பகுத்த பதினெட்டு மெய்யும் வழக்கிடத்தும் செய்யுளிடத்தும் எழுத்துக்களைக் கூட்டி மொழிப்படுத்து வழங்குதல் உளதாமிடத்து, தனிமெய் தன் முன்னர் நின்ற பிறமெய்யோடுந் தன்மெய்யோடும் மயங்கும் நிலையும் அப்பதினெட்டும் உயிருடனே நின்று தன் முன்னர் நின்ற உயிர்மெய்யோடும் தனிமெய்யோடும் மயங்கும் நிலையும் என இரண்டாம். அவை மயங்கும் மொழியாந்தன்மை ஆராயுங் காலத்து; எ-று.

எனவே, தனித்து நின்ற எழுத்துடன் முன்னின்ற எழுத்துக்கள் தாங் கூடுமாறு கூறினாராயிற்று. 'கட்க' என்றால் இடைநின்ற தனிமெய் [4]முன்னர் நின்ற தன்னின் வேறாய ககர வொற்றோடு மயங்கிற்று. 'காக்கை' என்றால் இடை நின்ற ககர வொற்று முன்னர் தன்னொற்றோடு மயங்கிற்று. 'கரு' என ஈரெழுத்தொரு மொழியும் 'கருது' என மூவெழுத்தொரு மொழியும் உயிர்மெய் நின்று தன் முன்னர் நின்ற உயிர்மெய்யொடு மயங் கிற்று. 'துணங்கை' யென உயிர்மெய் நின்று தனிமெய்யொடு மயங்கிற்று.

'தெரியுங்காலை' என்றதனான் உயிர் முன்னர் உயிர்மெய் மயக்கமும் உயிர் முன்னர்த் தனி மெய்ம்மயக்கமும் கொள்க அவை அளை, ஆம்பல் என்றாற் போல்வன.

[5]மெய்ம் மயக்கங்களுள் தனிமெய் முன்னர்ப் பிற மெய் நின்று மயங்குதல் பலவாதலிற் பலசூத்திரத்தாற் கூறித் தன் முன்னர்த் தான் வந்து மயங்குதலை ஒரு சூத்திரத்தாற் கூறுப. அவை மயங்குங்கால் வல்லினத்தில் டகரமும் றகரமும் மெல்லின மாறும் இடையினமாறும் பிற மெய்யோடு மயங்கும் என்றும், வல்லினத்திற்

சு.வே: 1. அவற்றிற்கு
2. யுடையது
3. கூறியொழிந்தான்
4. பின்னர்
5. இம்மயக்கங்களுள்

கசத பக்கள் தன் மெய்யோடன்றிப் பிறமெய்யோடு மயங்கா வென்றும் உய்த்துணரக் கூறுமாறு உணர்க.

மூவாறும் என்னும் உம்மை முற்றும்மை.

இச்சூத்திரம் முதலாக 'மெய்ந்நிலை சுட்டின்' (எழு-20) ஈறாக மேற்கூறும் மொழி மரபிற்குப் பொருந்தி யகருவி கூறுகின்ற தென்றுணர்க, எழுத்துக்கள் தம்மிற் [1]கூடிப்புணரு மாறு கூறுகின்றதாதலின்.

## வேங்கடராசுலு ரெட்டியார்

நச்சினார்க்கினியர், "இச்சூத்திரம் தனிமெய் பிறமெய்யோடும் தன்மெய்யோடும் மயங்கும் மயக்கமும் உயிர்மெய் உயிர்மெய் யோடும் தனிமெய்யோடும் மயங்கும் மயக்கமும் கூறுகின்றது" என்று கருத்துக் கூறி, 'மெய்ம்மயங்குடனிலை' என்பதனை, 'மெய் மயங்கும்நிலை', 'உடன் மயங்கும்நிலை' என மாற்றிக் கூட்டி, 'அங்ஙனம் மூன்று கூறாகப் பகுத்த பதினெட்டு மெய்யும் வழக்கிடத்தும் செய்யுளிடத்தும் எழுத்துக்களைக் கூட்டி மொழிப் படுத்து வழங்குதல் உளதாமிடத்து, தனிமெய், தன்முன்னர் நின்ற பிறமெய்யோடும் தன்மெய்யோடும் மயங்கும் நிலையும், அப்பதி னெட்டும் உயிருடனே நின்று தன்முன்னர் நின்ற உயிர்மெய் யோடும் தனிமெய்யோடும் மயங்கும் நிலையும் என இரண்டாம்; அவை மயங்கு மொழியாந் தன்மை ஆராயுங்காலத்து' என்று பொருள் கூறினர்.

ஆசிரியர் மேல் மூன்று சூத்திரங்களாற் கூறிய மூவகை யெழுத்துக்களையே 'அம்மூவாறும்' என்று கூட்டி, அம்மூவாறும்... தெரியுங்காலை' என்றாராகலின், மெய்யெழுத்து ஒன்றனோ டொன்று மயங்குதலையே ஆராயப் புகுந்தாராகலானும், இடை நின்ற உயிர்மெய்யெழுத்தினை மெய்யாகவும் உயிராகவும் இரண்டாகப் பிரித்து விதி கூறுதலேயன்றி அவ்வுயிர் மெய் யெழுத்தினை ஓரெழுத்தாகக் கருதி விதி கூறுதல் இன்மையானும், அதற்கு 'உயிர்மெய்த் தொடர்க் குற்றுகரம்' என்னாது, 'உயிர்த் தொடர்க் குற்றுகரம்' என்றதே சான்றாகலானும், நச்சினார்க் கினியர் தாமும், 'வரகு - இதனை, மேல் உயிர்த் தொடர் மொழி என்ப' (புணரி. 4. உரை) என்று கூறினார் ஆதலானும் 'மெய்ம் மயங்குடனிலை' என்பது அவர் கூறிய இருவகைப் பொருளைப் பயத்தல் இன்மையானும் அவர் (நச்சினார்க்கினியர்) கூறிய பொருள் பொருந்துதலின்று.

---

1. கூடுமாறு (கூடிப்புணருமாறு என்பது பொருந்துவதில்லை, இது புணர்ச்சிவிதி கூறுவதன்றாகலின்).

சூத்திரத்தில் 'மெய்' என்றதனால், தனிமெய்யோடு உயிர் மெய்மயக்கம் அன்றி, தனிமெய்யோடு தனிமெய் மயக்கம் ஆதல் கொள்க' என்று இளம்பூரணவடிகள் எழுதியிருத்தல் ஈண்டு அறியத்தக்கது. இக்கூறியவாற்றால் இச்சூத்திரம், தனிமெய் மயக்கம் கூறத் தொடங்குவதுவேயாதல் தெளிவுறும்.

'மெய்ம்மயங்குடனிலை' என்பது மெய்மயங்குவதாகிய உடனிலை என்று பொருள்படும். உடனிலை — ஸம்யோகம். இனி, மெய்ம்மயங்கு என்பது வேற்றுநிலை மெய்ம் மயக்கத்தையும் உடனிலை யென்பது உடனிலை மெய்ம்மயக்கத்தையும் குறிப்பது என்றும் கொள்ளலாம். 'மெய்ம்மயக்குடனிலை' (நன்னூல் 110) என்பது காண்க.

இச்சூத்திரத்தில் 'தெரியுங்காலை' என்பது, 'டறலள...... மூவெழுத்துரிய', லளஃகான் முன்னர்......தோன்றும்' என்னுந் தொடக்கத்தனவாய் முன்னர் வரும் ஏழு சூத்திரங்களோடுந் தொடரும்.

### சுப்பிரமணிய சாஸ்திரியார்

ஈண்டு மயங்குதல் என்ற சொற்குக் 'கூடுதல்' என்ற பொருள் என்பது, 'கசதப வொழித்த ஈரேழன் கூட்டம்' (நன்னூல். 110) என்ற சூத்திரத்திலுள்ள 'கூட்டம்' என்ற சொல்லான் விளங்கும்; சூத்திரத்தில் 'அம்மூவாறும்' என்பது எழுவாய்; அன்மொழித் தொகையாகிய 'மெய்ம் மயங்குடனிலை' என்றது பெயர்ப் பயனிலை. மெய்ம் மயங்குநிலை உடனிலை என்பன முறையே மெய்ம்மயக்கம் உடனிலை மயக்கம் என்ற சொற்களாற் பின்னர் வழங்கப்பட்டன காண்க.

ஒருமெய் தன்னோடு மயங்குதலை உடனிலை மயக்கம் என்றும், பிறமெய்யோடு மயங்குதலை மெய்ம்மயக்கம் என்றும் இளம்பூரணர், நன்னூலார், இலக்கண விளக்கநூலார் எல்லோரும் கருதினர். நச்சினார்க்கினியரோ தனிமெய் பிறமெய்யோடுந் தன் மெய்யோடும் மயங்கும் மயக்கத்தை மெய்ம்மயக்கம் எனவும் உயிர் மெய் உயிர்மெய்யோடும் தனிமெய்யோடும் மயங்கும் மயக்கத்தை உடனிலை மயக்கம் என்றும் கூறுவர். இச்சூத்திரத்தில் 'அம் மூவாறும்' என்ற சொல் இதற்கு முன் உள்ள மூன்று சூத்திரத் திலுள்ள தனிமெய்யையே குறித்தலானும், பின்வரும் சூத்திரங்கள் எட்டனுள் ஒன்றிலேனும் உயிர்மெய் உயிர்மெய்யோடும் தனிமெய் யோடும் மயங்கும் மயக்கத்தை ஆசிரியர் கூறாமையானும் அவர் கூற்றுப் பொருந்தாதென்க. சூத்திரத்திலுள்ள 'உடன்' என்ற

தன்னுடன் எனப் பொருள் கொள்ளாது. "உயிருடன்" எனப் பொருள் கொண்டதும், பின்னர் உள்ள 'உடன்' என்ற சொல்லால் முன்னர் உள்ள 'மெய்' என்ற சொல் பிறமெய்யையே குறிக்கும் எனக் கொள்ளாமையுமே அவர் அவ்வாறு கூறியதற்கு ஏதுவாகு மெனத் தோன்றுகின்றது. ஆகலினன்றே அவர் கூறும் பொருளை இலக்கண விளக்க ஆசிரியர் கொண்டாரல்லர்.

வெள்ளைவாரணனார்

உடனிலையை உடனிலை மயக்கம் எனக் கூறுவர் இளம்பூரணர். 'மெய்ம்மயக்குடனிலை' என்ற இவர் பாடத்தை விடுத்து நச்சினார்க்கினியர் 'மெய்ம்மயங்குடனிலை' எனப் பாடங் கொண்டு மெய்ம்மயங்கும்நிலை, உடன்மயங்கும்நிலை என ஈரிடத்தும் 'மயங்குநிலை' என்ற சொற்தளைக் கூட்டி, 'மெய்ம் மயங்குநிலை =………… என இரண்டாம்,**எனப் பொருள் கூறி, "இச்சூத்திரம்"தனிமெய்……மயங்கும் மயக்கமும் கூறுகின்றது"† எனக் கருத்துரைப்பர். இவர்க்கு முன்னவராய இளம்பூரணர் கொண்ட 'மெய்ம்மயக்குடனிலை'என்ற பாடமே தொன்மை கருதி ஏற்றுக் கொள்ளப்படுவதாகலானும், உயிர்மெய், உயிர்மெய்யோடும் தனிமெய்யோடும் மயங்கும் மயக்கத்திற்கு வரையறையின்மையின் அதற்கு விதி கூறப்படுவதன்றாகலானும், அவர் கூறியவாறு மெய்ம்மயங்குநிலை என்பதனுள் மெய் பிறமெய்யோடும் தன்மெய் யோடும் கலந்து நிற்கும் நிலை என்பது விளங்காமையானும், உயிர்மெய்யை உயிரும் மெய்யும் என ஈரெழுத்தாகப் பிரித்து விதி கூறுவார் ஈண்டு ஓரெழுத்தாகக் கொண்டு உரையாராகலானும், உடனிலையென்பதற்கு உயிருடன் நிற்றல் எனக் கோடற்குரிய சொல்லின்மையானும் இளம்பூரணர் பாடமே ஆசிரியர் கருத்தாதல் பெறப்படும்.

ஆசிரியர் தனிமெய் பிறமெய்யோடு மயங்கு நிலையை 'மெய்ம் மயக்கு' எனவும், தனிமெய் தன்மெய்யோடு மயங்கி நிற்கும் நிலையை 'உடனிலை' எனவும் இச்சூத்திரத்திற் பகுத்துரைத்தல் காணலாம்.

---

* 'மெய்ம்மயங்குடனிலை' என்ற பாடமும் இளம்பூரணர் உரைச்சுவடிகளில் காணப்படுகின்றது.

** பக்கம் 103ல்பார்க்க

† பக்கம் 103ல்பார்க்க

பிறகுறிப்புகள்

ஆசிரியர் தொல்காப்பியனாரும் "அம்மூவாறும்...... தெரியுங் காலை" எனமெய்யோடு மெய் இயைதற்கே மயக்கம் என்னும் குறியீடு கூறினார்—சிவஞான முனிவர். (இல-விள-சூறா-எழு—31). மயக்கங்கள் சையுக்தமே—(பிரயோக-)5.

## தனிமெய் பிறமெய்யுடன் மயங்குமாறு

23. டறலள வென்னும் புள்ளி முன்னர்க்
கசப வென்னும் மூவெழுத் துரிய.

### இளம்பூரணர்

இது, மெய்ம்மயக்கம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) டறலள என்னும் புள்ளி முன்னர்—டறலள என்று சொல்லப்படும் புள்ளிகளின் முன்னர், கசப என்னும் மூ எழுத்து உரிய—க ச ப என்று சொல்லப்படும் மூன்றெழுத்தும் மயங்குதற்கு உரிய.

எ-டு-கட்க, கற்க, செல்க, கொள்க எனவும்; கட்சிறூர் கற்சிறூர், செல்சிறூர், கொள்சிறூர் எனவும்; கட்ப, கற்ப, செல்ப, கொள்ப எனவும் வரும்.

மேல் 'தெரியுங்காலை' என்றதனான், இம்மெய்ம் மயக்கம் கூறுகின்ற சூத்திரம் எல்லாம் பலபடியால் மயக்கம் கொள்ளச் சொல் நோக்கு உடைய எனினும், வழக்கினோடு பொருந்த ஒன்றனோடு ஒன்றன்றி மயங்கா தென்பது கொள்க. [1]மெய்ம் மயக்கம் ஒரு மொழிக்கும் புணர்மொழிகளும் பொதுவாகலின், மேற்கூறும் புணர் மொழிச் செய்கையெல்லாம் தலையாய அறிவினோரை நோக்க ஒருவாற்றாற் கூறிய வாறாயிற்று.

### நச்சினார்க்கினியர்

இது தனிமெய் பிறமெய்யோடு மயங்கும் மயக்கம் உணர்த்துகின்றது.

(இ-ள்) மொழியிடை நின்ற டறலள என்று கூறப்படும் நான்கு புள்ளிகளின் முன்னர், கசப என்று கூறப்படும் மூன்றெழுத்தும் வந்து மயங்குதற்குரிய; எ—று.

---

சு.வே. இம்மெய்ம்

எ—டு ; கட்க, கட்சி, கட்ப எனவும், கற்க, மூயற்சி, கற்ப எனவும், செல்க, வல்கி, செல்ப எனவும் கொள்க. நீள்சினை எனவும் தனிமெய் பிறமெய்யோடு மயங்கியவாள் காண்க. கட்சிறார் கற்கிறார் என்பன இருமொழிப் புணர்ச்சியாகலின் ஈண்டைக்கு ஆகா.

சுப்பிரமணிய சாஸ்திரியார்

இரண்டு மெய்கள் சேர்ந்து மொழி முதலில் வாரா என்பது ''உயிர்மெய் அல்லன மொழிமுதல் ஆகா'' (எழுத் 60)

சூத்திரத்தால் கூறப்படும் ஆதலானும் 'போன்ம்' என்ற சொல்லைப் போன்ற விடத்தன்றி வேறிடங்களில் மொழியீற்றின் கண்ணும் இருமெய்கள் சேர்ந்து வாராவலாதானும், ஈண்டு மொழி களிடையில் எம்மெய் எம்மெய்யின் பின்னர் வரும் என்பதே உணர்த்தப்பட்டது. இவ்விதிகள் தனிமொழி, தொகை மொழி, தொடர் எல்லாவற்றிற்கும் பொருந்தும் என இளம்பூரணரும், தனி மொழிக்குத்தான் என நச்சினார்க்கினியரும் கூறினர். இளம் பூரணர் கருத்தே சிறக்கும் என்பது என் கொள்கை‡. 'கட்சிறார்; கற்சிறார் என்பன இருமொழிப் புணர்ச்சியாகலின் ஈண்டைக்காகா' என்றதொடரான் இளம்பூரணரைமறுத்தநச்சினார்க்கினியர் ஈண்டு நீள்சினை' என்ற உதாரணத்தை தந்தது ஆராய்தற்பாலது.

மேற்கோள்

வடநூலார் சையோகம் (மயக்கம்) ஒரு மொழிக்கும் புணர் மொழிக்கும் கொள்வர். அதுபற்றித் தொல்காப்பியர் சூத்திரம் செய்தபடி இளம்பூரணரும் நன்னூலாரும் அவ்வாறு கொள்வர். அக்கருத்தறியாத நச்சினார்க்கினியர் இருமொழியிற் கொள்ளாது. உதராணம் இறந்த என்ப'' (பிரயோக விவேகம்—சந்.5)

24. அவற்றுள்

ல்ளஃகான் முன்னர் யாவும் [1]தோன்றும்

இளம்பூரணர்

இதுவும் அது

---

‡இக் கருத்துபற்றி நூற்பா 25-ல் விரிவாகக் காண்க.

சு. வே. 1. மயங்கும்

(இ-ள்) அவற்றுள்—மேற்கூறிய நான்கனுள்ளும், லளஃகான் முன்னர்—லகார ளகாரங்களின் முன்னர், யவவும் தோன்றும்—கசபக்களே யன்றி யகர வகரங்களும் தோன்றி மயங்கும்.

எ-டு கொல்யானை, வெள்யானை, கோல்வளை, வெள் வளை எனவரும்.

நச்சினார்க்கினியர்

இதுவும் அது.

(இ-ள்) முற்கூறிய நான்கனுள், லகார ளகாரமாகிய புள்ளி களின் முன்னர், க ச பக்களேயன்றி யகர வகரங்களும் வந்து மயங்கும்; எ—று.

கொல்யானை, செல்வம், வெள்யாறு, கள்வம் என வரும்.

'இவற்றுட் கொல்யானையென வினைத் தொகையும் வெள் யாறு எனப் பண்புத் தொகையும் நிலைமொழி வருமொழி செய்வ தற்கு இயையாமையின் மருவின் பாத்திய என்று கூறுவராதலின் இவ்வாசிரியர் இவற்றை ஒருமொழியாகக் கொள்வர் என்றுணர்க. இக்கருத்தானே மேலும் வினைத் தொகையும் பண்புத் தொகையும் ஒருமொழியாகக் கொண்டு உதாரணம் காட்டுதும். அன்றி இவ்வாசிரியர் நூல் செய்கின்ற காலத்து வினைத் தொகைக் கண்ணும் பண்புத் தொகைக்கண்ணும் அன்றி ஒரு மொழிக் கண்ணே மயங்குவனவும் உளவாதலின், அவற்றைக் கண்டு இலக்கணங் கூறினார். அவை பின்னர் இறந்தன வென்று ஒழித்து உதாரணம் இல்லனவற்றிற்கு உதாரணங் காட்டாமல் போதலே நன்றென்று கூறலும் ஒன்று.

சுப்பிரமணிய சாஸ்திரியார்

தனிமொழியில் இச்சூத்திரத்திற்கு உதாரணங் காட்ட இயை யாமையின் நச்சினார்க்கினியரும் 'கொல்யானை' என்றதனை உதாரணமாகக் கூறி, அது பிரிவில் ஒட்டாகும் என்ற சேனா வரையர் கூற்றைத் தழுவி, அதனை ஒருமொழியாகக் கொள்வர் ஆசிரியர் எனக் கூறினர்.

1. மகாலிங்கய்யர் பதிப்பு: இவற்றுள் வினைத் தொகையும் பண்புத் தொகையும்...கூறலும் ஒன்றும்.

தாமோதரம் பிள்ளை பதிப்பு: இவற்றுட் கொல்யானை என வினைத்தொகையும் வெள்யாறு எனப் பண்புத் தொகையும்... கூறலும் ஒன்று'

'முன்னர் உள்ள பாடமே சிறக்கும். ஈண்டு ஒன்று கவனிக்கத் தக்கது—"இவ்வாசிரியர் ஒரு மொழியாகக் கொள்வர்" என்ற

விடத்து ஒருமொழி என்றதற்குப் பிரிவில் ஒட்டு எனப் பொருளா யின், அஃது "வினையின் தொகுதி காலத்தியலும்" (தொல். சொல். 415) என்ற சூத்திரத்தின்கண் உள்ள அவர் உரையோடு பொருந்தாது. ஆகலின் "இவற்றுள்...ஒன்றும்" என்றது இடைச் செருகலாகக் கொள்ளல் வேண்டும். 'ஒரு மொழி' என்றதற்கு, 'ஒரு சொல் நடைத்தாகிய மொழி' எனப் பொருள் கொள்ளின் முற் சூத்திரத்திலுள்ள 'கட்சிறார்...ஈண்டைக்காகா' என்றது இடைச் செருகலாதல் வேண்டும்'

மேற்கோள்

"தம்பெயர் மொழியின்" என்னும் நன்னூல் (120) நூற்பாவில் மயிலைநாதர், "அவற்றுள் லளஃகான்" என்பதனுள் ளகர மெய் முன்னர் லகரம் மயங்கினவாறும், லகரம் மொழிக்கு முதலான வாறும் காண்க" என்பர்.

25. ஙஞண நமனவெனும் புள்ளி முன்னர்
தத்தம் மிசைகள் ஒத்தன நிலையே.

## இளம்பூரணர்

இதுவும் அது.

(இ-ள்) ஙஞண நமன என்னும் புள்ளி முன்னர்—ஙஞண நமன என்று சொல்லப்படும் புள்ளிகளின் முன்னர், தத்தம் மிசைகள் ஒத்தன—(நெடுங்கணக்கினுள்) தத்தமக்கு மேல் நிற்கும் எழுத் தாகிய க ச ட த ப றக்கள் பொருந்தின, நிலை—மயங்கி நிற்றற் கண்.

எ-டு: தெங்கு, மஞ்சு, வண்டு, பந்து, கம்பு, கன்று எனவரும்.

## நச்சினார்க்கினியர்

இதுவும் அது.

(இ-ள்) ஙஞண நமன என்று கூறப்படும் புள்ளிகளின் முன்னர் தமக்கினமாய் முன்னின்ற க ச ட த ப ற க்கள், பின்னிற்றற்குப் பொருந்தின மயங்கி நிற்றற்கண்; எ-று.

எ-டு : கங்கன், கஞ்சன், கண்டன், கந்தன், கம்பன், மன்றன் என வரும்.

தெங்கு, பிஞ்சு, வண்டு, பந்து, கம்பு, கன்று எனக் குற்றுகரமும் காட்டுப.

## சுப்பிரமணிய சாஸ்திரியார்

நச்சினார்க்கினியத்தில் "தெங்கு... காட்டுப" என்றுளது. ஈண்டுக் குற்றுகரம் என்றதற்குக் "குற்றியலுகரங் கொண்ட மெய்'

என்பது பொருள் போலும். இவ்வுதாரணங்களை விசேடித்துக் கூறுதலின் பயன் நன்கு விளங்கவில்லை.

## பிறகுறிப்புகள்

அடிகளாசிரியரின் பதிப்பில் காணப்படுவது:

ஞானியார் மடத்துச்சுவடியில், கீழ்க்கண்டவாறு இந்நூற்பாவிற்கு உரை காணப்படுகின்றது.

ங ஞ ண ந ம ன என்னும் ஆறெழுத்தும் தம்மிசையாகிய வல்லெழுத்தென்ற க ச ட த ப ற வென்னும் ஆறெழுத்தின் முன்னர் மயங்குதற்குரிய''

26. அவற்றுள்
ணனஃகான் முன்னர்க்
கசஞப மயவவ் வேழும் உரிய.

## இளம்பூரணர்

இதுவும் அது.

(இ-ள்) அவற்றுள்—மேற்கூறப்பட்ட மெல்லெழுத்தாறனுள், ணனஃகான் முன்னர்—ணகார னகாரங்களின் முன்னர், க ச ஞ ப மயவ ஏழும் உரிய—(டறக்களேயன்றி) க ச ஞ ப ம ய வ என்று சொல்லப்படும் ஏழும் மயங்குதற்கு உரிய.

எ-டு: வெண்கலம், புன்கண், வெண்சாந்து, [1]புன்செய், வெண்ஞாண், பொன்ஞாண், வெண்பலி, பொன் பெரிது, வெண்மாலை பொன்மாலை, மண்யாது, பொன்யாது, மண்வலிது, பொன்வலிது எனவரும்.

## நச்சினார்க்கினியர்

இதுவும் அது.

(இள்) மேற்கூறிய மேல்லொற்று ஆறனுள் ணகார னகாரங்களின் முன்னர், டறக்களே யன்றிக் கசஞபமயவ என்னும் ஏழ் எழுத்தும் வந்து மயங்குதற்கு உரிய; எ-று.

எ-டு: எண்கு, வெண்சாந்து, வெண்ஞாண், பண்பு, வெண்மை மண்யாது, எண்வட்டு எனவும், புன்கு, புன்செய், மென்ஞாண், அன்பு, வன்மை, இன்யாழ், புன்வரகு எனவும் வரும். எண்வட்டு வினைத் தொகை. எண்கு புன்கு பெயர்.

---

க.வே: 1. பொன்செய்

## பிறகுறிப்புகள்

மேற்கோள்:

வடநூலார் இரண்டெழுத்திற்கு ஒரு காரப் பிரத்தியயங் கொடுத்துத் தலகாரம் என்றாற்போல, ''ஙனஃகான் முன்னர்,'' ''லளஃகான் முன்னர்'' என்பர் தொல்காப்பியர். (பிரயோக—திங்-16-உரை)

27. ஞநமவ வென்னும் புள்ளி முன்னர்
யஃகான் நிற்றல் மெய்பெற் றன்றே

## இளம்பூரணர்

இதுவும் அது.

(இ.ள்.) ஞநமவ என்னும் புள்ளி முன்னர்—ஞநமவ என்று சொல்லப்படுகின்ற புள்ளிகளின் முன்னர், யஃகான் நிற்றல் மெய் பெற்றன்று—யகரம் மயங்கி நிற்றல் பொருண்மை பெற்றது.

எ-டு: உரிஞ்யாது, பொருந்யாது, திரும்யாது, தெவ்யாது என வரும்.

## நச்சினார்க்கினியர்

இதுவும் அது.

(இ-ள்) ஞநமவ என்று கூறப்படும் புள்ளிகளின் முன்னர் யஃகான் நிற்றல் பொருண்மை பெற்றது; எ.று.

இங்ஙனம் ஆசிரியர் சூத்திரம் செய்தலின், அக்காலத்து ஒரு மொழியாக வழங்கிய சொற்கள் உளவென்பது பெற்றாம். அவை இக்காலத்து இறந்தன.

இனி உரையாசிரியர் உரிஞ்யாது, பொருந்யாது, திரும்யாது, தெவ்யாது என இரு மொழிக்கண் வருவன உதாரணமாகக் காட்டினாரால் எனின், ஆசிரியர் ஒருமொழியாமாறு ஈண்டுக்கூறி, இரு மொழி புணர்த்தற்குப் புணரியல் என்று வேறோர் இயலும் கூறி. அதன்கண் ''மெய்யிறு சொன்முன் மெய்வரு வழியும்'' (எழு. 107) என்று கூறினார்; கூறியவழிப் பின்னும் ''உகரமொடு புணரும் புள்ளி யிறுதி'' (எழு.162) என்றும் பிறாண்டும் ஈறுகள்தோறும் எடுத்தோதிப் புணர்ப்பர். ஆதலின் ஈண்டு இருமொழிப் புணர்ச்சி. காட்டிற் கூறியது கூறல் என்னுங் குற்றமாம். அதனால் அவ்வ காட்டுதல் பொருந்தாமை யுணர்க.

வேங்கடராசுலு ரெட்டியார்

*இனி மெய்ம்மயக்கம் கொள்ளுதல் ஒருமொழிக்கண்ணோ இருமொழிக்கண்ணோ என்று ஆராய்தும்: உரையாசிரியர் ஒருமொழி இருமொழி இரண்டிலும் கொண்டார். நச்சினார்க்கினியர் ஒருமொழிக்கண்ணே கோடல் வேண்டும் என்று கொண்டு ''ஆசிரியர் ஒருமொழியாமாறு...... கூறியது கூறல் என்னுங் குற்றமாம்'' என்று உரையாசிரியர் உரையை மறுத்துக்கூறினார். ஆயின் ஆசிரியர், ஈண்டுப் புணர்ச்சி யிலக்கணத்தையாதல் ஒருமொழிக்காய இலக்கணத்தை யாதல் கூறுகின்றாரல்லர்; புணர்ச்சி யிலக்கணத்தை முன்னர், புணரியல் முதலிய ஆறு இயல்களிற் கூறுகின்றார்; தனிமொழியிலக்கணத்தை மொழி மரபிற் கூறுகின்றார். இம்மெய்ம்மயக்கம் ஒருமொழிக்கட்கொள்ள வேண்டுவதோர் இலக்கணமாயின், தனிமொழியினைப் பற்றிக்கூறும் மொழி மரபிற் கூறுவார்; மொழியின் முதலில் நிற்கும்எழுத்துக்கள், மொழியின் இறுதியில் நிற்கும் எழுத்துக்கள் இவற்றைக்கூறுமிடத்தன்றே மொழியின் இடையில் நிற்கும் மெய்ம்மயக்கத்தைக் கூறுதல் வேண்டும். ஆண்டுக் கூறாது ஈண்டுக் கூறியவதனான், இம்மெய்ம்மயக்கம் ஒருமொழிக்கட் கொள்ளவேண்டுவதன்று என்பதே ஆசிரியர் கருத்தாகும். இவ்வியல் எழுத்துக்களின் இயல்பினைக் கூறுவதாகலின், ஈண்டுக் கூறியது இன்ன மெய்யெழுத்தினோடு இன்ன மெய்யெழுத்து மயங்கும் என்று அவற்றின் இயல்பினைக் கூறிய அத்துணையேயாகும். இதனை 'இடைநிலை மயக்கம்' என்று கூறுவது தக்கதன்று; மெய்மயக்கம் என்றலே தகும். மேல், 'தொகை மரபு' முதல்'புள்ளிமயங்கியல்'காறும் உள்ள இயல்களிற் கூறும்விதி, அவ்வழி வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண் உண்டாகுந் திரிபிற்கும் (திரியாதுநிற்கும்) இயல்பிற்கும் ஆதலின், அவற்றோடிவற்றிடை வேற்றுமையுண்டு. அதனானன்றே, புன்கால் பல்குதல் முதலிய சொற்களில் ககரத்தொடு மயங்கிநிற்கும் னகரலகர மெய்கள் பொற்குடம், பாற்குடம் என்னுமிடங்களில் திரிபவாயின. சங்கர நமச்சிவாயப் புலவரும் இம்மெய்ம் மயக்கத்தைத் தனிமொழிக்கண்ணே கொண்டவர் கொள்கையை மறுத்துக் கூறியுள்ளார்.

---

*இவ்வாராய்ச்சி ''அம்மூவாறும்'' (22) என்ற நூற்பாவில் எழுதப்பட்டது. ரெட்டியார் 23–27 நூற்பாக்களுக்கு ஆய்வுரை எழுதியவர் ஆதலின் இது இந்நூற்பாவில் பொருத்தம் கருதி அமைக்கப்பட்டது.

ஆசிரியர் நச்சினார்க்கினியர் கூறும் பொருள்கொள்ளுதலாயின், "ஞ ந ம வ என்னும்...பெற்றன்றே" என்னும் சூத்திரத்திற்கு, தாந்யம் காம்யம், காவ்யம் என்னும் வடசொற்களிற் போன்று, ந், ம், வ் இம்மெய்யெழுத்துக்களோடு யகரம் இணைந்து வந்துள்ள தமிழ்ச் சொற்கள் உதாரணம் ஆதல் வேண்டும். தனி ஞகர மெய் யொடு யகரம் இணைந்து வருஞ் சொல் வடமொழியிலும் அரிதா கின்றது. ஆதலின் ஞ் ந் ம் வ் இம்மெய்யெழுத்தோடு யகரம் இணைந்து தமிழில் தனிச் சொற்கள் வரும் என்று கோடல் அமைவுடையதாதல் இல்லை. ஆயின் நச்சினார்க்கினியரும், "இங்ஙனம் ஆசிரியர் சூத்திரம் செய்தலின் அக்காலத்து ஒரு மொழியாக வழங்கிய சொற்கள் உள என்பது பெற்றாம்; அவை இக்காலத்து இறந்தன" என்றே கூறினாராகலின், ஆசிரியர் காலத்தில் வழங்கின என்றும், பிற்காலத்தில் வீழ்ந்தன என்றும் கொள்ளலாகாதோ எனின், நூலுள் யாண்டேனும் ஒரு சொல் லாதல் அவ்வாறு வந்திலாததனானும், தொன்மையவாகிய வழக்குகள் பயின்று காணும் பழங் கன்னடத்தினும் இம்முறையின் அமைந்த சொற்கள் காணப்படாமையானும், அங்கனம் கோடற்கு இடனின்று. மெய்ம்மயக்கத்தை ஒருமொழிக்கண்ணே கொள்ளுதல் வேண்டும் என்று கருதியதனானே நச்சினார்க்கினியர்க்கு இவ்வாறு கூறல் வேண்டுவதாயிற்று.

வினைத்தொகை பண்புத்தொகைகளைத் தொல்காப்பியனார் ஒருமொழிகளாகக் கொள்வர் என்று கூறி, நச்சினார்க்கினியர் அவற்றை ஒருமொழிகளாகக் கொண்டு உதாரணம் காட்டினார். சங்கரநமச்சிவாயர், 'வினைத்தொகை பண்புத்தொகை அன் மொழித்தொகை யென்னும் அவ்வழிப் புணர்ச்சியவாய தொகை நிலைத் தொடர்மொழிகளை ஒருமொழிகள் என்பாரும் உளர்; அவர் கூற்றுத் "தாய் மலடி" என்றாற் போலும் என்று கூறி மறுத்திருத்தல் அமைதியாகத் தோன்றவில்லை. என்னை யெனின், தொகைச் சொற்களை ஒரு சொல்லாகக் கோடலும் கூடும். "எல்லாத் தொகையும் ஒரு சொல் நடைய" (சொல். எச். 24) என்று ஆசிரியர் கூறியுள்ளாராகலின், நன்னூலாரும், "ஒரு மொழி போல் நடப்பன தொகை நிலைத் தொடர்ச்சொல்" என்றே கூறினர்.

இவற்றால் தொகைகள் எல்லாம் ஒரு சொல் அல்ல வாயினும், ஒரு சொன்னீர்மைய என்பது நூலாசிரியர்களின் கொள் கை என்பது தெளிவாகும். ஆகவே, வேற்றுமைத் தொகை முதலாக

வுள்ள எல்லாத் தொகைகளையும் ஒரு சொல் என்றே கொள்ளுதலும் அமையும். பாற்குடம் என்றக்கால், பாலையும் குடத்தையும் தனித்தனி உணர்த்தாது, பாலின் தொடர்புடையதொரு குடத்தையே யுணர்த்தும். இத்தொகையில் இரண்டு பொருள்களை உணர்த்தக்கூடிய இரண்டு சொற்கள் இருந்தும் வெவ்வேறாக இரண்டு பொருள்களை யுணர்த்தாமல், இரண்டு பொருளும் (பால், குடம்) கூடியுள்ளதொரு பொருளையே யுணர்த்தின வாகலின், இவை இரண்டு சொல்லாகக் கொள்ளப்படா. இவ்வாறே, வாழைப் பழம் என்னும் இரண்டு சொற்களும் தனித்தனியே வாழையையும் பழத்தையும் உணர்த்தாமல், வாழைப் பழமாகியதொரு பொருளையே உணர்த்துகின்றது. 'பொற்றொடி வந்தாள்' என்னுந் தொடரிலும், பொன் தொடி என்னும் இரண்டு சொற்களும், தனித் தனியே பொன்னையும் தொடியையும் உணர்த்தாமல், பொன்னானாய தொடியையும் உணர்த்தாமல், அதனை யுடையாளையே உணர்த்துதலும் அறியத்தகும் இவற்றால் தொகைச் சொற்களெல்லாம் ஒரு சொல் நீர்மைய என்பது நன்கு புலனாகும். சேனாவரையரும், 'ஒட்டி ஒரு சொல்லாதல் தொகை யிலக்கணமாய் முடிதலின் இவ்வாசிரியர்க்கு இதுவே துணிவு எனப்படும் என்பது' என்று கூறியுள்ளார். (தொல். எச்ச. 16)* வடநூலார் தொகைச் சொல்லை ஒரு சொல்லாகக் கொள்ளுதல் வேண்டும் என்பர். தொகை என்னும் பொருளதாகிய ஸமாஸம் என்பது—ஸம்க்ஷேபம். ஸம்க்ஷேபமாவது—ஒருமைப்பட வைத்தல். இவற்றால், தொகைச் சொல்லை ஒரு சொல் என்று கோடலும் அமையுமாகலின், உரையாசிரியர் முதலியோர் கொள்கை அமைவுடையதாதலும், அதனைச் சங்கரநமச்சிவாயர் மறுத்து இழித்துக் கூறினது தக்க தன்றாதலும் அறியப்படும்.

### சுப்பிரமணிய சாஸ்திரியார்

நச்சினார்க்கினியர், "இங்ஙனம் ஆசிரியர்...பொருந்தாமை யுணர்க" என இளம்பூரணரை மறுத்தனர். புணர்ச்சியைப் பற்றிச் சிறப்பாய்ப் புணர்ச்சி கூறும் இயல்களிலும், மெய்ம் மயக்கத்தை ஈண்டும் ஆசிரியர் கூறினர் எனின், கூறியது கூறல் என்னுங் குற்றமாகுமா?

---

* பரஸ்பராபேக்ஷாணாம் பூர்வோத்ர பதாநாம் ஸுபந்தாநாம் கதஞ்சி தைகபத்யம் ஸமாஸ:. பீரகடாயந வ்யாகரணம். ப்ரக்ரியா ஸங்க்ரஹகம். பக். 82

ஸமஸநம் = ஸம்க்ஷிபணம் = ஏகத்வேக ந்யாஸநம் ஸமாஸ:

28. மஃகான் புள்ளிமுன் வவ்வுந் தோன்றும்.

**இளம்பூரணர்**

இதுவும் அது.

(இ-ள்) மஃகான் புள்ளி முன் — மகரமாகிய புள்ளி முன்னர், வ உம் தோன்றும்—(பகர யகரங்களேயன்றி) வகரமும் தோன்றி மயங்கும்.

எ-டு: நிலம் வலிது எனவரும்.

**நச்சினார்க்கினியர்**

இதுவும் அது.

(இ-ள்) முற்கூறியவற்றுள் மகரமாகிய புள்ளி முன்னர், பகர யகரமே யன்றி வகரமும் வந்து மயங்கும்; எ-று.

இதற்கும் உதாரணம் இக்காலத்து இறந்தன. அன்றி, வரும் வண்ணக்கன் என்றாற் போல்வன காட்டின், வகார மிசையும் மகாரங் குறுகும்" (எழு. 330) என்ற விதி வேண்டாவாம்.

**வேங்கடராசுலு ரெட்டியார்**

மேற்சூத்திரத்தில் கூறப்பட்டவற்றுள் சிலவற்றிற்காதல் ஒன்றற்காதல் சிறப்புவிதி கூறுமிடங்களில் 'அவற்றுள்' என்று தனிச் சொல்லை நிறுத்துதல் இவ்வாசிரியர்க்கு இயல்பு. அதனை இந்நூலுள் யாண்டுங் காணலாகும்; இவ்வியலில் 24, 26 ஆம் சூத்திரங்களை நோக்கினும் அவ்வுண்மை புலனாகும். ஆகலின் ஈண்டும் 'அவற்றுள்' என்று ஒரு சொல் இருத்தல் வேண்டும். ஆசிரியர் இந்நியதி தவறாது கூறுதல் வலியுற்றிருத்தலின், ஈண்டும், 'அவற்றுள்' என்று கூறியிருப்பார் என்றும், எழுதுவோர் சோர்வினானோ பிறவாற்றானோ அது விடுபட்டிருக்கலாம் என்றும் ஊகிக்க வேண்டுவதாயுள்ளது.

29. யரழ வென்னும் புள்ளி முன்னர்
முதலா கெழுத்து ஙகரமொடு தோன்றும்.

**இளம்பூரணர்**

இதுவும் அது.

(இ-ள்) யரழ என்னும் புள்ளி முன்னர்—யரழ என்று சொல்லப் படுகின்ற புள்ளிகளின் முன்னர், முதல் ஆகு எழுத்து ஙகரமொடு

தோன்றும்-மொழிக்கு முதல் ஆம் என்னப்பட்ட ஒன்பது மெய்யும் [1](முதலாகா) ஙகரத்தோடு தோன்றி மயங்கும்.

எ-டு: வேய்கடிது, வேர்கடிது, வீழ்கடிது, சிறிது, தீது, பெரிது; ஞான்றது, நீண்டது, மாண்டது, யாது, வலிது எனவரும். வேய்ஙனம், வேர்ஙனம், வீழ்ஙனம் எனவும் ஒட்டுக. வேய்யாது என்புழி உடனிலை யாதலான் யகரம் ஒழித்து ஒட்டுக.

**நச்சினார்க்கினியர்**

இதுவும் அது.

(இ-ள்) யரழ என்று கூறப்படும் மூன்று புள்ளிகளின் முன்ன, மொழிக்கு முதலாமென மேற் கூறும் ஒன்பதெழுத்துக்களும், உம்மையான் மொழிக்கு முதலாகாத பிற எழுத்துக்களும் ஙகாரமும் வந்து மயங்கும்; எ-று.

எ-டு: ஆய்க ஆழ்க ஆர்க, ஆய்தல் ஆர்தல் ஆழ்தல், ஆய்நர் ஆர்நர் ஆழ்நர், ஆய்பவை ஆர்பவை ஆழ்பவை, வாய்மை நேர்மை கீழ்மை, எய்சிலை [2]வார்சிலை வாழ்சேரி, தெய்வம் சேர்வது வாழ்வது, பாய்ஞெகிழி நேர்ஞெகிழி வாழ்ஞெண்டு, [2]செய்யாறு போர்யானை வீழ்யானை என மொழிக்கு முதலாம் ஒன்பதும் வந்து மயங்கின. [3]செய்யாறு என யகரத்தின் முன்னர் யகரம் வந்தது தன்முன்னர்த்தான் வந்ததாம்.

இனி உம்மையாற் கொண்ட மொழிக்கு முதலாகாதவற்றின் கண்ணும் சில காட்டுதும்: ஓய்வு சோர்வு வாழ்வு, ஓய்வோர் சோர்வோர் வாழ்வோர், ஆய்ஞர் சேர்ஞர் ஆழ்ஞர் என வரும். பிற எழுத்துக்களோடு வருவன வுளவேனும் வழக்கும் செய்யுளும் நோக்கிக் கூறிக்கொள்க.

இனி வேய்ங்ஙனம் வேர்ங்ஙனம் வேழ்ங்ஙனம் என மொழிக்கு முதலாகாத ஙகரம் இடை வந்த சொற்கள் அக்காலத்து வழங்கின என்று உணர்க, ஆசிரியர் ஓதுதலின். இதனை 'ஙகரமொடு தோன்றும்' எனப் பிரித் தோதினார் அக்காலத்தும் அரிதாக வழங்கலின்.

---

சு.வே: 1. முதலா ஙகரமொடு

2. போர்செய்

3. தாமோதரம்பிள்ளை பதிப்பில் செய்யாறு இல்லை.

இனி வேய்கடிது வேர்கடிது வீழ்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது யாது வலிது என்பன காட்டின் அவை இரு மொழியாக நிலைமொழி வருமொழி செய்து மேற் புணர்க்கின்றன ஈண்டைக்காகா என மறுக்க.

## வேங்கடராசுலு ரெட்டியார்

ஈண்டு யரழக்களுக்கு முன் ஙகரம் வருதற்கு, வேய்ஙனம், வேர்ஙனம், வீழ்ஙனம் என்பவற்றை உதாரணமாகக் காட்டினார் இளம்பூரணர். வேய்ஙனம் முதலிய சொற்களில் 'ஙனம்' என் பதன் பொருள் யாது? ஙகரம் மொழி முதலில் வருவதன்றாகலின் 'வேய்ஙனம்' என்பதனை வேய்+ஙனம் என்று பிரிந்து, ஙனம் என்பதற்குத் தன்மை என்று பொருள் கூறுதல் அமையாதன்றே?

'யரழ முன்னர் மொழி முதல் மெய்வரும்' என்னும் நன்னூற் சூத்திரத்திற்குச் சங்கர நமச்சிவாயர் காட்டிய வேய்ங்குழல் ஆர்ங் கோடு பாழ்ங்கிணறு என்பன ஈண்டைக்கு உதாரணமாதல் அமையும். இவை, ஈரொற்றுடனிலை யாதலின் அமையா எனின், யரழக்களுக்கு முன் ஙகரம் நிற்குமத்துணையே ஈண்டுக் கொள்ளுதல் வேண்டும் என்க. இனி, ஈரொற்றுடனிலைக்குக் கூறிய,

யரழ வென்னும் மூன்றும் ஒற்றக்
கசதப ஙஞநம ஈரொற் றாகும். (மொழி—15).

என்னும் சூத்திரம் மொழிமரபின் கண்ணதாதலின், தனிமொழியுள் அவ்வாறமைந்திருப்பனவே எடுத்துக்காட்டாதலேயன்றி, வேய்ங் குழல் முதலியன ஆண்டைக் காகாமை யானும், யரழக்களுக்கு முன் ஙகரம் மயங்கும் என்றற்கு இச்சூத்திரமே விதியாகலானும் வேய்ங்குழல் முதலியன ஈண்டைக்கு உதாரணமாகும்.

ஆயின், யரழக்களுக்கு முன்னர் மயங்கும் முதலாகெழுத்துக் களெல்லாம் உயிர்மெய்யாய் வருதலின், ஙகரமும் உயிர்மெய்யாய் வருதலைக் காட்டலே அமைதி எனின், அஃதொக்குமாயினும் ஆசிரியர் 'ஙகரமொடு தோன்றும்' என ஙகரத்தைப் பிரித்தோதுத லான் ஙகரம் ஏனையவற்றைப் போல் வருவதன்று; வேறுபாடு டையது என்பது உணர்த்தினராகலானும், "அம்மூவாறும்

வழங்கியல் மருங்கின்'' என்ற சூத்திரத்தால் மெய்யொடு மெய் மயங்குதலையே கூறுகின்றாராகலானும், அதுபற்றியே மெய் யொடு உயிர்மெய் மயங்கிய சொற்களைக் காட்டினாலும் மெய் யொடு மெய் மயங்கி வந்ததாகக் கொள்ளப்படுகின்ற தாகலானும், யரழக்களின் முன்னர் ஙகரம் மெய்யாய் மயங்குதல் அமையும் என்க. அன்றியும், ஆசிரியர் 'சுருங்கச் சொல்லல்' என்பது பற்றி ''யரழ என்னும்......தோன்றும்'' என்றாராயினும், யகரத்தொடு யகரம் மயங்குதல் உடனிலை மயக்கமாதலின், அது முன்னர் 'மெய்நிலை சுட்டின்' என்னும் சூத்திர விழி பெறுமாதல் பற்றி அதனை ஈண்டு ஒழித்தாங்கு, ஙகரம் உயிர்மெய்யாக மயங்குதல் இன்மையின் அதனை விடுத்து, தனி மெய்யாக மயங்குதலைக் கோடல் அமைதியாகும்.

ஆசிரியர் நச்சினார்க்கினியர், இந்நூல்மரபிற் கூறும் மெய்ம் மயக்கமெல்லாம் தனிமொழிக் கண்ணே கோடல் வேண்டும் என்று கொண்டாராகலின், '*வேய்ங்ஙனம் வேர்ங்ஙனம் வீழ்ங்ஙனம் என மொழிக்கு முதலாகாத ஙகரம் இடைவந்த சொற்கள் அக்காலத்து வழங்கின என்றுணர்க, ஆசிரியர் ஓதுதலின்' என்றார். ஈண்டுக் கூறும் மெய்மயக்கம் இன்ன மெய்முன் இன்னமெய் மயங்கும் என்னுந் துணையே யாதல் மேற் கூறப்பட்டதாகலின், தனி மொழிக்கண்ணே வரும் என்று கொண்டு நச்சினார்க்கினியர் கூறியது அமைவுடைத்தன்றென அறியலாகும்.

ஆசிரியர் தொல்காப்பியனார் நூல்மரபில் பெரும்பாலும் தனி நிற்கும் எழுத்துக்களின் இலக்கணமும், மொழிமரபில் தனி மொழியில் வைத்து அறியப்படும் எழுத்துக்களின் இலக்கணமும் வேறு பிரித்தோதியுள்ளார். அதனைக் கணியாது நன்னூலார் எழுத்தின் இலக்கணங்களையெல்லாம் ஓரியலிற் கூறினதனான் 'யரழ என்னும் மூன்றும் ஒற்ற கசதப ஙஞநம ஈரொற்றாகும்'' என்னும் மொழிமரபின் சூத்திரக் கருத்தினையும், ''யரழ முன்னர்க் கசதப ஙஞநம ஈரொற்றாகும்'' என்று, ஏனை மெய் மயக்கத்தொடு ஒருங்கோதினார். அதனால் பிற்காலத்தவர், தொல்காப்பியத்தில் மேலை இரண்டு சூத்திரங்களின் வேறுபாடு அறியாது மயங்குவாராயினர். ''யரழ முன்னர் மொழி முதல் மெய்வரும்,'' ''யரழ வொற்றின் முன் கசதப ஙஞநம ஈரொற்

* மழவை மகாலிங்கய்யர் பதிப்பில் வேய்ஙனம் என்றுளது. ஙகரம் இரட்டித்திலது.

றாகும்'' என்னும் இவ்விரண்டு நன்னூற் சூத்திரங்களின் உரையிலும், வேய்ங்குழல் ஆர்ங்கோடு பாழ்ங்கிணறு என்பனவற்றையே சங்கரநமச்சிவாயரும் உதாரணங் காட்டினாராயின், பிறர் மயங்குதல் கூற வேண்டாவன்றே.

தனிநின்ற எழுத்தின் இலக்கணமே கூறுகின்ற இவ்வியலில், இருமொழிப் புணர்வுக் கண்ணும் அறியப்படும் மெய்மயக்கத்தைக் கூறியது என்னையெனின், மொழிமரபிற் கூறின் இது தனிமொழிக் கண்ணே கொள்ள வேண்டும் என்பது போதருமாகலின், இவ்வியலின் இறுதியில் வைத்தார் என்க.

## சுப்பிரமணிய சாஸ்திரியார்

நச்சினார்க்கினியர் 'எழுத்து' என்றதற்கு 'உயிர்மெய்' எனப் பொருள் கொண்டனர் என்பது, ''உம்மையான் மொழிக்கு முதலாகாத பிறஎழுத்துக்களும்'' என்ற தொடராலும் அதற்கு அவர் கூறும் உதாரணங்களாலும் விளங்கும். ஆதலினன்றே, 'முதலாகெழுத்தும்' என அவர் பிரித்து உம்மைக்குப் பொருள் கூறினர்? "உயிர்மெய் யல்லன மொழி முதலாகா" (எழுத்.60) என்ற சூத்திரத்தை மனத்துட் கொண்டு நச்சினார்க்கினியர் அவ்வாறு கூறினும்,

''கதந பமவெனு மாவைந் தெழுத்தும்" (எழு.61)

''வ என் எழுத்தொடு வருதல் இல்லை." (எழுத்.63) என்ற

சூத்திரங்களிலுள்ள எழுத்து என்ற சொல் மெய்யினையே குறிக்கின்றமையின், இளம்பூரணர் கொள்கையே சிறக்கும்.

## மேற்கோள்

சிவஞான முனிவர்: ஙனம் என்னும் பலபொருள் ஒரு சொல் தனித்து வருதலின்றி யரழக்களின் வழி சார்ந்துவரும் ஆதலின், அக்கருத்தானே ஆசிரியர் தொல்காப்பியனுர் முதலாகெழுத்து ஙகரமொடு தோன்றும்'' என்றார். (இல-விள-சூறா-எழு.27)

## தனிமெய் தனிமெய்யோடு மயங்குமாறு

30. மெய்ந்நிலை சுட்டின் எல்லா வெழுத்தும்
தம்முன் தாம்வரூஉம் ரழவலங் கடையே

## இளம்பூரணர்

இது, நிறுத்தமுறையானே உடனிலை மயக்கமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) மெய்ந்நிலை சுட்டின்— பொருள்நிலைமைக் கருத்தின்கண், எல்லா எழுத்தும் தம் முன் தாம் வரும்— எல்லா மெய்யெழுத்தும் தம் முன்னே தாம் வந்து மயங்கும், ரழ அலங்கடை— ரகார ழகாரங்கள் அல்லாத இடத்து.

எ-டு: காக்கை, எங்ஙனம், பச்சை, மஞ்ஞை, பட்டை, மண்ணை, தத்தை,[1] வெந்நோய், அப்பை, அம்மி, வெய்யர், எல்லி எவ்வி, கொள்ளி, கொற்றி, கன்னி எனவரும். 'மெய்ந்நிலை சுட்டின்' என்றதனான் 'தம் முன் தாம் வரும்' என்றது, மெய்ம் முன்னர் மெய் என்னும் மாத்திரையன்றி, உடனிலை மெய் மேல தாம் என்பது கொள்க. எல்லாம் என்றது, மேல்[2] யரழ என்ற அதிகாரம்[3] மாற்றி வந்து நின்றது.

## நச்சினார்க்கினியர்

இது நிறுத்த முறையானே தனிமெய் தன் ஒற்றோடு மயங்குமாறு கூறுகின்றது.

(இ-ள்) பொருள் நிலைமையைக் கருதின், பதினெட்டு மெய்யும், தம் முன்னே தாம் வந்து மயங்கும், ரகார ழகாரங்கள் அல்லாத இடத்து; எ.று.

எ-டு: காக்கை, எங்ஙனம், பச்சை, மஞ்ஞை, பட்டை, மண்ணை, தத்தை, வெந்நோய், அப்பு, அம்மை, வெய்யர், எல்லி, எவ்வி, கள்ளி, கொற்றி, கன்னி எனவரும்.

'மெய்ந்நிலை சுட்டின்' என்றதனால் தனிமெய் முன்னர் உயிர் மெய் வரும் என்று கொள்க. 'எல்லாம்' என்றது ரகார ழகாரங்கள் ஒழிந்தனவற்றைத் தழுவிற்று.

## வேங்கடராசுலு ரெட்டியார்

ரகார ழகாரங்கள் இரண்டும் ஓரிடத்திற் பிறப்பன ஆகலானும், ஆண்டு ஒரு மாத்திரை நேரம் நுனிநா வருடும் முயற்சி செய்யின், அதனாற் பிறக்கும் ஒலி (ஒலியாதலின்றி) ஓசையாய் விடுதலானும், அவை இரண்டும் தம்முன் தாம் நிற்றல் அமையாமையின், 'ரழவலங் கடையே' யென்றார். ரகர ழகரங்கள் மொழி முதற்கண் வாராமையின் இருமொழிக்கண்ணும் அவை நிற்றலின்மை கூறாமலே

---

சு.வே: 1 வெந்நெய்
2 ரழ
3 மாற்றி நின்றது.

விளங்கும். கன்னட மொழியில், ரகரம் மொழி முதல் உளதாயினும் அது ரகவீற்றின் முன் நிற்பின், சுருதி கஷ்டம் வருமென்றும், அவ்வொலி 'கரடெ' 'கிர்கடம்' என்னும் வாத்தியங்களின் ஓசை போன்று அமைதியாய் இராது என்றும் இலக்கண நூலார் விலக்கியுள்ளனர்.[1] இவ்வாற்றான் ரழக்கள் தம்மொடு தாம் மயங்குதல் இன்மையின் அவை ஒற்றளபெடைகளுள் ஒழிக்கப்பட்டன. அஃதேல் ஒற்றளபெடையில் வல்லெழுத்துக்கள் ஆறும் கொள்ளப்படாததன் காரணம் என்னையோவெனின், அவை, உண்ணின்றெழுந்த வளியை நாவினால் தடுத்து வெளிவிடுதலாற் பிறப்பனவாகலின், அவற்றை ஒலிக்கையில் ஒரு மாத்திரை நேரம் வளியைத் தடுத்து வெளிவிட்டால் அஃது ஒலியாகாமையின், அவை இரட்டித்து வருதல் அமையாது என்று விலக்கப்பட்டன. இவற்றால் ஆய்தம் அளபெடுத்தலும் சொற்கண் அமையாதாகும்.

இனி, ஙகரம் உடனிற்றற்கு, உரையாசிரியரும் நச்சினார்க்கினியரும் 'எங்ஙனம்' என்பதனை உதாரணம் காட்டினர். அஃது ஒரு சொல் அன்மையானும், ஙகரம் மொழிமுதற்கண் வருவதன்றாகலின், எ+ஙனம் என்று பிரித்து இரு சொல்லாகக் கோடல் அமையாமையானும், இரு சொல்லாயின் ஙகரம் மொழிமுதல் வந்ததாகும் ஆகலானும் அது பொருந்தாது. ஆயின், வேய்ஙனம், வேர்ஙனம், வீழ்ஙனம் என்றும், அங்ஙனம் இங்ஙனம் உங்ஙனம் யாங்ஙனம் எங்ஙனம் என்றும் யரழக்களின் முன்னும் சுட்டு வினாக்களின் முன்னும் ஙகரம் ஒன்று மட்டுமே மொழிமுதலாகி வருதலின், ஆசிரியர் தொல்காப்பியனார் ஙகரம் மொழிமுதல் வரும் என்று கூற்றிலர் எனின், 'உரிஞ்' என்னும் ஒரே சொல்லில் மட்டுமே ஈற்றில் நிற்கும் ஞகர மெய்யையும், 'தபு' என்னும் ஒரேசொல்லில் மட்டுமே ஈற்றில் நிற்கும் புகரத்தையும் ஈற்றில் நிற்கும் என்று கூறிய ஆசிரியர், ஙனம் என்னும் ஒரு சொல்லில் மட்டுமே ஙகரம் மொழி முதல் நிற்பதாயினும் அதனைக் கூறாது விடுவரல்லர். அவர் கூறாமையான், ஙனம் என்னும் சொல், வேய் வேர் வீழ் என்னும் சொற்களின் முன்னும், சுட்டு வினாக்களுக்கு முன்னும் ஆசிரியர் காலத்தில் வழங்கிற்றின்று என்பது நன்கு அறியப்படும். நன்னூலார், ஙகரம் மொழிமுதல் வருதலை உடன்பட்டாராகலின் நன்னூலுரையாசிரியர், 'அங்ஙனம்' என்று உதாரணம் காட்டியது அமையும்.

---

1. சப்தமணி தர்ப்பணம் 78.

ஆயின், நகரம் தன் முன்தான் மயங்குதற்கு உதாரணமாவது யாதோ எனின், 'பிடியூட்டிப் பின் உண்ணுங்களிறெனவும்' என்றும், அரங்கம் என்றும் வரும் அளபெடைச் சொற்கள் அமையும் என்க. அஃதேல் இவ்வுதாரணங்களில் நகரம் இரண்டும் மெய்யெழுத்தாயிருத்தலின் அமையாதெனின், மெய்யொடு உயிர் மெய் மயங்கிய சொற்களிலும் உயிர்மெய்யைப் பிரித்து மெய்யொடு மெய் மயங்கியதாகவே கொள்ளப்படுதலானும், அவ்வாறன்றாயின் 'அங்ஙனம்' என்பதிலும் மெய்யொடு மெய்மயங்கியதாகாமையா னும், மெய்யொடு மெய்மயங்கி நிற்றலைக் கொள்ளுதல் கூடும். மெய்கள் தம்முன் தாமே மயங்கி வருதலைக் கொள்ளாக்கால் 'கண்ண் கருவிளை,' 'பொன்ன் பொறி சுணங்கு' என்னும் அள பெடைக்கண் அவை மயங்கி நிற்றற்கு விதியின்றாகுமன்றே?

இனி, தமிழ் மொழிகளுள் அவ்வாறு மயங்கியுள்ள சொல் அறி யப்படுமேல் அதனைக் கொள்ளத்தடையில்லை.

**சுப்பிரமணிய சாஸ்திரியார்**

ஈண்டு 'மெய்ந்நிலை' என்றதற்குப் 'பொருள் நிலைமை' என இளம்பூரணர் நச்சினார்க்கினியர் இருவரும் பொருள் கொண்டனர். ''மெய்ந்நிலை மயக்கம் மானமில்லை'' (எழு-47.) என்ற சூத்திரத்தின்கண் அச்சொற்கே 'மெய்ம்மயக்க நிலை' என இளம்பூரணர் பொருள் கொண்டதை நோக்கின், ஈண்டும் அப் பொருளைக் கொள்ளுதலே சிறக்கும் எனத் தோன்றுகின்றது. "மெய்ந்நிலைச் சுட்டின் என்றதனால் தம் முன் தாம் வரும் என்றது மெய்ம் முன்னர் மெய் யென்னும் மாத்திரையன்றி உடனிலை மெய்மேலதாம் என்பது கொள்க" எனக் கூறினர் இளம்பூரணர். அதிகாரத்தான் ஈண்டு எழுத்து என்றதற்கு மெய் யெழுத்தே பொருளாகலானும், 'தாம்' என்ற சொல்லான் ஒவ் வொரு மெய்யெழுத்தும் தனித்தனியே கொள்ளப் படுதலானும் அவ்வாறு அவர் கொள்ளவேண்டுவதன்று.

'மெய்ந் நிலைச் சுட்டின'' என்றதனால் தனிமெய் முன்னர் உயிர்மெய் வரும் என்று கொள்க" என்றனர் நச்சினார்க்கினியர். அவ்வாறு கூறியதற்குக் காரணம் ஒரு மெய் இருமுறை தன்னாற் றொடராது எனக் குறித்தற்கு என்னலாம். அவ்வாறுள்ள சொல் எம்மொழியிலும் காண்டற்கு எளிதன்மையானும், இலக்கியத் திற்கே இலக்கணம் வரைய வேண்டும் ஆதலானும், அவர் அவ் வாறு கூறவேண்டிய நியதியின்று எனத் தோன்றுகின்றது.

**சிவலிங்கனார்**

தொல்காப்பியர் ஙகரம் மொழிமுதலில் வரும் எனக் கூறாமையின் எங்ஙனம் என்பதை எ+ஙனம் எனப் பிரித்து இரு சொல்லாகக் கோடல் அமையாது என்றார் வேங்கடராசுலு ரெட்டியார். அவர் 'எங்ஙனம்' என்பதற்குப் பதில் 'எங்கனம்' என்ற சொல்லையே கொள்வர். அங்ஙனம், அங்கனம் எனச் சொற்கள் இருவகையிலும் நூல்களில் ஆளப்படுதலின் எது முந்தையது என்பது கொள்வதற்கில்லை. எனவே எங்ஙனம் என்ற சொல் ஆட்சியில் இருப்பதால் எ+ஙனம் எனப் பிற்காலத்தார் பிரித்தனர். தொல்காப்பியர் காலத்தில் அச்சொல் பிரிக்கப் படாத நிலையில் வழங்கியதாகலாம். புணரியல் நிலையிடை யுணரத் தோன்றாதனவாக ஆசிரியர், குறைச்சொற்கிளவி, பண்பு தொகுமொழி, தொழில் தொகுமொழி, தம்முன்தாம் வரும் எண்ணின் தொகுதி முதலியனவும் பிறவும் கூறியவற்றுள் எங்ஙனம் அங்ஙனம் இங்ஙனம் உங்ஙனம் யாங்ஙனம் ஆகிய சொற்களையும் சேர்த்துக் கொள்வதால் தவறில்லை. அதனால் எங்ஙனம் என்ற உதாரணத்தில் 'ஙகரம்' தன்னோடுதான் மயங்கியது என்பதில் தவறில்லை.

ஙகரம் தன்னோடு தான் மயங்கியதற்கு உதாரணம் உண்ணுங்ங் களிறு, அரங்ங்கம் என வரும் அளபெடைச் சொற்கள் அமையும் என்றார். இயல்பாக மயங்குதல் கூறிவந்தவிடத்து அளபெடை மயக்கம் கூறுதல் ஏற்புடைத்தாகாது.

## எழுத்துக்களின் பிறமரபுகள் : சுட்டெழுத்துக்கள்

31. அ இ உ அம்மூன்றும் சுட்டு.

**இளம்பூரணர்**

‡இது குற்றெழுத் தெனப்பட்டவற்றுள் சிலவற்றிற்கு வேறோர் குறியிடுதல் நுதலிற்று.

(இள்.) அ இ உ அம்மூன்றும் சுட்டு—(குற்றெழுத்தெனப் பட்ட) அ இ உ என்னும் அம்மூன்றும் சுட்டு என்னும் குறியவாம்.

எ-டு : [1] அங்ஙனம், இங்ஙனம், உங்ஙனம் என வரும்.

---

‡ இப்பகுதி கழகப்பதிப்பில் (1955) விடுபட்டுள்ளது.

சு. வே. 1. அக்கொற்றன் இக்கொற்றன் உக்கொற்றன்

**நச்சினார்க்கினியர்**

இது குற்றெழுத்தென்றவற்றுட் சிலவற்றிற்கு வேறோர் குறியீடு கூறுகின்றது.

(இ—ள்.) அ இ உ என்று கூறிய அம்மூன்றும் சுட்டு என்னுங் குறியினையுடைய; எ-று.

இதுவும் ஆட்சியும் காரணமும் நோக்கியதோர் குறி, சுட்டியறியப்படும் பொருளை உணர்த்தலின். தன்னின முடித்தல் என்பதனுள் ஏகாரம் வினாப்பொருள் உணர்த்தலும் கொள்க.

எ-டு : அக்கொற்றன் இக்கொற்றன் உக்கொற்றன் எப்பொருள் எனவரும். இவை பெயரைச் சார்ந்து தத்தங் குறிப்பிற் பொருள் செய்த இடைச்சொல். இச்சூத்திரம் ஒருதலை மொழிதல் என்னும் உத்தி. இதுவும் மேலைச் சூத்திரமும் எழுத்தாந்தன்மையன்றி மொழி நிலைமைப்பட்டு வேறோர் குறிபெற்று நிற்றலின் மொழிமரபினைச் சேர வைத்தார்.

**வேங்கடராசுலு ரெட்டியார்**

அ முதலிய இம்மூன்றனையும் சுட்டெழுத்து என்று கோடுமோ, சொல் என்று கோடுமோ எனின், சொல் என்று கோடலே அமைவுடைத்தென்க. ஆயின் ஆசிரியர், எழுத்துக்களின் இயல்பினை யுணர்த்துகின்ற நூன்மரபிற் கூறியிருத்தலின் இவை சுட்டெழுத் தெனப்படுமால் எனின், "இதுவும் மேலைச் சூத்திரமும்...... சேர வைத்தார்" என நச்சினார்க்கினியரும், "இக்குறிகளையும் முன் குறில் என்றும்...... மொழிமரபினைச் சார வைத்தார் என்க" என்று உரையாசிரியரும் கூறியிருத்தலின், அ இ உ என்னும் எழுத்துக்கள் மொழிநிலைமைப்பட்ட வழியே இக்குறி பெறும் என்றும், அது கருதியே, உயிர் எழுத்துக்களைக் குறில் நெடில் என்று பகுத்துப் பெயரிட்ட வழி, இச்சூத்திரத்தைக் கூறிற்றிலர் என்றும், மொழிமரபினைச் சார வைத்ததனால் இவை மொழியெனப்படும் என்றும் கொள்ளுநலே அமைவுடையதாகும். அன்றியும், ஆசிரியர், 'குற்றெழுத்தென்ப', 'நெட்டெழுத்தென்ப' என்று குறில் நெடில்களுக்கு எழுத்து எனப்பெயர் கூறியாங்குச் சுட்டெழுத்து என்று பெயரிடாதது உட்கொளற் பாற்று.

நன்னூலார் இதனை ஆராயாதே, சுட்டுக்களை எழுத்தென்று கொண்டு, உயிர் எழுத்துக்கட்குக் குறில் நெடில் என்று பெயரிட்ட

---

* நூல் மரபு 32 நூற்பா உரையில் காண்க.

வழி, இவற்றை நிறுத்திக் கூறினார். அதுபற்றிச் சங்கர நமச்சிவாயர், அச்சூத்திரத்திற்கு "இம்மூன்றெழுத்தும் .........சுட்டுப் பொருள் உணர்த்த வரின் சுட்டெழுத்தாம்" (நன்.எழு.11) என்று கூறினார். ஆயினும் அவர் தாமே, 'எகரவினா முச்சுட்டின் முன்னர்' (நன்.எழுத்.13) என்னும் சூத்திரத்தின் உரையில், 'அஇ உ என்னும் மூன்று சுட்டிடைச்சொல் முன்னும்' என்றும், 'அவற்றுள், கிளையெண் குழூஉமுதல்' (நன். பெயர்19) என்னும் சூத்திரத்தின் உரையின் கீழ், "சுட்டு முதலிய நான்கு இடைச் சொற்கும்........" என்றும் கூறியிருத்தலின் இவை இடைச்சொல் எனப்படும் என்பது அவர்க்குங் கருத்தாதல் அறியப்படும். இனி அஇஉக்கள் தம்மையுணர்த்தாது சுட்டுப்பொருளை உணர்த்துதலின் அவற்றைச் சொல் என்று கோடலே பெரிதும் அமைவுடைத்து.

"தன்னை யுணர்த்தின் எழுத்தாம் பிறபொருளைச்
சுட்டுதற் கண்ணேயாம் சொல்"

என்பது அறிக. அன்றியும் இவற்றை எழுத்தாகக் கொள்ளின், இவற்றை நிறுத்த சொல்லாக வைத்துப் புணர்ச்சி விதி கூறுதல் அமையா தன்றே?

சுட்டின் முன்னர் ஞநமத் தோன்றின்
ஒட்டிய ஒற்றிடை மிகுதல் வேண்டும் (உயிர் மயங். 3)

என்னுந் தொடக்கத்து நான்கு சூத்திரங்களால் அகரச் சுட்டினையும்,

சுட்டி னியற்கை முற்கிளந் தற்றே (உயிர் மயங். 36

என்று இகரச்சுட்டினையும்,

'சுட்டின் முன்னரும் அத்தொழிற்றாகும்'(உயிர் மய.53) என்று உகரச் சுட்டினையும் நிறுத்த சொல்லாக வைத்துப் புணர்ச்சி விதி கூறியிருத்தலின் அவை சொல்லேயாகுமன்றே? கன்னடம், தெலுங்கு, மலையாள மொழிகளில் ஆ ஈ என்னும் சுட்டுக்களை 'ஸர்வநாமம்' என்று வழங்குதல் அறிதற்பாலது.

கன்னட மொழியில் ஆ ஈ ஊ என்பன சுட்டுக்களாய் வழங்குதலானும், தெலுங்கு மொழியிலும் மலையாள மொழியிலும் ஆ ஈ என்பன சுட்டுக்களாய் வழங்கிவருதலானும், தமிழ் மொழியிலும் ஆ ஈ என ச செய்யுட்களில் வருதலானும் ஆ ஈ ஊ என்பவையே சுட்டுக்கள் என்றும், அஇ உக்கள் அவற்றின் திரிபு என்றும் கருதுதல்

கூடும். *தெலுங்குமொழியில் ஆ ஈ என்னும் சுட்டுக்களுக்குமுன் வல்லெழுத்துக்கள் வரின், அச்சுட்டுக்கள் குறுக வல்லெழுத்துக்கள் மிகும் என்று இலக்கணம் கூறும். அக்கொற்றன் என்பது, அவன் கொற்றன் என்னும் இரண்டு சொற்களாலாகியது என்று கூறுவர். ஆயின் புணர்ச்சிக்கண் நிலைமொழியின் ஈற்று மெய்யெழுத்துக் கெடுதல் இயல்பேயன்றி, மேல் நிற்கும் உயிர்மெய் கெடுதல் இயல்பன்றாலின், அஃது அமைவுடையதாகத் தோன்றவில்லை.

**சுப்பிரமணிய சாஸ்திரியார்**

அக்கொற்றன், அவன் கொற்றன் என்ற இரண்டு தனிச் சொற்களால் ஆக்கப்பட்ட தொகைமொழியேயாகும். ஆகலின் ஆங்குள்ள அகரம் இடைச்சொல் அன்று, சுட்டுப்பெயரின் பகுதியேயாகும். வந்தனன் என்ற விடத்து அன் விகுதியிலுள்ள அகரம் சுட்டேயாகும்; ஆங்கு அஃது இடைச்சொல்லின் ஒரு பகுதியாகும். 'வருதி' என்ற இடத்துள்ள முன்னிலை இகரம் இடைச்சொல்லேயாகும். ஆகலின் சுட்டு எங்கும் இடைச்சொல் என்பது பொருந்தாது.

எல்லாரும் என்னும் படர்க்கை யிறுதியும்
எல்லீரும் என்னும் முன்னிலை யிறுதியும் (எழுத்.191

என்ற சூத்திரத்தால் எல்லாரும், எல்லீரும் என்பன முறையே படர்க்கைப் பெயரும் முன்னிலைப் பெயரும் ஆகலின், அவற்றுள் படர்க்கையின் தன்மையும், முன்னிலையின் தன்மையும் ஆகார ஈகாரங்களாற் குறிக்கப்படுகின்றமையானும், அவை மொழிகளின் இடையில் இருக்கின்றமையானும், சொல்லதிகாரத்துள் அர் ஆர் என்பனவற்றை பல்லோர் படர்க்கை என்றும், இர் ஈர் என்பன வற்றை பல்லோர் முன்னிலை யென்றும், ரஃகா னொற்றைப் பல்லோர் அறியும் சொல் என்றும் ஆசிரியர் குறிப்பிடுகின்றமை யானும், அன் ஆன் அள் ஆள் என்பனவற்றை ஒருவர் மருங்கிற் படர்க்கைச் சொல் என்றும், னஃகான் ஒற்றை ஆடூஉ வறிசொல் என்றும், ளஃகான் ஒற்றை மகடூஉ வறிசொல் என்றும் குறிப்பிடு கின்றமையானும், சுட்டு நீண்டு வரலாம் என 'நீட வருதல் செய்யுளுள் உரித்தே' எனச் சூத்திரம் செய்திருத்தலானும், ஆங்கும் சுட்டாகிய அ இ முதலியன மொழிகளின் இடையில் நின்று அன்

---

*ஆந்த்ர ஶப்த. ஹலந்த. 24.

ஆன் முதலிய இடைச்சொற்களின் ஒரு பகுதியாய் இருக்கின்றமை யானும் சுட்டு மொழி முதலில் தனியாய் வரும் என நன்னூலார் முதலியோர் கொண்டது பொருத்தமின்றென உணர்க.

**வெள்ளைவாரணனார்**

சுட்டியறியப்படும் பொருளை உணர்த்தலின் சுட்டு என்பது காரணப்பெயர்.

அக்கொற்றன், இக்கொற்றன், உக்கொற்றன் என வரும் அ, இ, உ என்ற மூன்றெழுத்தும் மொழி முதலிலே தனியே நின்று சுட்டுப்பொருளை யுணர்த்தி நிற்றல் மேற்காட்டிய உதாரணங்க ளாற் புலனாம். ஆசிரியர் தனியே சுட்டு என்ற பெயரைக் குறிப் பிடும் போதெல்லாம் இம்மூன்றெழுத்தைத்தவிர வேறொன்றையும் சுட்டாமையும் இதனை வலியுறுத்தும்.

இவ்வாறு நன்னூலாரும் அ இ உ இம்மூன்றெழுத்தும் மொழி முதற்கண் புறத்தே தனித்துச் சுட்டுப்பொருள் உணர்த்தவரிற் சுட்டெழுத்தாம் என்பதனை 'அ இ உம்முதற் றனிவரிற் சுட்டே' (எழு.66) என்பதனாற் குறிப்பிட்டார்.

இங்ஙனம் ஆசிரியர் தொல்காப்பியனாரும், உரைகாரரும் பவணந்தியாரும், மயிலை நாதரும் மொழிக்கு முதலில் தனித்துச் சுட்டுப்பொருள் உணர்த்தி வரும் அ இ உ என்ற இம்மூன்றனை யுமே ஈண்டுச் சுட்டெனப் பெயர் கூறினாராகப் பின்வந்த நன் னூல் உரையாசிரியர் சங்கர நமச்சிவாயர் "முதலெனப் பொதுப் படக் கூறினமையால் புறத்தும் அகத்தும் வருதல் பெற்றாம்" எனக்கொண்டு, ஆசிரியர் கூறிய 'தனிவரின்' என்றதனையும் நோக்காது, "அவன் என்பதன்கண் அகரம், அறம் என்பதன் கண் அகரம்போலப் பின்னெழுத்துக்களோடு தொடர்ந்து நின்று ஒரு பொருளையுணர்த்தாது,மலையன் என்பதன்கண் பகுதிபோல வேறு நின்று சுட்டுப்பொருளுணர்த்தலின் அகத்துவரும் இதனை யும் தனிவரின் என்றார்" என அமைதி கூறி, அவன் இவன் உவன் என்ற பெயரையும் உதாரணம் காட்டினர். அவர்கள் அகத்து வருவதாகக் கொண்ட இவ்வுதாரணத்தின்கண் சுட்டெ ழுத்தும் சுட்டப்படும் பொருளும் அக்கொற்றன் என்றவிடத்துப் போல வேறு நில்லாது ஒரு பெயர்ப்பட்டு நிற்றலான் அஇஉ முதலிய எழுத்துக்கள் இதன் முதற்கண் மலையன் என்பதன்கண் பகுதிபோலப் பிளவுபட்டுத் தனியே நின்றன எனக்கொள்ளல் பொருந்தாது. ஆசிரியர் தொல்காப்பியனார் சுட்டு என்ற பெய

ரினை அஇஉ என்ற எழுத்துக்களுக்கே இட்டு வழங்கினார். அவையடியாகப் பிறந்த பெயர்களைச் சுட்டுப்பெயர் (சொல்.கிளவி 37,38) எனக் குறிப்பிட்டு வழங்குவர்.

அவன், இவன், உவன், அவள், இவள், உவள்,
அவர், இவர், உவர், அது, இது, உது

அஃது, இஃது, உஃது, அவை, இவை, உவை, அவ், இவ் உவ் என்றாங்குப்பலதிறப்படுத்துப் பெயரியலுள்(சூ8,13)வழங்கியுள்ளார் அ இ உ என்பனவற்றைக் குறிக்கும்போது சுட்டு என்ற சொல்லை வழங்கியும், அது, அவ் முதலியவற்றைக் குறிக்கும்போது சுட்டு முதலுகரம், சுட்டு முதலாகிய வகர இறுதி என்று கூறிச் சுட்டடியாகப் பிறந்ததெனக் குறிப்பிட்டும் செல்லுதல் நோக்கத்தக்கது

சிவலிங்கனார்

ஆ ஈ ஊ என்ற நெடில்களே முதற்கண் சுட்டு எழுத்துக்களாய் இருந்து பின்னர் அ இ உ எனக் குறுகியிருத்தல் வேண்டும் என்பர் வேங்கடராசுலு ரெட்டியார். சுட்டுக்கள் மூன்றும் சேய்மை அண்மை இடைமையாகிய இடங்களுக்கு அமைவன; அ என்பது சேய்மையில் உள்ளதைச் சுட்டுவது. சேய்மையில் உள்ளதைச் சுட்டும்போது, அச்சேய்மையின் தொலைவுக்கு ஏற்ப 'அ' என்பது 'ஆ' என நீளும். அண்மையில் உள்ளதைச் சுட்டும்போது 'ஈ' என நீண்ட ஒலியால் சுட்ட வேண்டுவதில்லை; சுட்டுதலும் இயல்பிற்கு மாறாகும். இடைமையில் உள்ளதைச் சுட்டும்போது 'ஊ' என்பதை 'உ' ஆகக்குறுக்கின் அண்மைக்குரியதாகவும், 'ஊ'என்பதையே நீட்டின் சேய்மைக்குரியதாகவும் ஆகும். எனவே 'ஆ' என்பது (சேய்மைகருதி) 'அ' எனக்குறுகியது என்னலாமாயினும் அண்மைக்குரியது ஈ என்றும், இடைமைக்குரியது ஊ என்றும் குறிக்கப்படுதல் இல்லையாதலின், நெடில்களே முதலில் சுட்டுப் பொருளைத் தந்தன என்பதும் அவற்றின் குறுக்கமே அ இ உ என்பன என்பதும் பொருந்தா. அவன் முதலிய சுட்டுப் பெயர்கள் 'ஆவன்' முதலியவாக நீளாமையும் கருதுக தெலுங்கு முதலியன தமிழின் திரிபுகளாதலின் அவற்றில் நெடிற் சுட்டுக்கள் இருக்கின்றன.

பிறகுறிப்புகள்

மேற்கோள்

1. திவாகரம் பத்தாவது, ஒலிபற்றிய தொகுதியில் 'அ இ உ அம்மூன்றும் சுட்டே' என இறுதியில் ஏகாரத்தோடு இந்நூற்பா எடுத்தாளப்பட்டுள்ளது.

2. பாஅ வண்ணத்திற்கு மேற்கோள் காட்டினர் இளம்பூரணர். (தொல். பொருள். 515).

3. ஒருதலைமொழிதல் என்னும் உத்திக்கு எடுத்துக்காட்டாகக் காட்டுவர் பேராசிரியர். (தொல். பொருள். 665)

4. "அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்" பற்றி வாகைப் பொருள் பிறத்தலின் அவற்றைப் புறத்திணையியலுட் கூறினானாயினும், ஈண்டுத் தழீஇக் கொள்ளப்படும், மரபு வகையான் என்பது; என்போல எனின், 'அ இ உ அம்மூன்றும் சுட்டு' என நூல்மரபினுள் ஓதிய மூவகைச் சுட்டினை இடைச்சொல் ஓத்தினுள் ஓதானாயினான் அதுபோல என்பது" எனப் பேராசிரியர் மேற்கோள் காட்டினர். (தொல்—பொருள். 627)

## வினா எழுத்துக்கள்

32. ஆ ஏ ஓ அம்மூன்றும் வினா.

### இளம்பூரணர்

* இது மேற்கூறிய நெட்டெழுத்திடைச் சிலவற்றிற்கு வேறோர் குறியிடுதல் நுதலிற்று.

(இ-ள்.) ஆ ஏ ஓ அம்மூன்றும் வினா—(மேல் நெட்டெழுத்தெனப்பட்ட) ஆ ஏ ஓ என்னும் அம்மூன்றும் வினா என்னுங் குறியவாம்.

எ—டு : உண்கா, உண்கே, உண்கோ சாத்தா என வரும்.

தன்னின முடித்தல் என்பதனால், ஏகாரமும் யகர ஆகாரமும் [1]வினாப்பெறும் எனக் கொள்க. இக்குறிகளையும் முன் குறிலென்றும் நெடிலென்றும் கூறிய வழியே கூறுக வெனின், இவை சொல் நிலைமையிற் பெறுங் குறியாகலின் ஆண்டு வையாது மொழி மரபினைச் சார வைத்தார் என்க. இக்குறி மொழி நிலைமைக்கேல் எழுத்தின்மேல் வைத்துக் கூறியது என்னையெனின், இவ்வதிகாரத்துப் பெயர் வினையல்லனவற்றிற்குக் கருவி செய்யாமையின் என்க.

### நச்சினார்க்கினியர்

இது நெட்டெழுத் தென்றவற்றுள் சிலவற்றிற்கு வேறோர் குறியீடு கூறுகின்றது.

---

* இப்பகுதி கழகப்பதிப்பில் (1955) விடுபட்டுள்ளது.

சு. வே, 1 வினாப்பெயர் பெறும்.

(இ-ள்.) ஆ ஏ ஓ என்று கூறப்பட்ட அம்மூன்றும் வினா என்னுங் குறியினையுடைய; எ—று.

இதுவும் ஆட்சியும் காரணமும் நோக்கிய குறி, வினாப்பொருள் உணர்த்தலின்.

எ—டு: உண்கா உண்கே உண்கோ எனவரும். இவற்றுள் [1]ஆகாரம் இக்காலத்து வினாவாய் வருதல் அரிது. நீயே நீயோ என்பன இக்காலத்து வரும். இவற்றுள் ஏ ஓ என்பன இடைச் சொல் ஓத்தினுள்ளும் கூறினார். ஏகார ஓகாரங்கள் தரும் பொருட் டொகைபற்றி. இது மொழிந்த பொருளோ டொன்ற அவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்தல் என்னும் உத்திக்கு இனமாம், யகர ஆகாரமும் வினாவாய் வருதலின்.

## வேங்கடராசுலு ரெட்டியார்

இம்மூன்றெழுத்துக்களும் வினாப்பொருளில் வருதலின் வினா இடைச்சொல் எனப்படும். இவை சொற்களின் ஈற்றில் நின்று அப் பொருளை யுணர்த்தும்.

அ இ உக்கள் மூன்றும் சுட்டுப்பொருளவாயினும், அவை சுட்டும் இடத்தின்கண் வேறுபாடிருத்தல் போல, இவ்வினாக் களுள்ளும் வேறுபாடுளதாயே யிருக்கும். ஆசிரியர், ஆகார வினாவினைத் "தன்தொழில் உரைக்கும் வினாவின் கிளவி" (உயிர்மயங். 22) என்று கூறுதலின் அது தன்மையிடத்து வரும் வினாவெனத் தெரிகிறது. அவ்வாறாயின் ஏனையிரண்டெழுத்துக் களும் ஏனை இரண்டிடங்களுக்கு வருவனவாகும். இவ்வுண்மை இப்பொழுது அறியப்படுமாறில்லை. ஆயினும் ஆ ஏ ஓ என்னும் மூன்றும் உணர்த்தும் பொருள்களுள் வேறுபாடுண்டென்றே கொள்ளுதல் வேண்டும். அவ்வாறன்றி ஒரே பொருளவாயின், ஓரெழுத்தே சாலுமன்றே.

யா என்னும் வினாவினையும் நன்னூலார் கூறினது போல இவ்வாசிரியர் ஈண்டு இச்சூத்திரத்தில்] ஒருங்கு கூறாததென்னை யெனின், அஃது இவ்வாசிரியர், 'எழுத்து' என்று கொண்ட முப்பத்து மூன்றனுள்ளும் ஒன்றன்மையானும், முதலெழுத்தின் கட்படுவதொரு குறியீடே கூறி வருகின்றாராகலானும், 'யா' வினாவினை ஈண்டுக் கூறிற்றிலர். அன்றியும், அதுபெயர்ச் சொல்லாதல் அறியத் தக்கது. அதனைச் சொல்லதிகாரத்து

---

சு. வே. 1. ஆகாரமும் ஏகாரமும்

அஃறிணைப் பெயர்களைக் கூறுமிடத்துக் கூறியிருப்பதூஉம், இவ்வதிகாரத்தில், ''யா என் வினாவும் ஆயியல் திரியாது'' (உருபி-3.) என்று 'யா' என்னும் பெயர் உருபேற்குமிடத்து வற்றுச்சாரியை பெறும் என்று விதித்திருப்பதூஉம் காண்க எகரம் வினாவாயன்றி

எப்பொருளாயினும் அல்ல தில்லெனின்
அப்பொரு ளல்லாப் பிறிதுபொருள் கூறல்
(தொல். சொல். 518)

எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்.
அந்நிலம் பொழுதொடு வாரா வாயினும் (தொல். பொருள். 19)

என்பன போலத் தொடர்புடைப் பொருள் (சம்பந்தார்த்தம்) குறித்து வருவதாகலின் அது கூறப்படாதாயிற்று. இனி எகரத்தின் உண்மைத் தன்மையை ஆராயின், அது, புணர்நிலைக் கண் யா விற்கு நேர்ந்த திரிபேயாதல் அறியப்படும். *எகரம் வினாப்பொருள் தருவதன்றென்றும், எவன் எவள் ஏவன் ஏவள் முதலியன யாவன் யாவள் முதலியவற்றின் திரிபின என்றும் பெரும்புலவர், அரசஞ்சண்முகனார் பல ஏதுக்கள் காட்டி நிறுவியுள்ளது நோக்கற்பாலது. இலக்கண ஆசிரியர்கள் கொண்டுள்ள இவ்யா ஏகாரத்தின் திரிபாதல் எனது திராவிடமொழியின் மூவிடப் பெயர் என்னும் நூலால் புலனாகும்.

இச்சூத்திரத்தில் ‡வினாஅ என்னும் சொல்லின்கண் ஆகாரம் அளபெடுத்து நிற்றல் வேண்டும்.

''முதலும் சினையும் பொருள் வேறு படாஅ'' (வேற்-மயங் 6)
''கலித்தளை மருங்கிற் கடியவும் படாஅ'' (செய்-24)

என்னும் இடங்களில், 'படா' என்னும் சொல் அளபெடுத்து நின்றவாறு காண்க. ஈண்டு அளபெடாது இருக்குமாயின், வினா ஓரசையே ஒருசீராகுமாதலின் ஓசை கெடும். அஃதேல், மேற் சூத்திரத்திலுள்ள சுட்டு என்னும் சொல்லும் ஓரசையே யாகலின் அது தனித்து நின்று ஒருசீர் ஆயவாறு என்னையோ எனின், அது நேர்பசையாதலின் ஓசை நிறைந்து நின்று நேரீற்று இயற்சீரே போல அமைந்து நின்றது. இச்சூத்திரத்தில் உள்ள வினா என்னும் சொல் அத்திறத்ததன்று.

---

* செந்தமிழ் தொகுதி 2
‡ சுவடிகள் எவற்றிலும் அளபெடையில்லை.

இசைநிலை நிறைய நிற்கும் ஆயின்
அசைநிலை வரையார் சீர்நிலை பெறலே (செய்-27)

என்று ஆசிரியர் கூறியவாற்றான், நேர்பசை நிரைபசைகள் இசை நிறைந்து நின்று சீர்களாகும். இது வெண்பாவின் ஈற்றடியின் இறுதிச்சீர் அசைச்சீராகி வருவதற்கு விதி என்று கொண்டு' வெண்பாவின் ஈற்றடிகளையே உதாரணங்காட்டி, 'இங்ஙனம் கூறாக்கால், வெண்பாவின் ஈற்றடியை முச்சீரடி என்னுமாறு இல்லை யென்பது' என்று பேராசிரியர் கூறினார் ஆதலின், இஃது ஈண்டைக்குப் பொருந்தாது எனின், விடை: ஆசிரியர், முன்னர் அடியைக் குறித்துக் கூறுமிடத்து,

'வெண்பாட் டீற்றடி முச்சீர்த் தாகும்' (செய்-72)

என்றும்,

'அசைசீர்த்தாகும் அவ்வயினான' (செய் 73)

என்றும் கூறிப் பின்னர்,

'நேரீற் றியற்சீர் நிரையும் நிரைபும்
சீரேற் றிறூஉம் இயற்கைய என்ப' (செய்-74)

'நிரையவண் நிற்பின் நேரும் நேர்பும்
வரைவின் றென்ப வாய்மொழிப் புலவர்' (செய்-75)

என்றும், வெண்பாவின் ஈற்றடியைக் குறித்து விளங்கக் கூறியிருத்தலின், 'இங்ஙனங் கூறாக்கல் வெண்பாவின் ஈற்றடியை முச்சீரடி யென்னுமாறு இல்லை என்பது' என்று பேராசிரியர் கூறியது பொருந்துவதன்று. அன்றியும், 'இசைநிலை' என்னும் சூத்திரம் உள்ள இடம் அடிகளின் இயல்பினைக் குறித்துக் கூறுமிடம் அன்றாகலானும், சீர்களைக் குறித்துக் கூறுமிடமே ஆகலானும், அவர் கூறும் உரை பொருந்தாமை போதரும். ஆகலின் 'இசைநிலை...... பெறலே' என்னுஞ் சூத்திரத்திற்கு, 'ஓசை குறையாது நிறைந்திருக்குமாயின் நிரைபு நேர்பு என்னும் அசைகளும் சீராதலை நீக்கார்' என்பதே பொருளாகக் கொள்ளற் பாலது. ஆயின், இவ்வசைகள் எவ்வகைச் சீராக அமைத்துக் கொள்ளப்படும் எனின், அதனையன்றே,

'இயற்சீர்ப் பாற்படுத் தியற்றினர் கொளலே
தளைவகை சிதையாத் தன்மை யான' (செய்.28

என்னும் அடுத்தசூத்திரத்திற் கூறினார் என்க. இதனால், நேர்பு அசை 'தேமா' ஆகவும், நிரைபு அசை 'புளிமா' ஆகவும் இபற்றிக்

கொள்ளப்படும். இவ்விதிப்படி, 'சுட்டு' என்பது தேமா என்னும் இயற் சீராதலின், அஃது ஓரசைச்சீராயினும் அமைவுறும்; 'வினா' என்பது அங்கனம் அமைவதன்று. இவற்றால் 'வினாஅ' என அளபெடை பெற்றிருத்தலே அமைதி என்பது தெளிவாகும்.

## சுப்பிரமணிய சாஸ்திரியார்

ஆ ஏ ஓ அம்மூன்றும் வினாவாகும். உ-ம். அவனா வந்தான், அவனே வந்தான், அவனோ வந்தான்.

இவ்வினா எழுத்துக்கள் பெயர் வினை இவற்றின் ஈற்றிலே வருமென்று கொள்க.

## வெள்ளைவாரணனார்

வினாப்பொருள் உணர்த்தலின் வினாவாயிற்று. உண்கா, உண்கே, உண்கோ எனவரும். ஆசிரியர் ஈண்டு ஆ ஏ ஓ என எழுத்தாம் நிலையில் நின்று வினாப்பொருள் உணர்த்தி வரும் மூன்றனையும் வினா எனக் குறியிட்டுரைத்தார். சொல்லாம் நிலையில் நின்று யாவன், யாவள், யாவர் என உயர்திணைக் கண்ணும். யாது, யா, யாவை என அஃறிணைக் கண்ணும் பெயராகவும், உயர்திணைக்கண் யார் எனவும், அஃறிணைக்கண் எவன் எனவும் வினா வினைக்குறிப்பாகவும் வருவனவற்றை முறையே சொல்லதிகாரத்துப் பெயரியல் வினையியல் இவற்றிற் கூறிப் போந்தார். எவ்வயின் எதோளி என எகர முதலாக வயின் என்பதும் இகர விகுதியும் ஒட்டி ஒருசொல் நீர்மைப்பட்டு இடப் பொருளுணர்த்தி இங்ஙனம் வினாவாய் நிற்கும் இடைச் சொற்களை வினா எனத் தழுவினார். (எழுத்து 159, 334) இவை சொல்நிலைப்பட்டு வினாப் பொருளுணர்த்தி நிற்றலின் எழுத்தாம் நிலைமையில் நின்று ஈண்டுப் புணர்ச்சிக்கட்படும் ஈற்று வினா வாகிய ஆ ஏ ஓ என்றவற்றுள் இயைத்துரைக்கப்படாவாயின.

'ஒன்றறி சொன்முன் யாதென் வினாவிடை' (எழுத்து.172)
'யாவென் வினாவும் ஆயியல் திரியாது' (எழுத்.175)
'யாவென் வினாவின் ஐயென் இறுதி' (எழுத்.178)

என இவ்வதிகாரத்தும் வினாவெனக் கொண்டு, யாவன், யாவள் யாவர், யாது, யாவை எனப் பெயரியற் கண்ணும்,

''யாஅர் என்னும் வினாவின் கிளவி
அத்திணை மருங்கின் முற்பாற்கு உரித்தே,
(சொல். வினை. 22)

'அத்திணை மருங்கின் இருபாற் கிளவிக்கும்
ஒக்கும் என்ப எவனென் வினாவே' (சொல். வினை.22)

என வினையியற் கண்ணும் எடுத்துரைத்தமையால் வினாச் சொல்லை வினாப்பெயர், வினாவினைக்குறிப்பு என இருவகைப் படுத்தினார் என்பது அறியலாம். ஈண்டுக் குறிப்பிட்ட ஆ ஏ ஓ, மூன்றும் இருதிணை ஐம்பாற் பெயரிறுதிகளோடு சேர்ந்து வினாப் பொருளுணர்த்தி நிற்றலும், சொல்நிலைப்பட்டு வரும் யாவன் முதலிய பெயரும், வினாவினைக் குறிப்பும், அவ்விருதிணையுள் ஒன்றாய் ஒருபாற் பொருளின்கண் நிற்றலுங் கொண்டு, இவை பொருளானும் வேறுபாடுடைய என்பது அறியப்படும். இனி எவ்வயின், எதோளி முதலியவை எகரத்தை முதலாகக் கொண்டு வரினும் வயின் என்னும் சொல்லும் இகர விகுதியும் பெற்று ஒரு சொல்லாய் நின்று இடப்பொருள் உணர்த்தி வினாவாய் வருதலின் இடைச் சொல்லாயின.

இனி இளம்பூரணர் இச்சூத்திரத்தில் ''தன்னின முடித்தல் என்பதனால் எகரமும் யகர ஆகாரமும் வினாப்பெறும் எனக் கொள்க'' எனத் தழுவிக்கொண்டார். இக்கருத்தே பற்றி நன்னூலாரும்,

எயா முதலும் ஆ ஓ ஈற்றும்
ஏயிரு வழியும் வினவா கும்மே (நன்.67)

எனச் சூத்திரம் செய்தனர்.

இச்சூத்திரத்தில் ஆசிரியர் பவணந்தியார் வினாவாக வரும் எனக்கூறிய ஆ ஏ ஓ ஆகிய ஈற்று வினாவில் ஏ முதலினும் வரும் எனக் குறிப்பிட்டது ஏது என்பது முதலாக வரும் பிற்காலத்து வழக்கு நோக்கியாதல் வேண்டும்.

பவணந்தியார் கூறியவாறு எகரம் வினாவாய் வருமென்றால் அ, இ, உ என்றவற்றைச் சுட்டெனக் குறிப்பிட்ட ஆசிரியர் எகரத்தையும் வினா என அடக்கிக் கூறியிருப்பர். உயிர் மயங்கியலில் அ, இ, உ என்றவற்றிற்கு அவ்வவ்வீற்றின்கண் புணர்ச்சி விதி கூறிய ஆசிரியர், எகரம் தனி நின்று வினாப்பொருளுணர்த்து மாயின் அதனையும் எகரவீற்றுள் எடுத்துக்கூறிப் புணர்த் திருப்பர். அவ்வாறெடுத்தோதாமையானும் 'சுட்டு முதல் வயின்' என்றாற் போல 'எகர முதல்வயின்' என எழுத்தே பற்றிக் கூறி எகரம் இகரம் முதலியவைகளோடு கூடி ஒரு சொல்லாகிய நிலை யிலேயே, அவ்விடைச் சொல்லை வினாவெனக் குறிப்பிட்டுச்

சேறலானும், எகரம் ஒன்றே மொழி முதற்கண் தனித்து நின்று வினாப்பொருள் உணர்த்திற்றென்றல் தொல்காப்பியனார்க்குடன் பாடன்றென்க.

இனி அஃறிணைப் பன்மைப் பெயராய் நின்று வினாப் பொருளுணர்த்தும் யா என்னும் வினாப் பெயரினை மொழி முதலினின்றும் வினாப் பொருளுணர்த்தும் வினா எழுத்தாகக் கொண்டு,இருதினை ஐம்பாற் பெயரினும் வினையிலும் பின்னின்று வினாப்பொருளுணர்த்தும் எழுத்துக்களோ டியைத்து உரைத்தல் பொருந்தாது. அன்றியும் யா வொன்றனை வினா எழுத்தாகக் கொண்டு அதனோடு துவ்விகுதியும் வை விகுதியும் சேர்ந்து யாது, யாவை யென ஆயிற்றெனக் கொள்ளின் யா என்பதனை அஃறிணைப் பன்மைப் பெயராகக் கொண்ட தொல்காப்பியனார் கருத்தோடு முரணி, யா என்பது ஐம்பாற்கும் உரித்தெனப் பொருள்படுதலானும், ஐம்பாற்கும் உரிய யாவென்பது இலக்கியங் களிலும் வழக்கிலும். அஃறினைப் பன்மைப் பொருளுணர்த்தி நிற்றலானும் ஆசிரியர் கருத்து அஃதன்றென்க.

இனி, எ என்பதனைத் தனியே வரும் வினா எழுத்தாகக் கொண்டு எப்பொருள் என்றும், உயர்திணைக்கண் அன் விகுதி பெற்று எவன் என்று ஆண்பால் உணர்த்தியும் நிற்கும் எனக் கொள்வர் பிற்காலத்து உரையாசிரியர்கள்.

''எப்பொருளாயினும்'' என்ற தொல்காப்பியச் சூத்திரத் தொடர்க்கு எகரத்தைத் தனியே வந்த வினா எழுத்தாகப் பிரித்து ''எந்தப் பொருளாயினும்'' எனப் பிற்காலத்தார் போலப் பொருளுரையாது ''யாதானும் ஒரு பொருளையாயினும்'' எனச் சேனாவரையர் கூறிப் போதலால் ''யாது பொருளாயினும்'' என்பதே எப்பொருளாயினும் என ஒரு மொழியாய்த் திரிந்து நின்றதென்பது அவர் கருத்தாதலறியலாம்.

எவன் என்ற வினா உயர்திணைக்கு உரித்தன்று என்பதை ''அஃதேல் நுமக்கிவன் எவனும் என உயர்திணைக்கண்ணும் வருமால் எனின், ஆண்டு அது முறை பற்றி நிற்றலின் அஃறினைக் கண் வந்ததெனவே படும் என்பது; அஃதேல் நுமக்கு இவன் என்ன முறையனாம் என்பதல்லது என்ன முறையாம் என்பது பொருந்தாதெனின், என்ன முறை என்பது ஆண்டு முறைமேல்

நில்லாது ஒற்றுமை நயத்தான் முறையுடையோன்மேல் நிற்றலின் அமையும் என்க'' என வினா விடைகளான் வற்புறுத்தினார். ஈண்டு எவன் என்பது அஃறிணையிருபாற்கும் உரிய வினாவினைக் குறிப்பாம். அஃறிணை வினாவாய் வரும் எவன் என்னும் வினைக் குறிப்புச் சொல்லே அத்திணைக்கண் பெயராகவும் ஆசிரியர் காலத்திற்குப் பின் வழங்கத் தொடங்கியது. இப்பெயர்ச்சொல் "இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ, வன்சொல் வழங்குவது'' எனத் திருக்குறளிலும் வழங்குகிறது. இதைப் பற்றி 'எவனென்பதோர் பெயருமுண்டு; அஃதிக் காலத்து என்னென்றும் என்னையென்றும் நிற்கும்'' எனச் சேனாவரையர் கூறுதலால், எவன் என்னும் அஃறிணை வினாப்பெயர் பிற்காலத்து என் என்னை என்று திரிந்து வழங்கப் பெற்றது என்பதும் பெற்றாம். சேனாவரையர் எவன் என்பதனை ஆசிரியர் கருத்தாக வினைக்குறிப்பெனக் கொண்டு அச்சொல் உயர்திணை குறிப்பதன்று என வற்புறுத்திக் கூறினமையானும், யாவன் என்பது முதலாக உயர்திணை வினாப் பெயரைக் குறிப்பிட்டுச் சென்ற தொல்காப்பியனார், தங்காலத்து எவன் என்ற வினாஉயர்திணை ஆண்பாலைச் சுட்டி நிற்குமாயின் அதனைக் கூறாதிரார் ஆகலானும் அவர் காலத்து எவன் என்ற சொல் உயர்திணை வினாப்பெயராய் நின்றதன்று என்பது புலனாம்.

ஆசிரியர் காலத்துக்குப் பின்னர் யாது, யாவை என்பன முறையே எது, எவை எனவும் யாவன், யாவள், யாவர் என்பன முறையே எவன், எவள், எவர் எனவும் திரிந்து வழங்கியதாதலால் உரையாசிரியரும், நன்னூலாரும் எகரத்தை வினா எழுத்தாகத் தழுவிக் கொண்டனர் போலும். இங்ஙனம் யாது முதலியவற்றின் யா என்னும் உயிர்மெய் எகரமாகத் திரியும் முறைமைத் தென்பதை யான் யாம் என்பவற்றின் முதல் யகரமெய் கெட்டு ஆகாரம் எகரமாகத் திரிந்து என், எம் என நிற்கும் எனக்கிளந்த அவற்றின் இயல்பான் உணர்ந்து கொள்ள வைத்தார் ஆசிரியர். ஆதலான் அவ்வியல்பு முறை பற்றியே அச்சொற்களின் யகர ஆகாரம் எகரமாகத் திரிந்ததெனக் கொள்ளல் பொருத்தமுடைத்து.

### சிவலிங்கனார்

ஆசிரியர் தொல்காப்பியர் எ, யா என்பனவற்றை வினா எழுத்துக்களாக இந்நூற்பாவில் குறிப்பிடவில்லையென்றாலும்

அவை வினா எழுத்துக்களே என்ற கருத்து அவர்க்கு உண்டு என்பதை உடம்பொடு புணர்த்தல் என்ற உத்திக்கேற்ப அவர்,

'எகர முதல் வினாவின் இகர இறுதியும்'

எனவும்,

'யா எவன் வினாவின் ஐயென் இறுதியும்'

எனவும் தொகை மரபில் (17) கூறியிருத்தலால் அறியலாகும். ஒன்று கூறி அதுபோலும் பிறிதொன்றை உடம்பொடு புணர்த்தலால் பிறிதோரிடத்துக் கூறும் இயல்பினர் தொல்காப்பியர் என்பதை மூன்றாம் வேற்றுமை உருபாக ஒடு என்பதொன்றை,

அவைதாம்,
பெயர் ஐ ஒடு கு
இன் அது கண் விளி என்னும் ஈற்ற (வேற்றுமையியல் 3)

என்னும் நூற்பாவில் கூறியவர் ஆன் உருபும் மூன்றாம் வேற்றுமைக்குரியது என்பதைக் கூறாமல் உடம்பொடு புணர்த்தலால்,

''ஒம்படைக் கிளவிக்கு ஐயும் ஆனும்''
(வேற்றுமைமயங். 14)

எனவும்,

''கு ஐ ஆன் என வரூஉம் இறுதி'' (வேற். மயங். 25)

எனவும் கூறியது காணலாம்.

பிறகுறிப்புகள்.

மேற்கோள்:

திவாகரம் ஒலி பற்றிய தொகுதியில் இந்நூற்பாவே காணப் படுகின்றது.

பேராசிரியர் வாராததனால் வந்தது முடித்தல் என்பதற்கு எடுத்தாண்டனர் (தொல். பொருள். 665).

## இசைநூல் முறையில் எழுத்தொலிகள்

33. அளபிறந் துயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்
உளவென மொழிப இசையொடு சிவணிய
நரம்பின் மறைய என்மனார் புலவர்.

## இளம்பூரணர்.

இது எழுத்துக்கள் முற்கூறிய மாத்திரையின் நீண்டு நிற்கும் இடம் இது என்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அளபு இறந்து உயிர்த்தலும்—(உயிர் எழுத்துக்கள் எல்லாம்) தமக்குச் சொன்ன அளவினைக் கடந்து ஒலித்தலையும், ஒற்று இசை நீடலும்—ஒற்றெழுத்துக்கள் தம் ஒலி முன் கூறிய அளபின் நீடலையும், இசையொடு சிவணிய நரம்பின் மறைய—(இந்நூலுட் கூறும் விளியின் கண்ணேயன்றிக்) குரல் முதலிய ஏழிசையோடு பொருந்திய நரம்பினையுடைய யாழினது இசை நூற்கண்ணும், உள என மொழிப என்மனார் புலவர்—உள எனச் சொல்லுவர் அவ்விசை நூலாசிரியர் என்று சொல்லுவர் புலவர்.

ஒற்றிசை நீடலும்[1] என்றனர், அளபிறந்துயிர்த்தல் என்றது அதிகாரத்தால் நின்ற உயிர் மேற்சேறலின். உள என்றது [2]அந் நீட்டிப்பு ஒரு தலையன்றென்பது விளக்கிற்று. இசை நூலாசிரியரும் முதல் நூலாசிரியர் தாமேயெனினும் 'மொழிப' என வேறொருவர்போலக், கூறியது அதுவும்[3] வேறு ஒரு நூலாகச் செய்யப்படும் நிலைமை நோக்கிப் போலும். மறையும்[4] என்பதன் உம்மை விகாரத்தால் தொக்கது. அகரம் செய்யுள் விகாரம்.

நச்சினார்க்கினியர்

இது பிறன்கோட் கூறல் என்னும் உத்திபற்றி இசைநூற்கு வருவதோர் இலக்கணமாமாறு கூறி அவ்விலக்கணம் இந்நூற்கும் கொள்கின்றது.

(இ-ள்.) முற்கூறிய உயிரும் உயிர்மெய்யும் மாத்திரையை இறந்தொலித்தலும் ஒற்றெழுத்துக்கள் அரை மாத்திரையின் நீண்டொலித்தலும் யாழ் நூலிடத்தன என்று கூறுவர் புலவர்; அங்ஙனம் அளபிறந்தும் நீண்டும் இசைத்தல் ஓசையோடு பொருந்திய நால்வகைச் செய்யுட்களுக்கும் உளவென்று கூறுவர் ஆசிரியர் எ-று.

எழுத்துக்கள் முற்கூறிய மாத்திரையை இறந்தொலிக்குமாறு கண்டு, அஃது இறந்தொலிக்கும் இடம் கூறினார், எழுத்தும் சொல்லும் பொருளும் கிடக்கும் இடம் செய்யுளிடமாதலின். அது மிக்கொலித்தலைச் செய்யுளியலின்கண் "மாத்திரையெழுத்தியல் அசைவகையெனாஅ" (செய்யுளியல் 1.) என இருபத்தாறு உறுப்

---

சு.வே: 1 என்றது
2 அந்நீட்சி
3 வேறொருவரால் வேறொரு
4 என்னும்

பிற்கும் சிறப்புறுப்பாக முற்கூறிப் பின்னர்,

'மாத்திரை யளவும் எழுத்தியல் வகையும்
மேற்கிளந் தன்ன என்மனார் புலவர்' (செய். 2)

எனச் சூத்திரத்தோடு மாட்டெறிந்து பின்னும்,

'எழுத்தள வெஞ்சினும் சீர்நிலை தானே
குன்றலு மிகுதலு மில்லென மொழிப' (செய். 3)

என்றுங் கூறினார். இது எதிரது போற்றல் என்னும் உத்தியும் கூறிற்று.

எ-டு: வருவர்கொல் வயங்கிழாய் வலிப்பல் யான் கேளினி (கலி. 11.) என்புழி ழகர ஆகாரமும் ககர ஏகாரமும் மாத்திரை இறந்தொலித்தவாறு உணர்க. ''பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவும் உரைத்தனரே'' (கலித். 11) என்புழி ஙகர ஒற்று அளவிறந்தவாறு காண்க. ஒழிந்த மூவகைச் செய்யுட்கும் இவ்வாறே தத்தமக்குரிய பா என்னும் உறுப்பினை நடாத்தி அளவு மிகுமாறு காண்க.

'சிவணிய' என்பது தொழிற்பெயர். 'இசையொடு சிவணிய' எனவே செய்யுளாதல் பெற்றாம். நரம்பு என்றது ஆகுபெயராய் யாழினை உணர்த்திற்று. மறை என்றது நூலை. 'மொழிப' என்றும் 'என்மனார் புலவர்' என்றும் இருகாற் கூறியவதனால். இங்ஙனம் பொருள் கூறலே ஆசிரியர்க்குக் கருத்தாயிற்று. [1]என்னை? செய்யுளியலுட் கூறிய 'மாத்திரையளவும்' என்னும் சூத்திரத்தில் 'மேற்கிளந்தன்ன' (செய். 2) என்னும் மாட்டேற்றிற்கு இவ்வோத்தினுள் வேறோர் சூத்திரம். [2]இன்மையின் இவ்விலக்கணங் கூறாக்கால் செய்யுட்குப் பா என்னும் உறுப்பு நிகழாது. அவை உரைச்செய்யுட்போல நிற்றலின் இவ்விலக்கணங்கூறவே வேண்டும் என்று உணர்க.

சூத்திரத் துட்பொரு ளன்றியும் யாப்பு
இன்றி யமையா தியைபவை யெல்லாம்
ஒன்ற வுரைப்ப துரையெனப் படுமே (மரபியல்.103)

என்னும் மரபியற் சூத்திரத்தானே இவ்வாறே சூத்திரங்களை நலிந்து பொருளுரைப்பன எல்லாங் கொள்க.

---

சு.வே. 1 அல்லாக்கால்
2 கூறல் வேண்டும் என உணர்க.

**வேங்கடராசுலு ரெட்டியார்**

நச்சினார்க்கினியர் 'அளபிறந் துயிர்த்தலும் ஒற்றிசை நீடலும் நரம்பின் மறைய என்மனார் புலவர்' என்றும், 'இசையொடு சிவணிய உள என மொழிப' என்றும் இரண்டு முடிபாக்கி, "மூற்கூறிய ......என்று கூறுவர் புலவர், அங்ஙனம் அளபிறந்தும்...உள என்று கூறுவர் ஆசிரியர்"* என்றும் பொருள்கூறி, 'சிவணிய' என்பது தொழிற்பெயர் என்றும், 'இங்ஙனம் பொருள்கூறலே ஆசிரியர்க்குக் கருத்தாயிற்று' என்றும்எழுதினார். அன்றியும், 'மாத்திரையளவும்' என்னும் செய்யுளியற் சூத்திரத்தில், 'மேற்கிளந்தன்ன' என்னும் மாட்டேற்றிற்கு இவ்வோத்தினுள் வேறோர் சூத்திரம் இல்லையென்றும், இவ்விலக்கணம் கூறாக்கால், செய்யுட்குப் பா என்னும்உறுப்பு நிகழாது அவை உரைச்செய்யுட்போல நிற்றலின், இவ்விலக்கணங் கூறவே வேண்டும் என்று உணர்க' என்றும் கூறினார்.

இச்சூத்திரத்தை அவ்வாறு பிரித்துக் கூட்டுதல் வேண்டாதாகலானும், சிவணிய என்னும் சொல் ஈண்டுப் பெயரெச்சமாதலே யன்றி வினையாலணையும் பெயராதல் அமைதியின்மையானும், 'குறுமையும் நெடுமையும்'(மொழிமரபு.17) என்னும் சூத்திரத்திற்கு நெட்டெழுத்தும் ஒற்றெழுத்தும் அளபெடுத்து மிக்கு ஒலித்தலைப் பொருளாக அவரே கூறியுள்ளாராகலானும், எழுத்துக்களின் அளபினை ஆசிரியர் இவ்வியலில், 3,4,11,12,13 ஆகிய சூத்திரங்களிற் கூறியுள்ளாராகலின், முன்னர்ச் செய்யுளியலில், 'மாத்திரையளவும்... மேற்கிளந்தன்ன' எனக்கூறும் மாட்டேறு செல்லுமாகலானும், செய்யுளின் உறுப்பாகிய பாவினைக் குறித்து ஈண்டு விதி கூறுதல் வேண்டாதாகலானும், ஈண்டே அதற்கும் விதி கூறினாராயின், 'மாத்திரையளவும்... மேற்கிளந்தன்ன' என்று, மாத்திரையளவினை இவ்வியலோடு மாட்டெறிந்தாற்போல, பாவினைக் குறித்துக் கூறுமிடத்தும் மாட்டெறிதல் வேண்டும்; அங்ஙனம் மாட்டெறிந்திலாமையானும், இச்சூத்திரவுரையில் 'இவ்வாறே சூத்திரங்களை நலிந்து பொருளுரைப்பன வெல்லாம் கொள்க' என்று அவர்தாமே எழுதியிருத்தலின் இச்சூத்திரத்திற்கு நலிந்து பொருள் கூறியிருத்தலை அவரே உடன்பட்டுள்ளாராகலானும், அவர் நலிந்து கூறிய இப்பொருள் மெய்ப்பொருளாதலின்று. இவ்வாறு நச்சினார்க்கினியர் நலிந்து பொருள் கூறிய சூத்திரங்களை ஆங்காங்குக் காட்டுவேன்.

---

* பார்க்கம் 143, 144ல்பார்க்க

இனி, பிறன் கோட்கூறல் என்னும் உத்திக்கு உதாரணமாக, 'அளபிறந்துயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்' எனவும்... 'அவ்வந் நூலுட் கொள்ளுமாற்றான் அமையும் என்றவாறாயின' (தொல். மரபி.110) என்று பேராசிரியர் கூறியிருத்தலானும், இச்சூத்திரம் இசை நூலார் கொள்கையைக் கூறியதேயாதல் விளங்கும்.

இசை நூலில், உயிரெழுத்துப் பன்னிரண்டு மாத்திரை நீளும் என்பதுவும், ஒற்றெழுத்துப் பதினொரு மாத்திரை நீளும் என்பது வும் நன்னூல் உரையால் (நன். எழுத். 46) அறியப்படும்.

### சுப்பிரமணிய சாஸ்திரியார்

இளம்பூரணர் 'மறைய' என்ற விடத்து அகரத்தைச் சாரியை யாகவும், 'மறை' என்றதை ஏழாம் வேற்றுமைப் பெயராகவும் கொண்டனர்.

குஐ ஆன் என வரூஉம் இறுதி
அவ்வொடு சிவணும் செய்யு ளுள்ளே (சொல்.108) என்ற

விடத்து கு ஐ ஆன் இவற்றின் பின்னரே அகாரச் சாரியை வரும் என ஆசிரியர் கூறியிருக்க, ஏழாம் வேற்றுமைக்குப் பின் அகரச் சாரியையைக் கூறினர் என்பது பொருந்தவில்லை. 'மறைய' என் றதைக் குறிப்பு வினையாலனையும் பெயராகக் கொளல் நலம்.

'புலவர்' என்ற சொல்லானும் 'மொழி' என்ற சொற்கு எழுவா யானும் முதனூலாசிரியராகிய அகத்தியனாரே குறிக்கப்படுவர் என்பர் இளம்பூரணர். சில விடங்களில் ஆசிரியர் (எழுத் 390) என்றும், சில விடங்களில் 'புலவர்' என்றும் தொல்காப்பியனார் கூறுவது நோக்கற்பாலது. 'புலவர்' என்ற சொல்லான் தனக்கு முன் உள்ள இலக்கண ஆசிரியர் பலரைக் குறிக்கின்றனரோ என்ற ஐயம் உண்டாகின்றது.

இதனை ஈண்டுக் கூறியது எற்றுக்கெனின், அளபிறந்துயிர்த் தலும், ஒற்றிசை நீடலும் யாழிற் பாடப்பட்ட செய்யுட் கண்ண என்றும், நீட்டத்தின் அளவு இசை நூலால் அறியத்தகும் என்றும் உணர்த்தற் பொருட்டென்க. நச்சினார்க்கினியர் இச்சூத்திரத்தை

"அளபிறந் துயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்
நரம்பின் மறைய என்மனார்புலவர்,"
"இசையொடு சிவணிய உளவென மொழிப" என

இரு தொடராக்கி, 'இசையொடு சிவணிய' என்றதற்கு 'ஓசை யொடு பொருந்திய நால்வகைச் செய்யுட்களுக்கும்' எனப்பொருள்

கூறினர். அவ்வாறு கூறுதற்குக் காரணம் ' மாத்திரையளவும்...... வேறோர் சூத்திரம் இன்மையின்''* எனக் கூறினர்.

நீட்டம் வேண்டின் அவ்வள புடைய
கூட்டி யெழூஉதல் என்மனார் புலவர் (தொல்.எழுத் 6)

குன்றிசை மொழிவயின் நின்றிசை நிறைக்கும்
நெட்டெழுத் திம்பர் ஒத்தகுற் றெழுத்தே (தொல்.எழுத் 41)

ஐ ஔ என்னும் ஆயி ரெழுத்திற்கு
இகர வுகரம் இசைநிறை வாகும் (தொல்.எழுத் 42)

முதலிய சூத்திரங்களான் இசைநிறைக்காக எழுத்துக்களின் அளவு மிகும் என்றது பெறப்படுதலின் அவர் அவ்வாறு கூறவேண்டுவ தின்று. அன்றியும் அவர் கூறிய முறைப்படி வாக்கியபேதம் என்ற குற்றத்திற்கு இச்சூத்திரம் இடனாகும்.

## வெள்ளைவாரணனார்

இசையின் அளவிறந்திசைக்குங்கால் உயிர் பன்னிரண்டு மாத்திரை யீறாகவும் ஒற்று பதினொரு மாத்திரையீறாகவும் இசைக்கும் என்பர் இசை நூலார். அவர் கொள்கையை இயற்றமிழாசிரியராகிய இவர் பிறநூல் முடிந்தது தானுடம்படுதல் என்னும் உத்தியால் தழுவினார்.

## பிற குறிப்புக்கள்

மேற்கோள்:

பிறன்கோட்கூறல் உத்திக்கு எடுத்துக்காட்டு இச்சூத்திரம் என்பர் பேராசிரியர் (தொல்.பொருள்.665)

நூல்மரபு உரைவளம் முற்றும்

---

*பக்கம் 144ல்பார்க்க

# உரைச்சொற்றொடர் விளக்கம்

**நூற்பா: 1**

எழுத்து உணர்த்திய எட்டுவகை. (பக். 1,4.)

**எழுத்து இனைத்து என்றல்:**(பக்.1,4) 'எழுத்தெனப்படுப ...முப்பஃது என்றதும், 'சார்ந்துவரல் மரபின் மூன்று' என்றதும் முதலாயின.

**இன்ன பெயர என்றல் :** (பக்.1,4) எழுத்து, உயிர், மெய், சார்பு, குறில், நெடில் என்பது முதலாயின.

**இன்ன முறைமைய என்றல் :** (பக்.1,4) "அகரமுதல் னகர இறுவாய்" என்பது போல்வன.

**இன்ன அளவின என்றல்:** (பக்.1,4) அவற்றுள், அஇஉஎஒ...ஓரளபிசைக்கும் என்பது போல்வன

**இன்னபிறப்பின என்றல்:** (பக்.1,4) பிறப்பியலிற் கூறப்படுவன.

**இன்ன புணர்ச்சிய என்றல்:**(பக்.2,4) தொகை மரபு, உருபியல் முதலியவற்றிற் கூறப்படும் இயல்பு, விகாரப்புணர்ச்சிகள் பற்றியன.

**இன்னவடிவின என்றல்:** (பக். 2,4)உட்பெறு புள்ளி உருவாகும்மே (14) மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல் (15) என்பன போல்வன.

**இன்னதன்மைய என்றல் :** (பக்.2,4) 'குறுமையும் நெடுமையும் அளவிற் கோடலின் நெட்டெழுத் தெல்லாம் தொடர்மொழி யியல" என்பது போல்வன.

வடிவும் தன்மையும் (பக்.2,4) நமக்கு உணர்த்தலாகாமையின் ஆசிரியர் கூறிற்றிலர் என்பர் இளம்பூரணரும் நச்சினார்க்கினி

யரும், ஆசிரியரால் ''உட்பெறுபுள்ளி'' (14), ''மெய்யின் இயற்கை" (15), ''புள்ளியில்லா எல்லா மெய்யும்" (17) என்ற நூற்பாக்களால் வரிவடிவம் குறிக்கப்பட்டமையாலும், 'அகர்' என்பதில் ரகரம் குறி லிணைக்கீழ் ஒற்றாக நிற்குமிடத்து நெடிற்கீழ் ஒற்றாக நின்ற தன்மையது என்று கூறப்பட்டமையாலும் அவ்விரண்டும் ஆசிரியர் இந்நூலில் கூறியுள்ளார் என்னலாம்.

எட்டிறந்த பலவகை (பக்.2,5)

1. உண்மைத் தன்மை: எழுத்துக்களின் குறுமை, நெடுமை, வன்மை, மென்மை, இடைமைகளும், பிறப்புத்தன்மைகளும், ''மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்'' என்றாற் போன்ற இயக்கத் தன்மைகளும் பிறவுமாம்.

2. குறைவு: (பக்.2,5) மாத்திரைச் சுருக்கம். குற்றியலுகரம், குற்றியலிகரம் ஐகார ஔகாரக் குறுக்கங்கள், மகரக்குறுக்கம் முதலியன.

3. கூட்டம்: (பக்.2,5) ''மெய்யும்உயிரும் கூடும் உயிர்மெய்க் கூட்டம் புள்ளியில்லா எல்லா மெய்யும்" (17) என்றாற் போல்வன.

4. பிரிவு: (பக். 2, 5) எழுத்தின் பிரிவு (மெய் + உயிர்) ''மெய் உயிர் நீங்கின் தன் உருவாகும்" என்றாற் போல்வன.

5. மயக்கம்: (பக்.2, 5) இடைநிலை மயக்கம் கூறுவன. (23-30)

6. மொழியாக்கம்: (பக். 2, 5) எழுத்துகள் மொழியாந்தன்மை பெறுதல். ''ஓரெழுத்தொரு மொழி'' (45) என்பது போல்வன.

7. நிலை: (பக்.2,5) மொழி முதல்நிலை இறுதிநிலை பற்றியன (69-82)

8. இனம்: (பக். 2,6) வல்லினம் முதலியன. (19-21)

9. ஒன்று பலவாதல் (பக்.2,6) ஒரெழுத்தே பல எழுத்தாதல். 'செம்பொன்பதின்றொடி' என்பதில் 'பொ' என்ற எழுத்து' பொன் ஆராய்ச்சி யுள்வழி அவ்வெழுத்தாகவும், செம்பு ஆராய்ச்சி யுள்வழி பு+ஒ என ஈரெழுத்தாகவும் ஆதல் போல்வன. "எழுத்தோரன்ன......நிலைஇய பண்பே'' (42) என்பது போல்வன.

10. திரிந்ததன் திரிபு அது என்றல்: (பக் 2,6) விகாரப் பட்டதின் விகாரத்தை விகார எழுத்தாகக் கொள்ளாமல் மூல எழுத்தாகக் கொள்ளுதல். உதாரணம் கஃறீது. இது கல் + தீது எனப் பிரிக்கப்படும், நிலை மொழியீற்றில் உள்ள லகர

ஒற்றைக் கண்ட வருமொழி முன் உள்ள தகர ஒற்று, றகர ஒற்றாக மாறும் என்பது விதி. (கல்+றீது) லகர தகர ஒற்றுக்கள் இடைநிலை மயக்கம் பெறா. ஆய்தமும் தகர ஒற்றும் மயக்கம் பெறும். அஃது என்பதில் மயங்கியது காண லாம். கஃறீது என்பதில் நிலை மொழியீற்று லகரம் ஆய்த மாகத் திரிந்தது; வருமொழி முதல் தகரம் றகரமாகத் திரிந்தது. தகரம் றகரமாகத் திரிய வேண்டுவதில்லை; என்றாலும் நிலைமொழி யிறுதி லகரம் திரிந்த ஆய்தத்தை, வருமொழித் தகரமானது ஆய்தமாகக் கருதியிருப்பின் தான் திரியாது நிற்கும்; அவ்வாறு கருதாமல், அவ்வாய்தத்தின் முன்னைய வடிவமாகிய லகர எழுத்தாகவே கருதியதால் (லகரத்துக்கும் தகரத்துக்கும் இடைநிலை மயக்கம் இன்மை யால்) தகரம் றகரமாகத் திரிந்தது.

(திரிந்தது—லகரம்; திரிபு: ஆய்தம்; அது என்றல்: அந்த லகரம் எனக் கருதுதல்)

11. திரிந்ததன் திரிபு பிறிது என்றல்: (பக். 2,6) விகாரப் பட்டதின் விகாரத்தை மூல எழுத்தாகக் கொள்ளாது வேறெழுத்தாகவே கொள்ளுதல். உதாரணம் மரக்கோடு. மரம் என்ற சொல் வேற்றுமையில் வருமொழி வல்லெழுத் தோடு புணருமிடத்து இறுதி மகரம் கெட, 'மர' என நிற்கும். 'கோடு' என்பதன் முதல் ககர மெய்யானது, 'மர' என்ற திரிந்த சொல்லின் இறுதியை மகர இறுதி எனக் கருதாமல் அகர இறுதியாகவே கருதித் தான் மிக்கு முடிந்தது. இவ் வுதாரணத்தில் திரிந்த எழுத்து மகரம்; அதன் திரிபாவது தான் கெட்டு அகர ஈறு என்பதற்கு இடம் கொடுத்தல். பிறிது என்றலாவது அகர இறுதியை முன் எழுத்தாகிய மகர இறுதி எனக் கருதாமல் தனி எழுத்தாக—அஃதாவது அகர இறுதியாகவே கருதுதல்.

12. திரிந்ததன் திரிபு அதுவும் பிறிதும் என்றல்: (பக். 2,6) விகாரப் பட்டதின் விகாரத்தை மூல எழுத்தாகக் கொள்ளு தலும் வேறு எழுத்தாகக் கொள்ளுதலும் உதாரணம் நினவ கைகள், நினதுகை என்பன. இவற்றின் நிலைமொழிகள் நீ+அ, நீ+அது எனப் பிரிக்கப்படும். அ, அது என்பன ஆறாம் வேற்றுமையின் பன்மை ஒருமை உருபுகள். 'நீ' என்பது, 'நி' எனக் குறுகி, னகர ஒற்று சேர்ந்து 'நின்' என்றாகும். பின் அகரம் சேர்ந்து 'நின' என்றாகும். ஆவ்

வாறாயின் நின+அ எனவும், நின+அது எனவும், இவ்விரண்டும் பிரிக்கப்படும். பன்மை உருவாகிய 'அ' என்பது 'நின' என்பதின் ஈற்றெழுத்தின் அகரத்தைப் பொருட்படுத்தாமல் தான் நிலைத்து நின்றது. ஏன் எனின் தான் முன்னின்ற அகரத்தோடு இயைந்து வருவதில்லையென்றாலும் அந்த அகர எழுத்தைத் தனி எழுத்தாகக் கருதாது அது வருவதற்கு முன்னைய வடிவாகிய (நின் என்பதில்) னகர ஒற்றாகவே கருதியது. மெய்யெழுத்தின் மேல் தான் (உருபு 'அ') ஏறி முடியும் இயல்புடைய உயிர் ஆதலின் னகர ஒற்றை நோக்கிக் கெடாது நின்றது. இவ்வாறு நிற்பது திரிந்ததன் திரிபு அது என்று கருதியதாலாகும். பின்னர் நின என்பதன் இறுதி அகரத்தையும் உருபு அகரத்தையும் உடம்படுத்த வகரமெய்வந்து 'நினவ' என முடிந்தது.

'நினது' என்பது நின+அது எனப் பிரிக்கப்பட்டு 'அது' என்பதன் அகர உயிர் 'நின' என்பதன் இறுதி அகரத்தைத் திரிந்த வேறு தனி எழுத்தாகவே கருதியதால் தனக்கும் அவ்வுயிர்க்கும் மயக்கம் இன்மையின் தானே கெட்டது. (நின+து=நினது) இதுதிரிந்ததன் திரிபுபிறிது எனக் கருதிய நயம்.

நின என்பதில் இறுதி னகரம் திரிந்ததாம். அதன் திரிபாவது தான் மெய்யாய் இருந்து அகர உயிர் ஏறப் பெற்றதாம். அந்த அகரத்தை அகரமாக எண்ணாமல் பழைய னகர ஒற்றாக நினைத்தல் அது என நினைத்தலாம். இவ்வாறு நினைத்தது. பன்மையுருபாகிய 'அ' என்பது. இறுதி அகரத்தைத் தனி எழுத்தாகவே—அதாவது னகர ஒற்றாகக் கருதாது பிறிதோர் எழுத்தாகவே கருதியது 'அது' என்ற ஒருமை யுருபின் அகரம்.

இனி நினவ, நினது என்பனவற்றில் வருமொழிகள் வேறு வேறு காட்டப்பட்டன. வருமொழி ஒன்றாகவே உள்ள உதாரணத்தில் இதைக் காண்போம். 'கலத்துக்குறை' என்பதை உதாரணமாகக் கொள்ளலாம். இது, கலம்+குறை எனவும், கலன்+குறை எனவும் பிரிக்கப்படும்.

கலம்+குறை எனப் பிரிக்கப்படும்போது 'கலம்' என்ற சொல், ''மகர இறுதி வேற்றுமையாயின், துவரக் கெட்டு வல்லெழுத்து மிகுமே" (புள்ளி 3.0) என்ற விதிப்படி மகரங் கெட்டுக் கல' என நிற்கப் பின் வருமொழி வல்லெழுத்து மிக்குக் 'கலக்குறை' எனவரும். ''அத்திடை வரூஉம் கல மென்னளவே" (தொகை 26) என்ற விதிப்படி 'அத்து'ச்சாரியை

வரக் 'கலத்துக் குறை' எனவரும். இதில் வருமொழி வல்லெழுத்தானது, 'கலம்' என்பது திரிந்த 'கலத்து' என்ற சொல்லை வேறுபட்ட பிறிதான சொல்லாகக் கருதாமல் பழைய வடிவாகிய 'கலம்' என்ற சொல்லாக்வே கருதி மிகுந்தது. இதில் திரிந்தது 'கலம்' என்னும் சொல். அதன் திரிபாவது அத்துப் பேற்றுடன் மகரம் கெட்டுக் 'கலத்து' என நின்றது. 'அது' என்றலாவது பிறிதான திரிந்த சொல் எனக் கருதாது பழைய 'கலம்' என்ற சொல்லாகவே கருதியது. அதனால் கலம்+குறை என்பன கலத்துக் குறை எனப் புணருமிடத்து வல்லெழுத்து மிகுதியானது ஈற்றுப் பொது முடிபால் வந்ததாதலின் திரிந்ததன் திரிபு அது என்னும் நயத்தால் வந்ததென்க.

கலன்+குறை எனப் பிரிக்கப்படும்போது இடை வரும் அத்துச்சாரியை காரணமாக நிலைமொழியீற்று னகரம் கெட்டுக் 'கலத்து' என நின்று பின் வல்லெழுத்து மிக்குக் 'கலத்துக்குறை' என்றாகும். இதற்கு, "அத்தேவற்றே" என்னும் நாற்பாவிதி ( ) இதில் வருமோழி வல்லெழுத்தானது 'கலத்து' என்ற சொல்லை முன்னைய 'கலன்' என்ற சொல்லாகக் கருதாமல் திரிந்த பிறிதான சொல்லாகவே கருதியதால் அதில் உள்ள சாரியை நோக்கி மிகுந்தது. திரிந்தது 'கலன்' என்ற சொல். அதன் திரிபாவது அத்துச் சாரியையுடன் சேர்ந்து னகரங் கெட்டுக் 'கலத்து' என்றானது; பிறிது என்றலாவது கலன் என்ற சொல்லாகக் கருதாமல் திரிந்ததான 'கலத்து' என்ற வேறு சொல்லாகவே கருதியது. எனவே கலன்+குறை என்பன 'கலத்துக்குறை' என வருமிடத்து வல்லெழுத்து மிகுதியானது, ஈற்றுப் பொது முடிபான் இன்றிச் சாரியை நோக்கிய முடிபால் வந்ததாதலின் திரிந்ததன் திரிபு பிறிது என்னும் நயத்தான் வந்ததாம்.

திரிந்ததன் திரிபு அது எனக் கருதுதலும், பிறிது எனக் கருதுதலும் அதுவும் பிறிதும் எனக் கருதுதலும் நிலைமொழியிறுதி பற்றி வருமொழியின் முதல் எழுத்தின் தொழில் எனக் கொள்க. இவ்வாறு கொள்வது இருசொற் புணர்ச்சியில் என்று கொள்க.

இம்மூன்றற்கும் நச்சினார்க்கினியர் காட்டிய நூற்பாக்கள் பொருந்துமாறில்லை.

13. நிலையிற்று என்றல்: (பக் 2,6) இன்ன இடத்து எழுத்து நிலைக்கும் என்றல். புணர்ச்சியிடத்து இன்ன எழுத்து மிக்கே வரும் என்றலும், இன்ன விடத்துத் திரிவது இன்ன விடத்துத் திரியாதே நிலைக்கும் என்றலும் போல்வன. 'சுட்டின் முன்னர் ஞநமத் தோன்றின், ஒட்டிய ஒற்றிடை மிகுதல் வேண்டும்' (206) எனவும், ''நூறூர்ந்து வரூஉம் ஆயிரக் கிளவிக்குக், கூறிய நெடுமுதல் குறுக்கமின்றே'' (393) என்வும் வருவன போல்வன.

14. நிலையா தென்றல்: (பக் 2,6) இன்ன இடத்து இவ்வெழுத்து நிலையாது என்றலும், இன்ன இடத்து நிலைப்பது இன்ன விடத்து நிலையாது என்றலுமாம். ''மகர விறுதி வேற்றுமை யாயின் துவரக்கெட்டு" (311) என்றதும், ''குறியதன் முன்னரும் ஓரெழுத்து மொழிக்கும், அறியத் தோன்றும் அகரக்கிளவி (227) என்பதில் நிலைக்கும் என்ற அகரம், "இராவென் கிளவிக் ககரம் இல்லை'' (228) என்பதில் நிலை யாது என்றலும் போல்வன. "ஆறன் உருபின் அகரக்கிளவி, ஈறாகு அகரமுனைக் கெடுதல் வேண்டும்" (எழு. 146) என்றதும் முன்னையது போல்வதாம்.

நிலை என்பதற்குப் புணர்நிலை எனக் கொண்டு நச்சினார்க் கினியர் கூறியன பொருந்துவனவல்ல.

நிலையிற்றும் நிலையாதும் என்றல் (பக். 2,6):
ஓரிடத்திலேயே நிலைப்பதும் நிலையாததும் கூறல்.
"வாழிய என்னும் சேயென் கிளவி
இறுதி யகரம் கெடுதலும் உரித்தே (எழு. 212)

என்பது போல்வன. தினை குறிது, தினைக்குறிது (எழு. 159) போன்ற உறழ்ச்சி முடிவுகளும் அன்ன. இதற்கு நச்சினார்க் கினியர் காட்டியது பொருந்துவதன்று.

கருவியும் செய்கையும் (பக் 26)

கருவி என்பது நிலைமொழி ஈறும் வருமொழி முதலும் புணர்தற்குரிய விதிகள் கூறுதற்கு முன்னர் அமைத்துக் கொள்ளும் முன் ஏற்பாடாம். இது சமைத்தல் தொழிலுக்கு முன்னர்க் காய்களைத் திருத்தியும் அரிசியைக் கல் முதலிய நீக்கியும் அமைத்துக் கொள்ளும் முன் ஏற்பாடு போன்றது.

செய்கை. நிலைமொழியீறும் வருமொழி முதலும் புணரும் புணர்ச்சி பற்றிக் கூறுவது.

கருவி நான்குவகை; செய்கை நான்குவகை; இவற்றை விளக்கம் கருதி முதலில் செய்கை பற்றியும் பின்னர்க்கருவி பற்றியும் காண்போம்.

அகச்செய்கை. நிலைமொழியீறு பற்றியது. தொகை மரபு முதலிய ஒத்துகளுள் இன்ன ஈறு இன்னவாறாம் எனக் கூறுவன எல்லாம் அகச்செய்கை பற்றியன.

வாழிய என்னும் சேயென் கிளவி
இறுதி யகரம் கெடுதலும் உரித்தே (எழு.212)

எடுத்துக்காட்டு : வாழிய+கொற்றா=வாழி கொற்றா.

இந்நூற்பா நிலை மொழியீறு பற்றியதாதலின் அகச்செய்கை நூற்பா.

புறச்செய்கை. வருமொழியின் முதல் எழுத்துப் பற்றிக் கூறுவது.

லனவென வருஉம் புள்ளி முன்னர்த்
த நவென வரிற்றன வாகும்மே (எழு.150)

எ. டு : கல்+தீது=கலறீது; கல்+நன்று=கல்னன்று
பொன்+தீது=பொன்றீது; பொன்+நன்று=பொன்னன்று

அகப்புறச் செய்கை : நிலைமொழியீற்றை நோக்கியும் வருமொழி முதலை நோக்கியும் கூறுவது.

உகரமொடு புணரும் புள்ளி யிறுதி
யகரமும் உயிரும் வருவழி யியற்கை (எழு.164)

எ.டு : உரிஞ்+யானா=உரிஞ்யானா.
உரிஞ்+அனந்தா=உரிஞ் அனந்தா

இது உகரமொடு புணரும் புள்ளியிறுதி என்பதால் நிலைமொழி பற்றியது என்பது உயிரும் யகரமும் வருவழி என்பதால் வருமொழி பற்றியது என்பதும் பெறப்படுதலின் அகமும் புறமும் ஆயிற்று. நிலைமொழி யிறுதியில் மாற்றம் இருந்தால் அகச்செய்கை என்னலாம்; ஆனால் இல்லை; வருமொழி முதலில் மாற்றம் இருந்தால் புறச்செய்கை என்னலாம்; ஆனால் இல்லை. என்றாலும் இருமொழிப் புணர்ச்சி பற்றியதாதலின் இந்நூற்பா அகப்புறச் செய்கை எனப்பட்டது.

புறப்புறச் செய்கை : நிலைமொழியீற்றையும் வருமொழி முதலையும் புணர்க்க அவற்றில் யாதோர் விதியும் இல்லாமல் அவற்றிற்கு அப்பாற்பட்ட ஒன்றைப் பற்றியது.

எல்லா மொழிக்கும் உயிர்வரு வழியே
உடம்படு மெய்யின் உருபுகொளல் வரையார் (எழு.141)

எ.டு : விள + அழகிது = விளவழகிது.

நிலைமொழியீற்று உயிரும் வருமொழி முதல் உயிரும் யாதொரு மாறுபாடுமின்றி அப்படியே நின்றன. உரிஞ் + அனந்தா என்ற விடத்தும் அவ்வாறு மாறுபாடின்றி யிருந்தாலும் அப்படியே புணரும் இயல்புப் புணர்ச்சிவிதி உண்டு. அதுபோல, விளவழகிது என்பதில் இயல்புப் புணர்ச்சி விதி இல்லை. ஏன் எனின் உயிரும் உயிரும் சேர்தல் இல்லை. அதனால் இரண்டுயிர்களையும் சேர்க்க உடம்படு மெய் வந்தது. எனவே நிலைமொழியீறு பற்றியும் இன்றி வருமொழி முதல் பற்றியும் இன்றிப் பிறிதோர் எழுத்து பற்றிக் கூறியிருத்தலின் இந்நூற்பா புறப்புறச் செய்கை கூறியதாயிற்று.

எல்லா மொழிக்கும் என நிலைமொழி பற்றிக் கூறியிருந்தாலும் உயிர் வருவழி என வருமொழி பற்றிக் கூறியிருந்தாலும் இவ்விரண் டுயிர்கட்கும் புணர்ச்சிச் செய்கை யின்மையின் அகமும் அன்று; புறமும் அன்று. ஆயினும் இடையில் உடம்படு மெய் வந்து இரண்டினையும் புணர்த்தும் என்பார் உடம்படு மெய்யின் உருபு கொளல் வரையார்' என்றமையின் ஓராற்றால் செய்கையும் உண்டென்ன வேண்டும். அதனால் இந்நூற்பா புறப்புறச் செய்கையாம்.

அகக்கருவி : நிலைமொழியை வருமொழியோடு புணர்த்தற் குரிய நிலையில் ஒழுங்கு படுத்துவது.

எகர ஒகரம் பெயர்க்கீ றாகா
முன்னிலை மொழிய என்மனார் புலவர் (எழு 273)

உயிர்மயங்கியல் நிலைமொழி உயிர்ஈறு வருமொழி முதல் வல்லெழுத்துடன் புணரும் போது எவ்வாறாம் எனக்கூறுவது. அவ்வகையில் எகர ஒகர வீறுகள் பற்றிக் கூற நேர்ந்த போது அவ்விரண்டும் பெயர்க்கு ஈறாதல் இல்லையாதலின் அதைக் கூற வேண்டுவது இன்றியமையாததாயிற்று. எனவே நிலைமொழியீறு பற்றிய முன்னேற்பாடாக இது அமைதலின் இது அகப்புறக்கருவி யாயிற்று.

புறக்கருவி: நிலைமொழி வருமொழிகளின் இயல்புகளைக் கூறுவது. மொழிமரபு புறப்புறக்கருவியாம். மொழிகளில் சார்

பெழுத்துகள் பயிலுமாறும், ஆள்பெடையும், மொழியாக்கமும் போலியும் முதலிய செய்திகள் யாவும் மொழிமரபில் கூறப்பட்டன. இவையனைத்தும் நேரே சொற்புணர்ச்சிக்குரியன வல்ல என்றாலும் சொற்களின் இயல்பைப் பற்றியன ஆதலாலும், உயிர் மயங்கியல் முதலிய இயல்புகளில் இம்மொழி மரபில் ஆண்ட பெயர்களையும் விதிகளையும் அப்படியே ஆளுதலினாலும் மொழிமரபு புறக்கருவியாம். மொழிமரபில் கூறிய தொடர்மொழி, (12) என்பது, தொகைமரபு (3) குற்றியலுகரப் புணரியல் (22) ஆகியவற்றில் ஆளப்படுதல் காண்க.

அகப்புறக்கருவி : புணர்தற்குரிய நிலை வருமொழிகளின் இயல்பும் இடையில் வரும் சொல் (சாரியை) பற்றியும் கூறுவது. புணரியல் அகப்புறக்கருவியாம். மொழி மரபிற் கூறியது போலப் பொதுவாகச் சொற்களைப் பற்றிக் கூறாமல் நிலை வருமொழி களாகப் புணர்தற்குரிய சொற்களாகக் கொண்டு அவற்றின் இயல்பு களைக் கூறினமையால் அகக்கருவி என்றும், நிலைவருமொழி களுக்கு இடையில் வேறான சாரியைப் புணர்ச்சியும் உண்டு என்று அச்சாரியைகளின் திரிபு முதலியனவும் கூறினமையால் புறக்கருவி என்றும் கொள்ளலாம்.

புறப்புறக்கருவி : சொல்லுக்குக்காரணமான எழுத்துக்களைப் பற்றியது. நூன்மரபும் பிறப்பியலும் புறப்புறக்கருவி. நூல்மரபில் குறிக்கப்பட்ட குறில் நெடில் மெய் முதலிய பெயர்கள் புணர்ச்சி விதிகூறும் இயல்களில் ஆளப்படுதலாலும், பிறப்பியலில் வரும் எழுத்துக்களின் பிறப்பிலக்கணம் புணர்ச்சி பற்றிய இயல்களுக்குத் துணை புரிதலானும் நூன்மரபும் பிறப்பியலும் செய்கைக்குத் துணை புரிவனவாம்; தேக்குடம் என்பது தேங்குடம் எனவரும். ககர நகரங்கள் பிறப்பு முயற்சியால் ஒத்தன. அ + ஆடை = அவ்வாடை என வகர மெய் வருவது உயிரும் இடையினமும் பிறப்பிட ஒப்புமையாலாம்.

செய்யுள் இன்பம்நோக்கி வகரம்நீக்கிப்பகரம் இடப்பட்டது. (இளம் பக்4)

'படுப' என்ற சொல் படு + அ எனப் பிரிக்கப்படும். அவ் விரண்டும் சேருமிடத்து இடையில் வகர உடம்படுமெய் பெற்றுப் 'படுவ' எனவரும். அவ்வாறின்றிப் பொருத்த மில்லாத 'ப்' என்பது இடப்பட்டுப் 'படுப' என வந்தது. ஏன் எனின் செய்யுளின்பம் நோக்கி யென்க—இளம்பூரணர்,

நச்சினார்க்கினியர் உடம்படு மெய்யாக ப், வ் என்ற இரண்டுமே படு + அ என்பன சேருமிடத்து வரலாம் என்ற கொள்கையினர் ஆதலின் வகரம் இன்றிப் பகரம் வந்ததற்குக் காரணம் கூறுவார் "இன்னோசைத்தாய் நிற்றலின் படுப என்றே பாடம் ஓதுக" என்றார். (பக்.9)

அகரமுதல் னகரவிறுவாய்... முப்பஃதென்ப (இளம்பக்.7)

'அகர முதல்' என்பதற்கு 'அகரமாகிய முதல் எழுத்து, என்பது பொருள். எனவே அஃது இருபெயர் ஒட்டாம். முதல்என்பது,முதல் எழுத்து என்ற பொருளில் இருந்துபின்னர் அம்முதல் எழுத்தை யுடையன' என்ற பொருளில் வந்தது, அதனால் ஆகுபெயராம். அகரமாகிய முதல் எழுத்தையுடையனவாவன 'ஆ' முதல் 'ன்' வரையுள்ள எழுத்துகளாம். அவ்வாறே 'னகர விறுவாய்' என்பது னகாரமாகிய இறுதி யெழுத்து எனப்படும்; அஃது இங்கு னகாரமாகிய இறுதி யெழுத்தையுடைய எழுத்துக்கள் எனப் பொருள் படுதலின் இருபெயரொட்டாகு பெயராம். னகாரமாகிய இறுதியை யுடைய எழுத்துக்கள் அகர முதல் அகர ஒற்றுவரையுள்ள எழுத்துக்களாம். அகரத்தை முதலாகவுடையன 'ஆ' முதல் 'ன்' வரையென்றால் கூடும் எழுத்துக்கள் 29. னகரத்தை இறுதியாக வுடையன 'அ' முதல் 'ற்' வரையென்றால் கூடும் எழுத்துக்கள் 29. 'அகரத்தை முதலாக வுடையனவும் னகரத்தை இறுதியாகவுடையனவும் எனச் சேர்த்துச் சொல்லும் போதுதான் முப்பது என்ற எண் ஏற்படுமாற்றை யுணர்க. (அதனால்தான் அகர முதல் னகர இறுவாய் என்பதற்கு "அகரமாகிய முதலையுடையனவும் னகரமாகிய இறுவாயினையுடை யனவும் எனப் பொருள் கூறினார் இளம்பூரணர்.

தூக்கற்று நிற்கும் சொற்சீரடி (நச்.பக்.9) நாற்சீரான் முடியும் ஓரடி தூக்கு எனப்படும். 'எழுத்தெனப் படுப' என்றதில் இரு சீர்களே அடியாக வந்தன. எனவே தூக்கு நிலை அற்றது. அசையால் அமையும் சீர் அசைச்சீர் ஆம். இங்கே எழுத்தென, படுப என்ற இரண்டு சொற்களையே சீராகக் கொண்டமையின் சொற்சீர் எனப்படும். நாற்சீரடியாக

அமையாமையின் தூக்கு அற்றதாகவும், சொற்சீர்களே அமைந்தமையின் சொற்சீரடியாகவும் அமைந்தமையான் 'தூக்கற்று நிற்கும் சொற்சீரடி' என்றார்.

செறிப்பச் சேறல்: (பக். 10 நீண்ட குழலில் கூறுங்கால் அதன் உள் வழியிற் சென்று சொற்கள் வெளிப்படுதலைக் கேட்கின்றோம். அன்றோ? அவ்வாறு குழலில் ஓசையைப் புகுத்துதலையே செறித்தல் என்றும் அது சென்று வெளிப் படுதலைச்சேறல் என்றும் கூறினார்.

செறிப்பவருதல் (பக் 10) ஒரு குடத்தின் உட்புகுமாறு ஒலி செலுத்தின் அது அதில் தாக்கி மீளவும் வெளிப்படுதலைக் கேட்கிறோம். அதுவே செறிப்பவருதல் ஆம்.

இடையெறியப் படுதல் (பக் 10) (இடை = வெளியிடம் வெளியான இடத்தில் எடுத்தல் ஓசையாற் கூறப்படுதல்.

நீர்த்தரங்கம் (பக் 10)நீர் அலை; ஒருகுளத்தில் ஒரு கல்லை வீசின் அக்கல் விழுந்த இடத்திலிருந்து வட்டமாக அலைகள் பரந்து செல்வதுபோல வெட்ட வெளியிடத்தில் ஓர் ஓசையை எழுப்பின் அது எழுப்பியவனை இடையிட்டுச் சுற்றிலும் பரவுவதாம்.

## நூற்பா.2

சந்தனக்கோல் குறுகினவிடத்து...உயிர் ஆகற் பாலன: (பக் 45, 46)

சந்தனக்கோல் குறுகினாலும் பிரப்பங்கோல் என வேறு பெயர் பெறாது சந்தனக்கோல் என்றே பெயர் பெறுமாறு போல, இகர உகரங்கள் குறுகினவிடத்தும் வேறு பெயர் ஆகாமல் இகர உயிர் உகர உயிர் என்றே ஆம்,

அவற்றைப் புணர்ச்சி வேற்றுமையும்...வேறெழுத்தென வேண்டினார் என்க. (பக் 46) புணர்ச்சி வேற்றுமையாவது உயிர் மயங்கியலுள் முற்றுகரத்துக்கும் குற்றியலுகரப் புணரியல் குற்றுகரத்துக்கும் புணர்ச்சிவிதி கூறியதும், அவ் வாறே இகரத்துக்கு உயிர் மயங்கியலிலும் குற்றிய லிகரத்துக்குக் குற்றியலுகரப் புணரியலில் முதலிலும் கூறியதும் ஆம். பொருள் வேற்றுமையாவது இகரம் உகரம் எனவும், குற்றியலிகரம் குற்றியலுகரம் எனவும் பெயர் வேற்றுமை யாதல் கொள்க. அன்றி 'காது' என்ற சொல் முற்றுகரமாயின் வினைச் சொல்லாகவும் குற்றுகரமாயின் பெயர்ச் சொல் லாகவும் பொருள் வேறுபடுதல் எனினும் ஆம்.

நேர்பசை—உல்கு (பக். 46)
நிரைபசை—உலகு. (பக். 46)

நடுவுவாங்கியிட்டு எழுதுதலாவது (பக்.46) ஆய்தம்புள்ளி யாதலின் ஃஇவ்வாறு அது குறிக்கப்படும். அதனை இக்காலத் தார் ஃ என்ற வடிவில் ஒவ்வொரு புள்ளியையும் இடையில் இடமமையச் சுழித்து எழுதுவர். வாங்குதல்—வளைத்தல். நடுவு வாங்கியிடுதல்: நடுவே இடம் அமைய வளைத்திடுதல்;

எழுத்தியல் தழா ஓசைகள் (பக். 46) கடல் ஒலி, சங்கொலி, தும்மல் ஒலி, இருமல் ஒலி போல்வன.

## நூற்பா.3

குற்றெழுத்து என்பது பண்புத்தொகை (பக் .60) குறுமை+ எழுத்து = குறுகிய தன்மையாகிய எழுத்து.

இனி இசைப்பதும்...பொருட்டன்மை: இசைப்பது=இசைக் கப்படுவது, அது எழுத்து; இசை— அதன் ஓசை. வேறாகக் கருதலாவது எழுத்து வேறு அதன் ஓசை வேறு எனக்கருதுதல். அவ்வாறு வேறாகக் கருதற்க என்பது. பொருள் தன்மையாவது பொருளும் அதன் தன்மையுமாம். மலர் ஒரு பொருள்; அதன் தன்மை அழகும் மணமுமாம். மலர் என்ற மாத்திரத்தில்—பார்த்த மாத்திரத்தில் மலர் வேறு அதன் தன்மை வேறாகக் கருதாது போல 'அ' என்ற மாத்திரத்தில் எழுத்துவேறு அதன் ஓசைவேறு என்று கருதற்க என்பது.

## நூற்பா.6

ஆஅ ஈஇ ஊஉ....எழுத்தாந்தன்மையும் எய்திற்று: நெட் டெழுத்து ஏழும் பொருள்தரின் ஓ ஓரெழுத்தொரு மொழிகளாம் அவை ஓரெழுத்தொரு சொல் எனப்படும். அவைகளே ஆஅ என்பதுபோல அளபெடுக்கும் போது இரண்டு மாத்திரை யுடைய நெடிலும் அடுத்து ஒரு மாத்திரையுடைய குறிலும் சேர்ந்திருத்தலின் எழுத்திரண்டு சேர்ந்து நிற்பதுபோல் கருத வேண்டும்; அதனால் எழுத்தும் எழுத்தும்சேர்ந்து சொல்லாம் என்ப ஆகலின் அளபெடையும்சொல்லாம் தன்மை யெய்திற்று என்க. செய்யுளில் அசைபிரிக்குமிடத்து ஆஅ என்ற அளபெ டையில் ஆ என்பதை ஓர் அசையாகவும் அளபெடை எழுத் தாகிய 'அ' என்பதை ஓர் அசையாகவும் கொள்ளுமிடத்தில் அவ்வளபெடை எழுத்து ஓர் எழுத்தாம் தன்மை யெய்திற்று என்க.

இயற்கையளபெடை: ஆடூஉ, மகடூஉ, குரீஇ, சிறாஅர் முதலியவாக உலகவழக்கில் வருவன.

"எனவே எழுத்தாந் தன்மையும்.....எழுத்து நாற்பது என்றலும் பொருந்திற்று" இவ்வாறு எழுதியதால் இளம்பூரணர் அளபெடை எழுத்து எனத் தனியாக ஓரெழுத்து கொண்டவாறே நச்சினார்க்கினியரும் உடன்பட்டார் எனக் கருதலாம்.

கோட்டு நூறும்...ஆசிரியர் வேண்டினார்: சுண்ணாம்பும் மஞ்சளும் சேர்ந்தால் செந்நிறம் தோன்றும்; அதுபோல நெடிலும் குறிலும் சேர்ந்தால் தோன்றுவது அளபெடை. செந்நிறத்தில் சுண்ணாம்பும் மஞ்சளும் வெளிப்படாதவாறு போல அளபெடை ஓசையில் நெடிலிது குறிலிது என்ற பாகுபாடு புலப்படாது என்பது இதன் கருத்து.

இவை கூட்டிச்சொல்லிய.....புலப்படாவாறு போல: நெடிலோசையுடன் குறிலோசையைக் கூட்டிச் சொன்னால் தான் அளபெடை புலப்படும். நெட்டெழுத்தில் அளபெடுக்கும் தன்மை. அளபெடை ஓசைத் தன்மையிருந்தாலும் ஓரளபான குறில் ஓசையைச் சேர்த்தால்தான் அந்நெடில் அளபெடுப்பதாகும். எள்ளில் நெய் இருப்பதுண்மையாயினும் செக்கிலிட்டாட்டிய போதே அது வெளிப்படும்; அது போலக்கொள்க. எள்—நெட்டெழுத்து.

செக்கிலிட்டாட்டுதல் — அளபெடைக்கு வேண்டிய அளவான எழுத்தொலியைக் கூட்டுதல்,

நெய்—அளபெடை ஓசை.

**நூற்பா:7**

நாலுழக்குக் கொண்டது...அளவை பெறாமை அறிக: அவ் அளவைக்கு: இமைநொடி என்ற அளவைகளுக்கு. நாலுழக்குக் கொண்டது ஒரு நாழி என்று சொல்வதுபோல இன்னது இவ்வளவு கொண்டது ஓர் இமை எனவோ, இன்னது இவ்வளவு கொண்டது ஒரு நொடி எனவோ கூறும் அளவு இன்மையறிக.

நிறுத்தளத்தல்: எடைக்கல் கட்டுத் தராசு முதலியவற்றால் தூக்கி அளத்தல்.

பெய்தளத்தல்: பால், நெய் முதலியவற்றைப் படியில் ஊற்றி அளத்தல்.

**சார்த்தியளத்தல்:** ஒன்றன் அளவொடு ஒன்றன் அளவை ஒப்பிட்டளத்தல்.

**நீட்டியளத்தல்:** சாண், அடி அளவான கோல் கொண்டு அளத்தல்

**தெறித்தளத்தல்:** இசைக்கருவியை (யாழ்நரம்பு போன்றவற்றை)த்தாக்கி அல்லது சுண்டிச் செவிமூலம் மதித்தளத்தல்.

**தேங்கமுகந்தளத்தல்:** அரிசி போன்றவற்றைப் படியில் குவிய முகந்தளத்தல்.

**எண்ணியளத்தல்:** ஒன்று இரண்டு பத்து என எண்ணி அளத்தல்.

**முடிந்தது காட்டல்:** முன்னோரால் முடிவு செய்யப்பட்ட ஒன்றைத் தெரிவித்தல்.

**ஆணை கூறுதல்:** ஆசிரியர் ஒன்றை இப்படித்தான் கொள்ள வேண்டும் என்று (பிறர் ஏற்குமாறு) கூறுதல்.

## நூற்பா.11

மெய் என்பது அஃறிணை... அரையென்றார்: (நச்) மெய்கள் எனக்கூற வேண்டியதை மெய் என ஒருமையாகக் கூறினமையின் அதற்கியைய அரை என ஒருமையாற் கூறினார் (கணேச அய்யர்)

## நூற்பா.17

உருவு திரிந்துயிர்த்தல்

மேல் விலங்கு பெற்றன—கி, கீ
கீழ் விலங்கு பெற்றன—கு, கூ
கோடு பெற்றன—கெ, கே
புள்ளிபெற்றது—கா. காலைப்புள்ளியென்பர்)
புள்ளியும் கோடும் பெற்றன—கொ, கோ
இரட்டைக்கோடு பெற்றது—கை
கோடும் இரட்டைப்புள்ளியும் பெற்றது—கௌ

## நூற்பா.22

மற்றவற்றிற்கு வரையறை யின்மையின் — தனிமெய்யோடு தனிமெய்யொழிந்த மற்றவற்றிற்கு (உயிர்முன்மெய் உயிர் மெய்யும்) உயிர்மெய்முன் உயிர்மெய்யும் இன்ன எழுத்துடன் இன்ன எழுத்து வரலாம் என எளிதில் கூறும்படியான வரையறை யில்லாமையால்.

## நூற்பா.32

இவை சொல் நிலைமையிற்... சாரவைத்தார்: அ, இ, உ, ஆ, ஏ, ஓ ஆகியஇவைகள் தனிஎழுத்து நிலையில் குறிபெறாமல் சுட்டுப் பொருளும் வினாப்பொருளும் தரும் சொல்நிலைமையில் குறில் என்றும் நெடில் என்றும் குறி கூறியவிடத்தில் சாரவையாது மொழி மரபினைச் சாரவைத்தார்.

## நூற்பா.33

ஒற்றிசை நீடலும்...உயிர் மேற் சேறலின்: ஒற்றிசை நீடல் என்பதை விட்டு 'அளபிறந்துயிர்த்தலும் உளவென மொழிப' என நூற்பா ஓதியிருப்பின் அளபிறந்துயிர்த்தல் என்பது உயிர்க்கு மட்டுமே என்பது பெறப்பட்டு விடும். ஒற்றுக்கு அஃது உண்டென்பது பெறப்படாது. ஏன் எனின், இந்நூற்பாவின் முன் நூற்பாக்கள் உயிரைப்பற்றியே வர, இதில் அளபிறந்துயிர்த்தல் என்பது அவ்வுயிர் பற்றியதேயாகும் ஆகலின் என்க. எனவே 'ஒற்றிசை நீடலும்' என்பதும் கூறினார்.

மறையும் என்பதன்... செய்யுள் விகாரம்: நூற்பாவில் 'மறைய' என்றுளது. 'மறையும்' என்றிருக்க வேண்டுவது உம்மை விகாரத்தால் தொக்கி நிற்க 'மறை' என நின்றது. அத்துடன் 'அகரம்' விகாரத்தால் வர 'மறைய' என நின்றது. எனவே, 'மறைய' என்பதில் உம்மையும் அகரமும் தொக்கும் விரிந்தும் விகாரமாயின.

### *நூன்மரபு நூற்பாக்களுடன் பிற இலக்கண நூல்களிற் காணப்படும் ஒற்றுமைப் பகுதிகள்

சுருக்க விளக்கம்

| | |
|---|---|
| வீர — வீரசோழியம் | தொன் — தொன்னூல் விளக்கம் |
| நேமி — நேமிநாதம் | முத்து — முத்துவீரியம் |
| நன் — நன்னூல் | சுவாமி — சுவாமிநாதம் |
| இல.வி — இலக்கண விளக்கம் | அவி — அவிநயம். |

*உலகத்தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர், டாக்டர். ச. வே. சுப்பிரமணியன் அவர்கள் தொகுத்துப் பதிப்பித்த 'இலக்கணத் தொகை-எழுத்து, என்ற நூலின் துணை கொண்டு எழுதப்பட்டது.

## நூற்பா 1

வீர. 1. அறிந்த எழுத்து அம்முன் பன்னிரண்டாவிகள் ஆன கம்முன்
பிறந்த பதினெட்டு மெய்

நேமி. 1. ஆவி அகரமுதல் ஆறிரண்டாம்......
ககரமுதல் மெய்களாம் மூவாறும்.

நன். 59. உயிரும் உடம்புமாம் முப்பதும் முதலே

63. அம்முத லீராறு ஆவி கம்முதல்
மெய் மூவாறென விளம்பினர் புலவர்

இல. வி. 4. உயிரும் உடம்பும்என முதலிரு வகைத்தவற்று
உயிரீ ராறு மெய்மூ வாறென்ப
அம்முப் பானும் அதனது விரியே

தொன். 5. முதல் எழுத்து உயிர்ஈ ராறுஉடல் மூவாறே

முத்து. 5. உயிர்உடல் எனமுதல் ஓரிரு வகைய

சுவாமி. எழுத்ததிகாரம். 3. ஆறிரண்டுயிர் மூவாறுடல் அவ் விரிமுப்பான்

## நூற்பா 2

நன். 60 ஆய்தம், அஃகிய இ உ......சார்பெழுத்தாகும்

இல. வி. 5. குற்றிய லிகரம் குற்றிய லுகரம்
ஆய்தமொடு......சார்பின் பால

தொன். 5 சார்பெழுத்து......தனி ஆய்தத்தொடு
அஃகிய இ உ......என்ப

முத்து. 22. சார்பு...தனிநிலை

சுவாமி. எழுத். 3. ஆய்தம் ஒண்ணு குறள் இ உ...சார்பு

## நூற்பா 3

வீர. 2. ஐந்து குறில்

நேமி. 2. ஆன்றவுயிர் ஈராறும் ஐங்குறில்

நன். 64. அவற்றுள்
அ இ உ எ ஒக்குறில் ஐந்தே

இல. வி. 6 அ இ உ எ ஒக்குறில்

தொன். 8 குறில் அ இ உ எ ஒவ் ஐந்தே

முத்து. 8. அ இ உ எ ஒக்குறி லாகும்

சுவாமி. எழு. 3. அ இ உ எ ஒக் குறில் ஐந்து

அவி. 3 அ இ உ எ ஒ இவை குறிய

## நூற்பா 4

வீர. 2. ஈராறில்...நெடில் ஏழ்
நேமி. 2. ஆன்றவுயிர் ஈராறும்... ஏழ் நெடிலாகும்
நன். 65. ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ நெடில்
இல. வி. 6. ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ நெடில்
தொன். 8. நெடில், ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ ஏழே
முத்து. 10. ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ நெடில்
சுவாமி. எழு. 3. ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ நெடில் ஏழ்
அவி. 3. மற்றையேழ் நெட்டெழுத்தா நேரப்படுமே

## நூற்பா 7

நன். 100. இயல்பெழு மாந்தர் இமைநொடி மாத்திரை
இல. வி. 24. கண்ணிமை நொடியென நுண்ணியோர் உரைப்ப
கதான். 19. கண்ணிமை கைந்நொடி காட்டும் மாத்திரை
முத்து. 96. இயல்பெழு மாந்தர் இமைநொடி மாத்திரை
சுவாமி. எழு. 10. கண்ணிமைத்தல் நொடித்தல் மாத்திரை
அவி. 12. கண்ணிமை கைந்நொடி யெனவே

## நூற்பா 8

வீர. 1. அம்முன் பன்னிரண் டாவிகள்
நேமி. 1. ஆவி அகரமுதல் ஆறிரண் டாம்
நன். 63. அம்முதல் ஈராறு ஆவி
இல. வி. 6. அகரமுதல் ஈராறாம் உயிர்
தொன். 8. அம்முதல் ஈராறு உயிர்
முத்து. 6. அகரமுதல் உயிர் ஆறிரண் டாகும்
சுவாமி. எழு. 3. அகராதி யுயிர் ஈராறு

## நூற்பா 9

வீர. 1. ஆன கம்முன் பிறந்த பதினெட்டும் மெய்
நேமி. 1. ககரமுதல் மெய்களாம்-மூவாறும்
நன். 63. கம்முதல் மெய்ம் மூவாறெென விளம்பினர் புலவர்
இல. வி. 7. ககரமுதலா மூவாறு மெய்
தொன். 8. கம்முதல் மூவாறு உடல்
முத்து. 12. ககரமுதல் மூவாறும் காத்திரமாகும்
சுவாமி. எழு. 4. கம்முதல் மூவாறும் உடல்

## நூற்பா 10

வீர. 5. ஒங்குயிர் மெய், மற்றெழுத்தன்று உயிர் மாத்திரையே பெறும்
நேமி. 5. உயிர்மெய்-பெறும் உயிரே
நன். 89. உயிரளவாய்
சுவாமி. எழு. 9. உயிரளவாய்

## நூற்பா 11, 12, 13

வீர. 5. ஒற்றெழுத்து ஆய்தம் இ உ அரை
நேமி. 5. காலாம் குறுகும்......மெய் ஆய்தம் இஉக் குறுக்கம் அரை
நன். 99. அரை ஒற்று இஉக் குறுக்கம் ஆய்தம்
இல வி. 24. ஆய்தம் ஒற்று இஉக் குறுக்கம் அரை
தொன். 19. உஇக்குறள் ஒற்று ஆய்தம் அரையே
முத்து 101. அஃகிய இ உ ஆய்தம் மெய் அரையே
சுவாமி. எழு. 10. ஆய்தம் மெய் குற்றுகரம் குற்றிகரம் அரை...ம... குறுக்கமும் கால்
அவி. 13. பதினெண் மெய்யும் அதுவே, மவ்வொடு ஆய்தமும் அளபு அரை

## நூற்பா 15, 16

வீர. 9. எ ஒ மெய் புள்ளி பெறும்
நேமி. 3. எகர ஒகர மெய்யில் புள்ளி மேவும்
நன். 98. எய்தும் எகர ஒகர மெய் புள்ளி
இல. வி. 23. எய்தும் எகர ஒகர மெய் புள்ளி
தொன். 12. நீட்டல் சுழித்தல் குறில் மெய்க்கு இருபுள்ளி
முத்து. 41. எகர ஒகரத் தியற்கையு மற்றே
சுவாமி. எழு. 10. எகர ஒகர மெய்ப் புள்ளியுமாம்

## நூற்பா 17, 18

நேமி. 3. ஒங்குயிர்கள் ஒற்றின்மேல் ஏறி உயிர் மெய்யாம்
நன். 88. புள்ளிவிட். டவ்வொடு முன்னுரு வாகியும்
ஏனை யுயிரோ டுருவு திரிந்தும்
உயிரள வாயதன் வடிவொழித் திருவயின்
பெயரொடும் ஒற்றுமுன் னாய்வரும் உயிர்மெய்

இல. வி. 18. புள்ளி யில்லா எல்லா மெய்யும்
அவ்வொடு முன்னுரு வாகியும் ஏனை
உயிரொடு திரிந்தும் ஏறிய உயிரின்
அளவாய் அதன்உரு அடக்கிமுந் துயிர்த்தல்
உயிர்மெய் என்மனார் உணர்ந்திசி னோரே

தொன். 11. உயிரே மெய்யணைந்து உயிர்மெய் ஆகும்

முத்து. 24. உயிரே மெய்யூர்ந்து உயிர்மெய் ஆகும்

சுவாமி.எழு. 9. ஆயுமொற் றெல்லாமுமப் பான்முன்னுருவா யுயிர்வே
றாகிற்கான் மேற்கீழாம் விலங்குகொ டிரட்டாய்
காயம்வெவ்வே றாகியுயிர் அளவாயவ் வடிவைக்
கரந்துயிர்பின் னாய்த்தாமுந் துயிர்த்தலுயிர்
மெய்யாம்

## நூற்பா, 19, 20, 21

வீர. 1. பதினெட்டு மெய்...இடையா முறிந்தன யம்முதல் ஆறும், ஙஞண நமன என்று செறிந்தன மெல் லினம், செப்பாத வல்லினம்

நேமி. 2. வன்மை மென்மை யிடைமையாம்

நன். 68. வல்லினம் கசட தபற எனவாறே
69. மெல்லினம் ஙஞண நமன எனவாறே
70. இடையினம் யால வழள எனவாறே

இல. வி. 7. கசட தபற வல்லெழுத்து
மெல்லெழுத்து ஙஞண நமன
இடையெழுத் துணரின் யரல வழள

தொன். 9. வலி கசட தபற மெலி ஙஞண நமன
இடை யரல வழள எனமூ வினமே

முத்து. 14. அவற்றுள்,
வல்லெழுத் தென்மனார் கசட தபற
16. மெல்லெழுத் தென்மனார் ஙஞண நமன
18. இடையெழுத் தென்மனார் யரல வழள

சுவாமி. எழு. 4. கசட தபற வலி, மெலி ஙஞண நமன
இடை யரல வழள

## நூற்பா 22, 30

வீர. 4. மெய்கள், சாயா மயக்கம் தம்முனர்ப் பிறவொடு
தாமும் வந்து
வீயாத ஈரொற்று மூவொற்றுடனிலை வேண்டுவரே

நன். 110. கசதப வொழித்த ஈரேழன் கூட்டம்
மெய்ம்மயக் குடனிலை ரழவொழித் தீரெட்டு
ஆகும்இவ் விருபால் மயக்கும் மொழியிடை
மேவும் உயிர்மெய் மயக்கள வின்றே
111. ஙம்முன் கவ்வாம் வம்முன் யவ்வே
112. ஞநமுன் தம்மினம் யகரமொ டாகும்
நன். 113. டறமுன் கசப மெய்யுடன் மயங்கும்
114. ணனமுன் இனம்கச ஞபமய வவ்வரும்
115. மம்முன் பயவ மயங்கும் என்ப
116. யரழ முன்னர் மொழிமுதல் மெய்வரும்
117. லளமுன் கசப வயவொன் றும்மே
118. ரழவல்லன தம்முற்றாம் உடனிலையா
120. லளமெய் திரிந்த னணமுன் மகாரம்
நைந்தீ ரொற்றாம் செய்யு ளுள்ளே
இல. வி. 31. கசதப ஒழித்த ஈரேழன் கூட்டம்
மெய்ம்மயக் குடனிலை ரழவொழித் தீரெட்டு
ஆகும் உயுர்மெய் மயக்கள வின்றவை
தேருங் காலை மொழியிடைச் சிவணும்
32. ஙம்மும் கவ்வும் வம்முன் யவ்வும்
ஞநமுன் இனமும் யகரமும் டறமுன்
கசபவும் ணனமுன் இனமும் கசஞப
மயவவும் மம்முன் பயவவும் யரழமுன்
மொழிமுதல் மெய்யும் லளமுன் கசப
வயவும் நின்று மயங்கும் என்ப
33. யரழ ஒற்றின்முன் கசதப ஙஞநம
ஈரொற் றாம்ரழத் தனிக்குறில் அணையா
34. லளமெய் திரிந்த னணவொடு மகாரம்
ஈரொற் றாகும் செய்யு ளுள்ளே
முத்து. 65. வேற்றுநிலை கசதப வல்லின மெய்பதி
னான்கு மென்மனார் நற்றமிழ் வல்லோர்
67. ஙகாரை முன்னர்க் ககாரம் மயங்கும்
68. வருஞ்சய ஏகாரமுன் மருவி யென்ப
69. கசப டகரமுற் கலந்து மயங்கும்
70. ணனமுன் இனங்கச ஞபமய வவ்வரும்
71. யகரமுந் தகரமும் நகரமுன் ஆகும்
72. மம்முன் பயவ மயங்கும் என்ப

73. யரழ முன்னர் மொழிமுதல் மெய்வரும்
74. லளமுனர்க் கசப வயவரு மென்ப
75. வகாரை முன்னர் யகாரை மயங்கும்
76. கசப றகாரைமுற் கலக்கும் என்ப
78. ரழ வல்லன வுடனிலை யெனமொழிப
79. உயிர்மெய் மயக்கிற் கோரள வின்றே
80. லளமெய் திரிந்த னணமுன் மகாரம்
நைந்தீ ரொற்றாம் செய்யு ளுள்ளே

சுவாமி. எழு. 12

உயிர்மயக்கு மெய்மயக்கொற் றுயிர்மயக்கொன் றொருமூன்
றொருமொழியிற் றொடர்மொழியி னிடைமயங்கும் முயிர்முன்
வியனுயிர்விட் டிசைத்ததொடர்ச் சொலினாமெய் மயக்கம்
வேற்றுநிலை யுடனிலையென் றிருவகைத்தா மவற்றுள்
மயலிலுட னிலைதமிற்றாம் ரழவலவீ ரெட்டு
மயங்குநஙத் தனிச்சொல்லுறா கசதபநீத் தீரேழ்
இயல்பின்மெய் யொடுமயங்கல் வேற்றுநிலை மயக்காம்
ஈண்டினியொற் றுயிர்மயக்க மவற்றொடவை மயக்கே.

13. மயங்குமேன்முன் னர்வவ்வின் மடறமுன் கசப
வரும்னணமுன் கபமவரும் லளமுன்வரும் பகவ
தயங்குயர ழமுன்கபம வதநவரும் லம்முன்
சவுமம்முன் வவுமயங்கு மிருசொலினும் யரழ
வயின்சஞயவு னணமுன்வச ஞவும்ளம்முன் சவ்வும்
வலிஙயவில் பத்தின்முன்னர் யவுந்தொடர்ச்சொலிடையா
முயர்ந்தயர ழமுன்கபம தநசஞங வீரொற்
றுறும் ரழவும் யவின்ஙவ்வும் தனிக்குறிலு றாவே.

## நூற்பா 31

வீர. 3. அ இ உ சுட்டாம்
நன். 66. அ இ உம்முதற் றனிவரிற் சுட்டே
இல. வி. 6. அ இ உ இவை மொழிமுதல்வரிற் சுட்டு
முத்து. 26. அ இ உச்சுட் டாமென மொழிப
சுவாமி. எழு. 3. அ இ உத்தருசுட்டு

## நூற்பா 32

வீர. 4. எயா எச்சொல்முன் வினா.
நன். 67. எயா முதலும் ஆ ஓ ஈற்றும்
ஏ இரு வழியும் வினாவா கும்மே.

இல. வி. 6. எயா முதலும் ஆ ஓ இறுதியும்
ஏஇரு வழியும் வினாவென வழங்கும் என்ப

முத்து. 27. எயா வினாவென் றிசைக்கப் படுமே.

சுவாமி. எழு. 3. ஆ ஓ ஈற்று எயா முதல் ஏஇருபாற் சார வினா

## நூற்பா 33

நன். 101 ஆவியும் ஒற்றும் அளவிறந் திசைத்தலும்
மேவும் இசைவிளி பண்டமாற் றாதியின்

இல. வி. 25. ஆவியும் ஒற்றும் அளவிறந் திசைத்தலும்
மேவும் இசைவிளி பண்டமாற் றாதியின்

முத்து. 105. விற்கை புலம்பிசை விளியினும் மிகுமே

சுவாமி. எழு. 10. பண்டமாற்று விளியிசை குறிப்பு மிகலும்

## பயன்படுத்தப் பெற்ற நூல்கள்

1. தொல்சாப்பியம்—எழுத்ததிகாரம்—இளம்பூரணம்
சென்னை, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு
எண் 800 முதற்பதிப்பு. 1955

2. தொல்காப்பியம்—எழுத்ததிகாரம்—நச்சினார்க்கினியம்
சென்னை, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு
எண் 17. ஆறாவது பதிப்பு 1972

3. தொல்காப்பிய எழுத்ததிகார ஆராய்ச்சி
வே. வேங்கடராசுலு ரெட்டியார்,
சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு 1944.

4. தொல்காப்பியம்—குறிப்புரையுடன்
டாக்டர். பி. சா. சுப்பிரமணிய சாஸ்திரி
திருவையாறு, பி. சு. சாமிநாதன் பதிப்பு. 1937

5. தொல்காப்பியம்-நன்னூல்-எழுத்ததிகாரம்
க. வெள்ளை வாரணன்
அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடு 1962

## ஒப்புநோக்கப்பட்ட பதிப்புகள்

1. தொல்காப்பிய எழுத்ததிகாரம்-இளம்பூரணம்

1. கன்னியப்பமுதலியார் பதிப்பு 1868
2. வ. உ. சிதம்பரம்பிள்ளை பதிப்பு 1928

3. திரு-அடிகளாசிரியர் பதிப்பு
கரந்தைப் புலவர் கல்லூரி, தஞ்சாவூர் 1969
4. திருப்பனந்தாள், செந்தமிழ்க் கல்லூரி முதல்வர்
கு. சுந்தரமூர்த்தி பதிப்பு. 1969.

2. தொல்காப்பியம்-எழுத்ததிகாரம்-நச்சினார்க்கினியம்
1. மழவை மகாலிங்க அய்யர் ஆய்ந்தது, திருவண்ணாமலை, கல்விக்கடல் பதிப்பு சகாப்தம் 1775 பிலவங்க ஆவணி.
2. கனகசுந்தரம் பிள்ளை பதிப்பு. சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழக வெளியீடு 1933.
3. சி. கணேசய்யர் பதிப்பு, இலங்கை, சுன்னாகம் திருமகள் அழுத்தகம் வெளியீடு 1952
4. இராம-கோவிந்தசாமி பிள்ளை பதிப்பு. தஞ்சைச் சரசுவதிமகால் வெளியீடு 1967

## நூன்மரபுந் தொடர்பாகக் கிடைக்கப்பெற்ற கட்டுரைகள் ஆய்வாளர்க்குப் பயன்படுவன

1. உகரச்சுட்டு
டாக்டர். மோ. இசரயேல்
இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றக் கருத்தரங்கு (11) ஆய்வுக் கோவை, பகுதி, 2 1979

2. உயிர்மெய்
கு. பூங்காவனம்
இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், கருத்தரங்கு (12) ஆய்வுக் கோவை, பகுதி 2. 1980

3. உயிர்மெய்
சுபாஷ்சந்திரபோஸ்
இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், கருத்தரங்கு (12) ஆய்வுக் கோவை, பகுதி 2. 1980

4. உயிர்மெய் எழுத்துகள்-வேற்றுமை நயமும் ஒற்றுமை நயமும்.
நா. இராசகோபாலன்
இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், கருத்தரங்கு (6) ஆய்வுக் கோவை, பகுதி 2. 1974

5. உயிரும் புள்ளியும்
டாக்டர். வை. இரத்தின சபாபதி
தொல்காப்பிய மொழியியல், அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடு, அண்ணாமலை நகர் 1972

6. எழுத்துகளின் மாத்திரை
டாக்டர். வை. இரத்தினசபாபதி
இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றக் கருத்தரங்கு (1) 1969

7. எழுத்துமுறை
டாக்டர், வ. சுப. மாணிக்கம்
வ, சுப்பையாபிள்ளை பவழவிழாமலர், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை 1973.

8. கருவியும் செய்கையும்
ஆ. சிவலிங்கனார்
இளம்பூரணர் எழுத்துரை - மாணிக்கம் பதிப்பகம், புரசவாக்கம் சென்னை. 1967.

9. சுட்டு விளக்கம்.
ஞா. தேவநேயப் பாவாணர் 1943 கிடைக்கும் இடம்: சைவசிந்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை

10. தமிழ் அமைப்புற்ற வரலாறு-நால்வகைச்சுட்டு
நல்லூர், சுவாமி ஞானப் பிரகாசர் இலங்கை, சுன்னாகம், வியாபார ஐக்ய சங்கத்தாரின் பதிப்பு. 1927!

11. தமிழ் எழுத்து வைப்புமுறை-சமஸ்கிருதத் தழுவலா?
டாக்டர். க. ப. அறவாணன்
இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றக் கருத்தரங்கு (4) ஆய்வுக்கோவை, பகுதி 2. 1972

12. தொல்காப்பியர்-பவணந்தியார் எழுத்து வைப்புமுறை
ஆ. அருளப்பன்
டாக்டர் சிதம்பரநாத செட்டியார் மணிவிழாமலர் 1967

13. நச்சினார்க்கினியரும் மெய்ம்மயக்கமும்
டாக்டர். மா. இளையபெருமாள்
'செந்தமிழ்' தொகுதி 56: 5. 1960-61

14. நூல்மரபு
பகீரதன்
சத்யகங்கை (1-8-80 இதழ்)
42, ஏழாவது குறுக்குத்தெரு, சென்னை 30




15. நூல்மரபு
எம். எஸ். கேசவன்
Journal of the Sri Venkateswara University Oriental Institute, Tirupathi 1953.

# சொல்லகராதி

(எண் — பக்க எண்)

# நூற்பா முதற்குறிப்பகராதி

(எண்—பக்க எண்)

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 8 | 22 | அகமுதல் | அகரமுதல் |
| 15 | 19 | இடக்கை | கிடக்கை |
| 16 | 35 | ஒன்றென்பார். | ஓன்றென்பார் |
| 20 | 6 | யா.வி.டி. | யா. வி. 4 |
| 25 | 23 | றுெறென்க | றென்க |
| 27 | 9 | வாகு | வரகு |
| 27 | 29 | கண் இரண்டு | கண் வைத்த இரண்டு |
| 30 | 14 | மார்பின் வலியால் | மார்பின்வளியால் |
| 41 | 30 | ஸாப்தமணி | சப்தமணி |
| 46 | 20 | ஆயுதம் | ஆய்தம் |
| 50 | 14 | உபத்மானியம் | உபத்மானீயம் |
| 63 | 22 | வேண்டின். | வேண்டின் |
| 87 | 14 | ப ப எனக் | ப ப்எனக் : |
| 87 | 15 | கப்பி கப்பி கபபி (கம்பி) | கப்பி கப்பீ (கம்பி) |
| 92 | 21 | எ ஒ என | எ் ஒ் என |
| 95 | 26 | ஔகாரக் | ஓகாரக் |
| 98 | 23 | க ங என்ற | க.ங.என்ற |
| 105 | 21 | மெய்களும் | மெய்களுள் |
| 112 | 4 | கற்கிறார் | கற்சிறார் |
| 112 | 8 | (எழுத்60) | (எழுத்60) என்ற |
| 112 | 27 | யாவும் | யவவும் |
| 119 | 34 | பீர்கடாயத | சாகடராயத |
| 122 | 10 | பிரிந்து | பிரித்து |
| 123 | 9 | விழி | விதி |
| 124 | 27 | தனிமெய்யோடு | தன்மெய்யோடு |
| 142 | 5 | யாஎவன் | யாவென் |
| 144 | 23 | சூத்திரம் இன்மையின் | சூத்திரம் இன்மையின். |
| 152 | 17 | ( ) | (எழு.133) |
| 154 | 16 | கலறீது | கல்றீது |